உ

சிவமயம்



# சைவ சாஸ்திர பரிபாலனம்

(சமய சம்பந்தமான மாத வெளியீடு)

தொகுதி க-பகுதி க-ரு

(பிரமாதி௵ ஆவணி முதல் தைமாத வரை)

(இரண்டாம் பதிப்பு)

பத்திராதிபர்

யாழ்ப்பாணம் அச்சுவேலி

**ச. குமாரசுவாமிக் குருக்கள்**



1940

வருட சந்தா ரூ. 2—0—0



உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்

# சைவசாஸ்திர பரிபாலனம்

## விநாயகர் வடிவம்

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

பிரணவமாவது சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பீடமாயும், மற்றைத் தேவர்களுக்கெல்லாம் பிறப்பிடமாயும், எல்லா மந்திரங்களுக்கும் வேதங்களுக்கும் மூலமாயும் உள்ளது. பிரணவம் மூலமொழி எனவும், தனிமொழி எனவும், ஓங்காரம் எனவும், குடிலை எனவும் படும். இதன் வடிவமே விநாயகக்கடவுள். விநாயகர் பிரணவ வடிவின ராதலை அவரது திருமுக முணர்த்தும். அதனையே யானை முகமென்று பெரியோர் கூறுவர்.

பிரணவத்தின் வரிவடிவை முதற்கண் அறிவது மரபாம். முதலாம் இரண்டாம் உறுப்புக்கள் நக்ஷத்திர வடிவு தண்டவடிவுகளாக அமையப்பெற்றதுபிரணவம் என்று காமிகாகமம் கூறுகின்றது. ஆகையால், அவ்விரண்டுறுப்பும் கலந்த வடிவம் ஊமை எழுத்தென்றும், மூலமநு என்றும், பிள்ளையார்சுழி என்றும், மௌநாக்ஷரம் என்றும் சொல்லப்படும். "உ" என்னுமெழுத்து நாதவிந்துக்களின் வரிவடிவாம். இது

ஓங்காரவாச்சியராகிய விநாயகரது துதிக்கைபோலாம். இது பற்றியே கணபதியை முதலில் வழிபடும் மரபை உலகம் கைக்கொண்டு அநுட்டித்துவருகின்றது. இதனையே சிவபெருமான் அவருக்கு அருளிச்செய்தாரென்று உண்மைநூல்கள் கூறும்.

விநாயகரும் சிவமும் சத்தியும் கந்தரும் பிரணவ சொரூபியாவர். சிவபெருமானை ஓங்காரப் பொருளென்று வேதம் கூறும். திருநாவுக்கரசுநாயனாரும் "ஓங்காரத்துட் பொருளானை" எனத் திருவாய்மலர்ந்துள்ளார். சிவத்தோடு அபேதமாய் விளங்கும் விநாயகரது தாயை 'உம' என்று வேதம் கூறி 'உமாஸஹாயம்' என்று சிவத்தைத் துதிக்கும். அ—உ—ம் என்னும் பிரணவம் உ—ம்—அ எனத் திரிந்து விளங்கும். ஷண்முகக்கடவுள் பிரணவ வடிவினராதலை அவரது ஆறு திருமுகங்களுள் ஒன்று உணர்த்தும். அது,

> தாமரைக்கணான் முதலிய பண்ணவர் தமக்கு
> மேமுறப்படு மறைக்கெலா மாதிபெற் றியலு
> மோமெனப்படுங் குடிலையே யொப்பிலா முருகன்
> மாமுகத்துளொன் றாமவன் றன்மையார் வகுப்பார்

என வரும் கந்தபுராணச் செய்யுளால் தெளியப்படும். இதனால் விநாயகரே முதலில் வழிபடற்பாலர் என்பதும், கணபதியும் சிவமும் சத்தியும் கந்தரும் ஒருவரே என்பதும் சைவ சித்தாந்தத் துணிபாதல் உணர்த்தப்பட்டன.

---

# பத்திரிகையின் அவசியம்

[கண்டனூர் சிவஸ்ரீ அரு. இராமநாதக்குருக்களவர்கள் எழுதியது.]

ஒரு தேசமோ, சமயமோ, ஜாதியோ முன்னேறுவதற்கு ஆன்றோர்களாற் கண்ட துறைகளில் முக்கியமானவை கல்விச் சாலை தாபித்தல், பிரசங்கம்செய்வித்தல், பத்திரிகைப்பிரசாரம் செய்தல் முதலியன என்பது யாவருக்குமொப்ப முடிந்ததோர் உண்மையே. இக்காலம் தேசமுன்னேற்றமானது, பல திறப் பட்ட மனக்கொள்கையுடைய பலரால் பலவிதமாகப் பாவிக் கப்பட்டு, ஜாதிசமயமென்கிற வரம்பை யழித்துக்கொண்டு, சீர் பெற்றோ சீர்கெட்டோ சென்றுகொண்டிருக்கிறது. அவ் விஷயம் இப்போது பேசுந் தரத்ததன்று. சமயமும் ஜாதியும், இல்லமும் மனிதனும் போன்ற சம்பந்தமுடையவை. இதிற் சிலர் ஜாதியும் சமயமும் வேண்டுமென்றும், மற்றொரு சாரார் இரண்டுமே வேண்டாமென்றும், வேறு சிலர் ஜாதி வேண்டாம் சமயமே வேண்டுமென்றும் கக்ஷி சேர்க்கின்றார்கள்.

இம்மூன்று கக்ஷிகளில், ஜாதி சமயம்வேண்டாமென்கின்ற இரண்டாவதான சுயமரியாதைக்காரர்களென்கிற பிரச்சன்ன லோகாயத மதத்தவர்களைப்பற்றிப் பின்னரெழுதுவாம்.

மூன்றாவதான ஜாதி வேண்டாம், சமயம் வேண்டும், சாஸ்திரம் தமக்கிஷ்டமானது வேண்டும், மற்றவை வேண்டா மென்கிற சீர்திருத்தக் கக்ஷிக்காரர்களின் விஷயந்தான் குறிப்பிட வேண்டியிருக்கிறது.

ஒரு ஜாதியில் வந்த ஒருவன் எந்த மதத்திலும் பிரவே சிக்க முடியும். ஆகவே, ஜாதியாகிய மனிதனுக்கு இடங் கொடுக்கும் சமயம் இல்லமெனப்பட்டது. எந்த மதத்தையும் தள்ளாது சோபானமுறையாகக் கொண்ட சைவசமய மகோந் நத மகாமந்திரமானது, சமயகிருகப்பிரவேசத்தையே சமய தீக்ஷையென்று கொண்டது. ஆகவே, ஜாதியும் சமயமும் வேண்டற்பாலதே. பிறக்கும்போதே ஜாதியொழியாது. ஆன்மாவானது வினைப்போகத்தின்பொருட்டு எடுக்கப்பட்ட

சரீரமாகையால் அதற்கும் சரீரத்திற்கும் யாதும் சம்பந்தம் இன்றாயினும், உண்மையில் சரீரமே ஜாதிசம்பந்தமுடையதாதலின் ஆன்மாவிற்கு ஜாதி கிடையாது. ஆனால், ஆன்மாவானது சரீர சம்பந்தம் பெற்றவுடன் அதற்கு ஜாதியானது காயின் தோல் போலேற்படவே, ஜாதி விலக்கப்படவில்லை. காயானது கனியானால், புளியம்பழத்தின் ஓடுபோல ஜாதி தன்னால் ஒழிந்துவிடும். அப்பொழுது ஆன்மாவிற்கு வெளிநோக்கேதுமில்லா தொழியும். இதற்குப் பத்திரிகையோ பிரசாரமோ வேண்டவே வேண்டாம். பழத்தின் தோல்போல ஜாதி தானே அகலவேண்டுமேயன்றி, பிஞ்சிலோ காயிலோ தோல் வேண்டாமென்றால் அதுவும் விட்டகலாது. நாம் போக்க முயல்வதும் பிஞ்சின் தோல் நீக்கியவாறு தனக்கும் பிறர்க்கும் உபயோகமின்றி ஒழிந்துவிடும். மௌனசுவாமிகளிருந்தார். இன்னும் எத்தனையோ மகான்கள் தோன்றி மறைந்திருக்கின்றார்கள். அந்தப் பரமஞானக்கனிகளுக்குச் சாதியொழிந்தது; சரீரசம்பந்தமான உபாதி யாதுங் கிடையாது.

மௌனஸ்வாமிகளுக்கு ஸ்நானம், ஆடை, ஆகாரம் இவைகள் யாராவது விரும்பி எப்போதாவது செய்வித்தாலுண்டு. அப்போதும் இல்லாதொழியினு மொழியும். அன்றை இஸ்லாம் மதத்தவர்கள் கட்டியடித்துச் சுட்டிழுத்து ஆற்றிலுந் தள்ளினார்கள். அப்போதும் சரீரோபாதி உண்டாகவில்லை. ஏன்? அவரின் மனமொன்றிலொடுங்கியது. காணவேண்டியதைக் கண்டார். சரீராபிமானம் (உணர்ச்சி) ஒழிந்தது. பிறகு சின்னாளிற் கன்மமொழிந்ததும் சரீரங் கழன்றது.

சாஸ்திரங்களிற் கூறப்பட்ட பிரவர்த்திமார்க்கம், நிவிர்த்தி மார்க்கம் என்கிற இரண்டில், பிரவர்த்தியிலிருந்து நிவிர்த்தி பெற்றவர்க்கே ஜாதி வேண்டாமெனப்படும். நமது சைவ சமயத்தில் இந்நிலையுள்ளவர்களை ஞானவதிதீக்ஷா நிர்வாணிகளாகக் கூறப்படுகிறது.

அஃதன்றி என் மனை, எனது மனைவி, என் புதல்வி, என் மானம், எனது உடல் என்கிற பிரவர்த்திக்காரர்களாகிய முற்கூறப்பட்ட மூன்றாவதான சீர்திருத்தக்கக்ஷியினர், ஜாதி வேண்டாமென்றால் தோலில்லாப் புளியம்பிஞ்சு போன்றவர்

களேயாவர். அப்போது அவர்களது உபயோகம் உலகத்திற்கோ சமயத்திற்கோ எப்படியாம் என்பதைச் சொல்லவும் எழுதவும் வேண்டாமன்றோ? நம்மை ஈன்ற தாய், நாம் கொண்ட மனைவி, நாம் பெற்ற புதல்வி என்கிற முறையினாலோ சீலா, காமா, பாலா என்பதுபோன்ற பெயரினாலோ பேச்சளவிலுள்ள அக்ஷரவித்தியாசந் தவிர வேறென்ன பேதங் கண்டார்கள்? இன்று மனிதப்பகுதியில் வித்யாசங் காணவில்லை. ஜாதி வேண்டாமென்கிறவர்கள், நாளை ஆண் பெண் என்ற விகுதிகளில் வித்தியாசமில்லை; முறை வேண்டாமென்றால் என்னாகும்? மேற்கூறப்பட்ட மூன்றாவதான சீர்திருத்தக் கக்ஷிக்காரர்களுக்கும், முற்கூறப்பட்ட இரண்டாவதான பிரச்சன்ன லோகாயத மதத்தவர்களான சுயமரியாதைக்காரர்கட்கும் பேச்சளவில் உள்ள ஆஸ்திக நாஸ்திகம் என்கிற வித்யாசந் தவிர வேறொன்றும் இன்றாம்.

பிரவர்த்தி சாஸ்திரபரர்களும், கிரியாவதிதீக்ஷையின்பாற்பட்ட தீக்ஷாத்திரயத்தவர்களும், கிரியையிற் சரியா கிரியாயோக ஞானத்தவர்களும், வைதிக சுத்த சைவர்களும், ஆஸ்திகர்களும், ஜாதிசமயம் வேண்டுமென்கிற முற்கூறப்பட்ட மூன்று கக்ஷிகளில் முதற்றரத்தவர்களுமான நமது சமூகம்முன்னேற வேண்டிய வழிகளில் முக்கியமாக முற்கூறப்பட்ட கல்விப்பிரசாரம், பத்திரிகை என்பவைகளில் முதன்மையானது கல்வி யபிவிருத்தி செய்வதேயாகும். தகுந்தமுறையில் கல்வி பயின்ற நல்லொழுக்கமுள்ள ஆசானையமர்த்தி, நமது மக்களை அவர்களிடம் ஒப்பித்துக் கல்விபயின்றபின் அவர்களால் நமது சமூகம் முன்னேற்றமடையும்படி செய்யவோ, இன்னும் நமது சமூக மக்களை யெல்லாம் மிகவும் அறிவாளிகளாகவே செய்துவிடவுமோ கூடுமாயினும், அது நாளையே ஆகக்கூடியதன்று. அது வருங்காலத்திற்கே உபயோகப்படும். அதுவும் பெருந் தனிகர்களாலேயே மட்டும் ஆகக்கூடியதாதலால், இக்காலம் வேண்டிய அளவு பலன் கிடைப்பதற்கு அது மட்டிலும் போதாது.

பிரசங்கம் செய்து பிரசாரம் செய்தல் இக்காலம் ஓரளவில் பயன் தருமானாலும் அது வருங்காலத்திற்கு உபயோகப்

படாது. செவிப்புலனுக்கு விஷயமாகக்கூடிய பிரசங்கம் நேரில் கேட்பவர்கே பலந் தருமன்றி பலவிடங்களிலும் தீவுகளிலும் சிதறுண்டு கிடக்கின்ற நம்மவர்கட்குப் பிரயோசனப் படமாட்டாது.

பத்திரிகைப்பிரசாரமோ ஷை பிரசங்களைத் தன்னுட் கொண்டும், வெவ்வேறிடங்களிலுள்ள நம்மவர்களின் அபிப்பிராயத்தைத் திரட்டிக்கொண்டும், நம்மவர்கள் இருக்குமிடமெல்லாம் குறித்த காலத்திற் சென்று கரபூஷணமாயிருந்து சந்தேகம் வந்தகாலை ஒரு முறைக்குப் பன்முறை பார்த்துத் தெளிந்துகொள்ள ஏதுவாகவும், ஆளப்படுங் கக்ஷியினரால் செய்யப்படும் நற்செயல்களைத் தெளிந்துகொள்ளவும் தெரிவிக்கவும், மதசத்துருக்களால் நமக்கு வெட்டப்படும் படுகுழியின் விபரங்களையும் சதியாலோசனை முதலியவைகளையும் உளவாலோ அனுமானத்தாலோ தெரிந்துகொண்டவர்கள் ஒருவர்க்கொருவர் தெரிவித்துத் தப்புவதற்குப் பலர் கண்ட வெவ்வேறு வழிகளை ஒருவர்க்கொருவர் நேரில் பேசிக்கொள்வது போலத் தெரிந்துகொள்ளவும், பிறர் நம்மேற் பொய்ப்பிரசாரம் செய்து கூறும் அவதூறுகளை நிவர்த்தித்து, நம் சமூகத்தவர்களைச் சீர்திருத்திக்கொள்ளவும், பதிப்பிற்கு வராத நூல்களைச் சிறுகச் சிறுகவாவது வெளிப்படுத்தவும், இன்னும் இவை போன்றவைகளைச் சாதித்துக்கொள்ளவும் இக்காலம் பத்திரிகைப் பிரசாரமே மிக முக்கியமாம்.

மதுரை ஆலயப்பிரவேசம் நடந்த மாதிரியையும் சந்தர்ப்பத்தையும் யோசிக்கின், நமது சமூகத்தவர்கட்குத் தமக்கு என்றொரு பத்திரிகையில்லாக் குறையினால் அதிசீக்கிரம் அது வேண்டுமென்கின்ற அவாவானது முழுவேகத்துடன் தோன்றியிருக்கிறதென்பது மறுக்கப்படாததொன்றே. ஆகையால், அதை நான் மிகைப்படுத்திக் கூறவேண்டுவதில்லை.

நமது வைதிக சைவ சமயத்திற்குச் **சைவசாஸ்திர பரிபாலனம்** என்கிற பாலன் யாழ்ப்பாணம் அச்சுவேலி சிவஸ்ரீ **ச. குமாரசுவாமிக் குருக்கள்** என்பவர்பால் தோன்றியுள்ளான். அவன் பாலாரிஷ்டம் முதலிய நோய்வாய்ப்படாமல் பெரிய மனிதனாகவேண்டியது சந்தாதாரரைப் பொறுத்ததே. அவன்

வைதிக சைவ சமய பாலனைதால் திரு-பாலனுவாயர் போலப் போதாமிருதமுண்டு தீரபுருஷனுகவே வரப்போகிருன். அவர் கூறியவாறு அடியார்க்கு எல்லாம் நல்லனவே ஆகையால், பாலாரிஷ்டம் போன்ற பிணியும் அணுகாது எல்லாத் தோஷங்களேயுங் களேந்தெறியும் மந்திரம் தந்திரம் எல்லாம் இதுவே என்று ஞானசீலபாலனல் நமக்குத் தந்தருளிய திருநீறும் திருநீற்றுப்பதிகமும் அவுடதமாக ஆயுதமாக ஐஸ்வரியமாக இருக்கும்போது, மகாசங்கார கர்த்தாவாகிய திரிபுராரியால் தந்தருளப்பட்ட உருத்திராக்க கவசமிருக்கும்போது, நீலகண்டனை தயாளுவின் கிருபாநோக்கம் இருக்கும்போது, சர்வேஸ்வரனை மகாதேவனிடத்தில் நமது குறைகளேத் தெரியப்படுத்தி உஜ்ஜீவிக்கச்செய்யும் கிருபாநோக்கத்துடன் நமது அன்னே மீனுக்ஷி வாமபாகம் பெற்றிருக்கும்போது யாதுங் குறைவில்லே. ஆயினும், சந்தாதாரர்கள் முன்பணம் அனுப்பியும், விஷயதானம் செய்தும், தம் அளவிலன்றித் தமக்கு வேண்டிய சுற்றத்தார் உற்ருர் எல்லாருக்குஞ் சொல்லி வாங்கும்படி செய்தும் ஆசிரியருக்கு உதவியளித்தால் மாதமொரு வயதாக வளரும் பாலன் வாரமொரு வயதாகவும் ஏன் தினமொரு வயதாகவுங்கூட வளருவான். நமது பாலனின் மழலேச் சொற்கேட்ட அளவில் நின்றுவிடாமல் அவனது வீரச்சொற்களேக்கேட்க நாம் துரிதப்படவேண்டும். இன்று பத்திரிகைப் பாலனுய் இருப்பவன் நாளே பத்திரிகை வீரனுகவோ இராஜனுகவோ ஆகவேண்டும். அப்பொழுதுதான் நமது நோக்கம் பலன் பெற்றதாக ஆகும்.

சுபம்.

இதன் உள்ளுறையின் சில விரிவுகள் பின் வரும்.

---

# ஆகமம்

[சேலம் சிவஸ்ரீ கி. சிவசுப்ரமண்யக் குருக்களவர்கள் எழுதியது]

ஆகமம் என்பது சைவாகமம், சக்தியாகமம், கௌமார ஆகமம், காணுபத்யாகமம், வைஷ்ணவாகமம் எனப் பலதிறப் பட்டு விளங்குகிறது. சிவபெருமானல் அருளப்பெற்றதாலும், சிவபிரானை வழிபடு முறைபற்றி விவரித்துக் கூறுதலானும் சைவாகமம் எனப் பெயர் பெற்று நிலவுகிறது. இது தந்த்ரம் சித்தாந்தம், மந்த்ரம் எனவும் பெயர்பெற்று விளங்குகிறது. வேதம் பொதுநூலெனவும், ஆகமம் சிறப்புநூலெனவும் கூறுவர் பெரியோர். இஃது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பகுதிகளையுடையது.

## சரியை

இதில் உலகத்தோற்றமும், பிரபஞ்சலக்ஷணமும், ஜீவ பேத விபரங்களும், வாழ்க்கை சுகாதாரம் நல்லொழுக்கம் இல்லறம் துறவறம் வருணம் ஆச்ரமம் இவைகளும், கர்ப்பாதானம் முதலிய பதினறு சடங்குகளும், அந்தியேஷ்டி பித்ருயக்ஞம் முதலிய உத்தரஸம்ஸ்கார விபரங்களும் விவரித்துக் கூறப் பட்டிருக்கின்றன.

## கிரியை

இதில் கிராமம் பட்டினம் நகரம் ராஜானி அமைக்கும் விபரமும், மனைகள் அரண்கள் மாளிகை சாலைகள் மண்டபங்கள் கூடங்கள் கோபுரங்கள் கட்டும்முறையும், பூமிலக்ஷணம், காலலக்ஷணம், பூமிசீர்திருத்தமுறை, சிலாலக்ஷணம், விருக்ஷ லக்ஷணம், இஷ்டிகைசெய்யும் முறை வஸ்துலக்ஷணம் ஆதிய விபரங்களும், ஆலயம் கட்டும் முறை, புதுப்பிக்கும் முறை, அதனைப் பாதுகாக்கும் முறை, ஆலயத்திற்கு வேண்டிய அங்கங்களாகிய நந்தவனம், தடாகம், சோலை, வாவி குளம் முதலியன இயற்றும் முறைகளும், சிவலிங்கலக்ஷணம் விக்ரஹலக்ஷணம் யாகலக்ஷணம் யாக விபரங்களும், நித்ய

பூஜை விபரமும், நைமித்திக மாஸபூஜை பர்வம் ப்ரதோஷம் ஸங்கிரமணம் உபராகம் முதலிய புண்யகால விசேஷ யக்ஞங் கள், நித்யோத்ஸவம் வாரோத்ஸவம் ப்ரம்மோத்ஸவ விசேஷ பேதங்களும், காம்யபூஜை உத்ஸவம் சாந்தி ஸம்புரோக்ஷணம் ப்ராயச்சித்தம் தீக்ஷாலக்ஷணம் தீக்ஷாபேத அநுஷ்டான ஆசாரலக்ஷணம் தீக்ஷா க்ரியாவிதானங்களும் சொல்லப் பட்டிருக்கின்றன.

## யோகம்

இதில் யமம், நியமம், ஆஸநம், ப்ராணாயாமம், ப்ரத்யா ஹாரம், தியானம், தாரணை, ஸமாதி விபரங்களையும், ஷட்சக்ர லக்ஷணம், ஷடத்வ விபரம், ப்ராஸாத விபரம், துவாதசாந் தாதி விதானங்களும் விவரிக்கப்பட்டுள்ளன.

## ஞானம்

இதில் பாபம், புண்யம், இருவினையொப்பு, மலபரி பாகம், சத்திநிபாதம். பதி பசு பாச லக்ஷணம், அக்ஷரபாவனை ஸகுணபாவனை, நிர்க்குண பாசுபத உபாஸநா கிரமம், ஸ்வர்க்கம், நரகம், கைலாஸம், அபரமுக்தி, பரமுக்தி, ஸன்மார்க்கலக்ஷணங்களையும் தெளிவுறக் கூறப்பட்டுள்ளன.

மேலும், இவ்வாகம நூலின்கண் பல இன்றியமையாத உண்மைகளும், ஜ்யோதிஷம் பரதம் ஸங்கீதம் முதலிய சாஸ் திரக் கருத்துகளும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. வேதம் ஆகமம் இரண்டும் முதல் நூல்களாம். *சிட்சை கற்பம், வ்யா கரணம், நிருத்தம், சந்தோவிசிதி, ஜ்யோதிஷம் என்பவை வேதாங்கங்களாம். புராணம், நியாயம், மீமாஞ்சை, மிருதி என்பன வேதத்துக்கு உபாங்கமாகிய நூல்களாம்.

ஆ—க—மம் என்னுஞ் சொல்—ஆன்மாக்கள் மோட்ச மடைய மலநாசம் செய்விப்பது எனப் பொருள் தருகிறது. ஆகவே சைவாகமம் ஒன்றே மும்மலங்களையும் நாசஞ்செய்து மோட்சசித்தியைத் தரத்தக்கதாகலின், கௌணமாகச் சைவாக மத்திற்கே "ஆகமம்" என்னும் பெயர் உரியதாகிறது. இதன் சிறப்பை யுணராது மற்றை நூலுடன் இதனைப் பொருத்தி

யும், மற்றை நூல்களைக் கற்றும் வாணாளை வீணாளாகக் கழிக்கின்றனர்.

**சிவதருமோத்திரம் :—**

அற்பாயுள் நரர்க்கென்றே யமலன் வேத
மாதிதனைத் தொகுத்துரைத்தா னாயா துமிவற்றை
நிற்பாருஞ் சிலர்நில்லாக் குரம்பை தன்னை
நிலையெனவே கருதியவப் பசுநூல் தன்னைக்
கற்பாருஞ் சிலரமலன் கழறும் வாக்கைக்
கருதாதே யவனதடிக் கமலந் தன்னைப்
பொற்பாருங் கருணையினான் மற்றை நூலாற்
பொருந்துதலு மரிதுமலம் போக்க லூனும்.

சிவபெருமானது ஸகளத்திருமேனியாகிய ஸதாசிவமூர்த்தியின் ஈசானமுகத்தில் இருபத்தெட்டு ஆகமங்கள் தோன்றின. இவைகளுள் காமிகாதி பத்து ஆகமங்கள் சிவபேதம் எனவும், விஜயாதி பதினெட்டு ஆகமங்கள் ருத்ரபேதம் எனவும் கூறப்படுகின்றன. இவை காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அஜிதம், தீப்தம், ஸூக்ஷ்மம், ஸஹஸ்ரம், அம்சுமான், சுப்ரபேதம், விஜயம், நிச்வாஸம். ஸ்வாயம்புவம், ஆக்நேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகபிம்பம், ப்ரோத்கீதம், லளிதம், ஸித்தம், ஸந்தானம், ஸர்வோத்தமம், பாரமேச்வரம், கிரணம், வாதுளம் என்பனவாம்.

மேலே கூறப்பட்ட இருபத்தெட்டு ஆகமங்களுள் ஸதாசிவமூர்த்தியின் ஈசானமுகத்தின் வாயிலாகச் சிவ பேதமுடையவர்களாகிய ப்ரணவர், திரிகலர், ஹரர், சுதர், பஸ்மர், விபு, ஸூதீப்தர், கோபதி, அம்பிகை, காரணர், சர்வருத்ரர், ப்ரஜாபதி, சுசிவர், சிவர், அச்சுதர், ஈசுர், ஈசானர், ஹூதாசனர், ஸூக்ஷ்மர், வைச்ரவணர், ப்ரபஞ்ஜனர், காலர், பீமர், தர்மர், அம்பு, அக்ரர், ரவி, தசேசர் விக்நேசுவரர், சசி ஆக **30** பேர்கள் காமிகாதி ஸூப்ர பேதாந்தமான பத்து ஆகமங்களையும்; ருத்ரபேதமுடையவர்களாகிய அநாதிருத்ரர், பரமேசர், தசார்ணர், சைலஜர், நிதநேசர், பிரமா, வ்யோமர், ஹூதாசனர், தேஜசு, ப்ரஜாபதி, ப்ராம்மணேசர், நந்திகேசர்,

சிவர், மஹாதேவர், சர்வாத்மகர், வீரபத்ரர், அநந்தர், ப்ரஹஸ்பதி, ப்ரசாந்தர், ததீசி, சூலி, கவசர், ஆலயேசர், லளிதர், பிந்து, சண்டிகேசர், சிவநிஷ்டர், அசம்வாயர், சோமர், ந்ருஸிம்ஹர், ஸ்ரீதேவி, உசநர், தேவவிபவர், ஸம்வர்த்தகர், சிவர், மஹாகாளர் ஆகிய, முப்பத்தறுவரும் விஜயாதி வாதுளாந்தமாகிய பதினெட்டு ஆகமங்களையும் கேட்டு உணர்ந்தருளினர். ஆக இவ்விருபத்தெட்டு ஆகமங்களையும் கேட்டுத் தெளிந்துரைத்தவர்கள் அறுபத்தறுவர்.

**திருமந்திரம்**

அஞ்சன மேனி யரிவையோர் பாகத்தன்
அஞ்சோ டிருபத்து மூன்றுள வாகமம்
அஞ்சலி கூப்பி யறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே.

இதன் உபாகமங்கள் இருநூற்றெட்டு. இவைகளின் பெயர் முதலிய விபரங்களைக் காமிகாகமத்தில் விரிவாகக் காணலாம்.

கர்ஷணம், பிரதிஷ்டை, உத்ஸவம், ப்ராயச்சித்தம் முதலியவைகளை மூலாகமங்களினாலேயே செய்தல்வேண்டும். காமிக ஆகமத்தினால் ஒரு க்ரியை ஆரம்பிக்கப்படுமானால் அதனாலேயே (காமிகஆகமவிதிப்படியே) அக்கிரியையை முடித்தல் வேண்டும்; வேறு ஆகமவிதியை எடுத்துக்கொள்ளலாகாது. காமிகத்தில் கூறாத விஷயங்கள் ஏனைய மூலாகமங்களிலிருந்தால் அவைகளைக் கொண்டு அக்கிரியையைப் பூர்த்தி செய்யலாம். அது தந்திர ஸங்கிரதோஷமாகாது. இவ்விதமே 28 ஆகமங்களைக்கொண்டும் க்ரியை முதலியவைகளை அநுஷ்டிக்கத்தக்கது.

இவ்வாகமங்களை ஓதுதற்கும், ஓதுவித்தற்கும், இதன் வண்ணம் ஆன்மார்த்தம், பரார்த்தம் முதலிய பூஜை, சிவயாகம், சிவதீக்ஷை முதலியன புரிவதற்கும், சிவபெருமான் திருமுகத்துதித்த ஆதிசைவர்களாகிய சிவத்விஜர்களே அதிகாரிகளாவர். ஏனையோர் ஆன்மார்த்த பூஜைக்கு மட்டும் உரியராவர்.

எல்லாம் வல்ல சிவபெருமான் ஆன்மகோடிகள் உய்யும் வண்ணம் பெருங்கருணைகொண்டு

காரணாகமம்

ஸர்வயஜ்ஞ தபோதாந தீர்த்தக்ஷேத்ரஷு யத் பலம்
தத் பலம் கோடி குணிதம் ஸிவஜ்ஞாநாத் பலம் ॥

ஸமஸ்தமான யாகம், தபஸ், தானம், தீர்த்தாடனம், க்ஷேத்ரவாசம் முதலியன செய்வதாற் கிடைக்கும் பலனைக் காட்டிலும், கோடி மடங்கு அதிகம் பலனைத் தரவல்ல உத்தமமான சிவபூஜாவிதியை அருளியிருப்பதால் இவ்வாகமசாஸ்திரமே எல்லா நூல்களிலும் மிக மேலாக விளங்குகிறது.

இதனுண்மையை யாவரும் அறிந்து சைவசமய சாரத்தைக் கடைப்பிடித்து உய்யும்வண்ணம் ஆகமசாஸ்திரத்தைப் பரமதயாளுவாகிய சிவயோகியாம் திருமூலர் தமிழில் திருமந்திர ரூபமாக அருளிச்செய்தனர். இதுவே பத்தாந் திருமுறை எனப்படும்.

நந்தி யிணையடி நான்றலை மேற்கொண்டு
புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை யரனடி நாடொறுஞ்
சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே. (திருமூலர்)

குறிப்பு :—

உலகெலாமுணர்ந் தோதற்கரிய அண்ணலார் அருளாலருளுந் திவ்யாகமங்கள் ஒரு சிலவே தற்காலம் வெளிவந்துள்ளன. அதிலும் அச்சிற்பதிப்பித்தன சிலவே. இப்பெருங்குறையை நிவர்த்திக்க தேவகோட்டை சிவாகம சங்கம் அளவற்ற மூலதனங்கொண்டு நிறுவப்பெற்றுள்ளது. இச் சங்கத்தார் இதுகாறும் பல நூல்களை வெளியிட்டிருக்கின்றனர். ஆயிரக்கணக்கான பிரதிகள் வாங்குவாரின்றி மலிந்து கிடக்கின்றன. சைவாபிமானசீலர்களும் ஆதிசைவ சிவாசார்யர்கள் பலரும் தவறாது தங்கள் தங்கள் இல்லந்தோறும் வாங்கிவைத்துப் பூசித்தும், போற்றி வாசித்தும் இம்மை மறுமைப் பயன்களை யடைவார்களாக. மேலும் ஷை சங்கத்தார் பல அரிய

ஆகமப்புத்தகங்களை வெளியிடப் பலரும் ஊக்கமளித்து உதவுவார்களாக.

சைவசாஸ்திர பரிபாலனம் என்னும் இப்பத்திரிகை ஆகமங்களைப் பரிபாலனம் செய்யவே எழுந்துள்ளதாதலின், முதன்முதலாகத் தோன்றிய "சிவாகமசங்க"த்தின் பெருமையையும் அதன் நிலையையும் விளக்கிச் சங்கத்தின் முயற்சியை வளர்க்கவேண்டியது முதற்கடமையாயது.

சைவாகமசாஸ்திரங்களை (ஓலைப்பிரதியாக) வைத்திருக்கும் அன்பர்கள் இப்பத்திரிகை வாயிலாக வெளியிடுவதற்குச் சாதகமாக இப்பத்திரிகையின் ஒரு பகுதி ஆகமசாஸ்திர வெளியீடுபற்றி ஒதுக்கப்பட்டுள்ளது.

## நூற்குறிப்பு :

சுலோகபஞ்சக விஷயம் சிவபெருமானே பரமபதி; பிறரெல்லாம் பசுக்கள். இதுவே வேதாகமாதி சாஸ்திரங்களின் ஸாரம். இவ்வுண்மையை விளக்கும் நூல்கள் வடமொழியிற் பல. அவற்றுள் ஸ்ரீமத் ஹரதத்தாசாரியர் திருவாய்மலர்ந்தருளிய சுலோகபஞ்சகமும் ஒன்று. இதனை மாதவச் சிவஞானசுவாமிகள் தமிழில் மொழிபெயர்த்தருளினார்கள். இருபத்திரண்டு ஏதுக்களினாலே சிவனே பரம்பொருளென அறிவுறுத்தும் இச்சீரிய நூலுக்குச் சுலோகபஞ்சகவிஷயம் என்னும் பெயர் தந்து விரிந்தவிஷயம் எழுதியுதவியவர் உத்தரமேரூர் உயர்தர கலாசாலைத் தமிழ்ப்பண்டிதரும், சமணர் கழுவேற்றம் முதலியவற்றின் ஆசிரியரும், திருவருட்பயன் முதலியவற்றுக்குப் புத்துரை எழுதிப் பதிப்பித்தவரும் ஆகிய ஸ்ரீமாந் ஈசுரமூர்த்திப்பிள்ளை அவர்களாவர். இச்சுலோகபஞ்சக விஷயம் வேதோபநிடதம் முதலிய வடநூற் பிரமாணங்கொண்டும் தென்றமிழ்நூற் பிரமாணங்கொண்டும் சிவபரத்துவத்தை மிக விரிவாக விளக்கும் விருப்பமுடையது. சைவாகமசீலர்களின் கரபூஷணமாய் விளங்கும் தரமுடையது. தன்னைப் பயில்வார்க்குச் சிவபெருமான்மேற் பக்தி வளரப்பண்ணி ஆனந்திக்கச்செய்யும் இயல்பு வாய்ந்தது. இந்நூலைத் திட்பமும் நுட்பமும் அமையத்தக்க ஆராய்ச்சியுடன் எழுதியுதவிய பிள்ளை அவர்களதும், சிவநேசன் பத்திரிகையில்புத்தகவடிவாய் வெளியிட்டுதவிய ஸ்ரீமாந் இராமசாமிச் செட்டியார் அவர்களதும் கைம்மாறு கருதாத உபகாரம் வைதிக சைவோத்தமர்களால் என்றும் பாராட்டற்குரியன. புத்தகவிலை ரூபா ஒன்று. பிரதிகள் நூலாசிரியரிடத்தும், திட்டை (S. I. R.) சிவநேசன் பத்திராதிபரிடத்தும் பெறற்பாலன.

**உண்மைநெறிவிளக்கப் புத்துரை.**—உண்மைநெறிவிளக்கம் என்னும் நூல் சைவசந்தான துரியபீடாதிபராகிய ஸ்ரீமத் உமாபதி சிவாசாரியசுவாமிகள் அருளிச்செய்தது. இதற்கு இலகுவான புத்துரை எழுதிச் சைவ நன்மக்கட்கு உபகரித்தவர் ஸ்ரீமான் ஈசுரமூர்த்திப்பிள்ளை அவர்கள். பிள்ளையவர்களின் உரையியற்றுந் திறனும், சைவப்பற்றும், சாஸ்திரிர ஆராய்ச்சியும் முன்னர் வெளிவந்த உரை நூல்களிலிருந்து சைவஉலகம் நன்கு அறிந்ததொன்றே. இதனைப் பதிப்பித்துதவியயர் சீகாழி ஸ்ரீமத் பி. அகோரம் பிள்ளையாவர். இங்ஙனமே இவர்கள் சைவநூல்களை எழுதவும் பதிப்பிக்கவும் அரோக திடகாத்திரத்தையும், பூரணஆயுளையும் கொடுத்தருளும்படி எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன். பிரதிகள் பதிப்பாசிரியரிடம் பெறத்தக்கன.

[ப-ர்]

# குரு லிங்க சங்கமம்

[அச்சுவேலி சிவஸ்ரீ கு. வைத்தீசுவரக்குருக்கள்]

உலகத்திலே சமயங்கள் பல. எல்லாச் சமயத்தாருக்கும் தங்கள் தங்கள் சமயம் இது எனவும், அதற்குரிய கடவுள் இவர் எனவும், அக்கடவுள் ஆன்மாக்கள் செய்யும் வழிபாட்டை ஏற்று அநுக்கிரகம் செய்யும் முறை இது எனவும், அவரை ஆன்மாக்கள் வழிபடும் முறை இது எனவும், அறிதலும் அறிந்தபடி அனுட்டித்தலும் கடனாகும். ஆதலினாலே நம்முடைய சமயக் கிரமத்தை அறிதலும் அறிந்தபடி அநுட்டித்தலும் சைவசமயிகளாகிய எமக்கும் கடனாகுமே.

நாம் எல்லாம் சைவர்கள். சைவர் என்னும் சொற்கு சிவனை வழிபடுவோர் என்பது பொருள். ஆகவே, சிவனை வழிபடுவோர் யாவர், அவர் அனைவரும் சைவர் எனப்படுவர். சைவர் ஆதிசைவரும் மகாசைவரும் அநுசைவரும் அவாந்தரசைவரும் பிரவரசைவரும் அந்தியசைவரும் என அறுவகைப் படுவர். அவருள்ளே ஆதிசைவராவார்: அநாதிசைவராகிய சதாசிவமூர்த்தியுடைய ஐந்து திருமுகங்களினுந் தீக்ஷிக்கப் பட்ட பஞ்சரிஷி கோத்திரத்துச் சிவப்பிராமணர். மகாசைவ ராவார்: வைதிகப் பிராமணருள்ளே சிவதீக்ஷைபெற்றவர். அநுசைவராவார்: க்ஷத்திரியருள்ளும் வைசியருள்ளும் சிவ தீக்ஷைபெற்றவர். அவாந்தரசைவராவர்: சூத்திரருள்ளே சிவ தீக்ஷைபெற்றவர். பிரவரசைவராவார்: அறுவகை அநுலோம ருள்ளும் சிவதீக்ஷைபெற்றவர். ஒழிந்த சாதியார் எல்லாருள் ளும் சிவனை வழிபடுவோர் அந்தியசைவர் எனப்படுவர். இத னாற் பிராமணர்முதல் புலையரீறாகிய எல்லாச் சாதியாரும் சிவனை வழிபடுதற்குரியர் என்பது பெறப்பட்டது. ஆயினும், வழி பாட்டுக் கிரியைகள் வருணந்தோறும் வேறுபாடுடையனவாம்.

சிவபெருமான் புறத்தே சிவலிங்க முதலிய திருமேனியும், குருவும் சங்கமமும் இடமாகக்கொண்டு நின்றும், அகத்தே உயி ரிடமாகக்கொண்டு நின்றும் ஆன்மாக்கள் செய்யும் வழி

பாட்டை ஏற்று அருள்செய்வர். லிங்கம் என்னும் பதத்துக்கு லிங்-லயம், கம்-தோற்றம் எனக்கொண்டு உலகமும் விட்டுணு முதலிய உயிர்த்தொகைகளும் ஒடுங்குதற்கும் தோற்றுதற்கும் இடமாயுள்ளது எனப் பொருள்படும். லிங்கம் என்னும் சொல்லானது சித்திரித்தல் எனப் பொருள்படுகின்ற லிகி என்னுந் தாதுவினின்றும் பிறந்தமையின், சிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களால் பிரபஞ்சத்தைச் சித்திரிக்கும் பரமேசுரனது பிரபாவமே லிங்கம் எனினும் பொருந்தும். இலிங்கத்தினது விளக்கத்துக்கு இடமாகிய வாணம் சைலம் முதலியவைகளும் உபசாரத்தினால் இலிங்கம் எனப்படும். குரு என்பது அஞ்ஞானத்தை அழித்துச் சிவஞானத்தைக் கொடுத்து அநுக்கிரகிப்பவர் என்பொருள்படும். அடியார் திருமேனி அசைவுடையதாதலாற் சங்கமம் எனப்படும். சிவலிங்கம் பீடலிங்க ரூபமாய் உள்ளது. லிங்கம் நாதமயமாம். பீடம் பிந்துமயமாம்.

இலிங்கமானது பரார்த்தலிங்கம் எனவும், ஆன்மார்த்த லிங்கம் எனவும் இருவகைப்படும். உலகத்துள்ள ஆன்மாக்கள் அனைவரையும் அநுக்கிரகிக்கும்பொருட்டு, தேவர்களாலும் இருடிகளாலும் மனிதர்களாலும் கிராமாதிகளில் விதிப்படி விசேஷமாகத் தாபிக்கப்பட்ட லிங்கம் பரார்த்தலிங்கம் எனப்படும். அதுவே திருக்கோயிலுள்ளிருக்கும் லிங்கம். எல்லாருக்கும் தங்கள் ஆன்மரட்சையின் பொருட்டு தத்தம் கிரகத்திற் பூசிக்கும் இட்டலிங்கம் ஆன்மார்த்தலிங்கம் எனப்படும் என்று காரணாகமம் கூறுகின்றது. ஆசாரியர் விசேஷ தீக்ஷை செய்து சீடனை நோக்கி 'நீ உள்ளளவும் கைவிடாது இவரை நாடோறும் பூசி' என்று அநுமதிசெய்து, 'அடியேன் சரீரம் உள்ளவரையும் சிவபூசை செய்தன்றி, ஒன்றும் உட்கொள்ளேன்' என்று பிரதிக்ஞை செய்வித்துக்கொண்டு கொடுக்க, அவன் வாங்கிப் பூசிக்கும் லிங்கம் இஷ்டலிங்கம் எனப்படும்.

சுயம்புலிங்கம், தேவிலிங்கம், திவ்யலிங்கம், ஆர்ஷலிங்கம், மானுஷலிங்கம், இராக்ஷசலிங்கம், ஆசுரலிங்கம் என பரார்த்த லிங்கம் ஏழு வகைப்படும். தானே தோன்றியது சுயம்புலிங்கம். இது பர்வதாகாரமாய் உள்ளது. தேவியினாலே பூசிக்கப்

பட்டலிங்கம் தேவிலிங்கம். தேவர்களாற் ருபிக்கப்பட்டது தைவிகலிங்கம். முனிவர்களாற் ருபிக்கப்பட்டது ஆர்ஷ லிங்கம். மானுடராற் ருபிக்கப்பட்டது மானுடலிங்கம். அசுரர்களாலும் இராக்ஷதர்களாலும் பூசிக்கப்பட்டது ஆசுர லிங்கமும் இராக்ஷதலிங்கமும் எனப்படும். விநாயகர் சுப்பிரமணியரால் தாபிக்கப்பட்டது காணலிங்கம் எனப்படும்.

சிதம்பரத்திலுள்ள பர்வதாகார திருமூலத்தான லிங்கம் போன்றன சுயம்புலிங்கமாம். காஞ்சீபுரத்திலே ஏகாம்பரத்தில் காமாக்ஷி அம்மையாற் பூசிக்கப்பட்ட ஏகாம்பரநாதமகா லிங்கம் தேவிலிங்கமாம். திருச்செங்காட்டங்குடியில் விநாயகர் தாபித்துப் பூசித்த கணபதீச்சுர மகாலிங்கம் முதலியனவும், திருச்சேய்ஞலூரில் சுப்பிரமணியக்கடவுள் தாபித்துப் பூசித்த சத்திகிரீசுரமகாலிங்கம் முதலியனவும் காணலிங்கம் எனப்படும். பிரமாவினலே சீகாழியில் தாபித்துப் பூசிக்கப்பட்ட பிரமபுரீசமகாலிங்கமும், திருமாற்பேற்றில் விட்டுணு பூசித்த மால்வணங்கீசுரமகாலிங்கமும், விட்டுணு வாமனவதாரம் செய்து திருமாணிக்குழியில் தாபித்துப் பூசித்த மாணிக்க வரதேசுரமகாலிங்கமும், திருக்கண்ணார்கோயிலில் இந்திரன் தாபித்துப் பூசித்த கண்ணாயிரேசுரமகாலிங்கமும் தைவிக லிங்கமாம். திருக்குற்றாலத்தில் அகத்தியரால் தாபித்துப் பூசிக்கப்பட்ட குறும்பலாவீசுரமகாலிங்கம் ஆரிடலிங்கமாம். இடும்பாவனத்தில் இடும்பனால் தாபித்துப் பூசிக்கப்பட்ட சற்குணநாதேசுவரமகாலிங்கம் இராக்ஷசலிங்கமாம். திருஓணகாந்தன்றளியில் ஓணன், காந்தன் என்னும் இரு அசுரராற் பூசிக்கப்பட்ட ஓணகாந்தேசுரமகாலிங்கம் அசுரலிங்கமாம். இராமேசுரம் முதலாகிய பன்னிரண்டு தலங்களில் தாபிக்கப் பட்ட மகாலிங்கங்கள் சோதிலிங்கம் எனப்படும்.

நினைத்தமாத்திரத்தில் பாவங்களை நீக்கவல்ல பஞ்சபூத மகாலிங்கங்கள் ஐந்து உண்டு. அவை காஞ்சீபுரத்தில் பிருதிவி மயமான ஏகாம்பரலிங்கமும், காவேரிதீரத்தில் அப்புமயமான ஜம்புகேசுரலிங்கமும், அருணசலத்தில் அக்கினிமயமான அருணசலலிங்கமும், பொன்முகலியாற்றில் வாயுமயமான திருக் காளத்திலிங்கமும், சிதம்பரத்தில் ஆகாயமயமான திருமூல

லிங்கமுமாம். இவ்வைந்து லிங்கங்களைக் கண்களினாற் றரிசித்தாலும், காதினாற் கேட்டாலும், வாயினாற் சொன்னாலும், மனத்தாற்றியானித்தாலும் இஷ்டசித்தி எய்தப்பெறுவார்.

இவையன்றி ஆதாரக்ஷேத்திரங்களு முள்ளன. மூலாதார க்ஷேத்திரம் திருவாரூர். இதிற் சிவபெருமான் தியாகேசர் எனப்படுவர். சுவாதிட்டானம் திருவானைக்கா. அங்கே அவர் ஜம்புநாதர் எனப்படுவர். நாபித்தானமான மணிபூரகம் அருணாசலம். அங்கே அவர் அருணாசலேசுரர் எனப்படுவர். இருதயஸ்தானமாகிய அநாஹதம் சிதம்பரம். அங்கே அவர் சபாபதி எனப்படுவர். கண்டத்தானமாகிய விசுத்தி திருக்காளத்தி. அங்கே அவர் காளத்தீசுரர் எனப்படுவர். புருவமத்தியஸ்தானமாகிய ஆஞ்ஞை காசி. அங்கே அவர் விசுவநாதர் எனப்படுவர். பிரமரந்திரம் கைலாசம். அங்கே அவர் ஸ்ரீகண்ட பரமேசுரர் எனப்படுவர். துவாதசாந்தம் மதுரை. இங்கே அவர் சுந்தரேசுரர் எனப்படுவர் என்று திருவிளையாடற்புராணமும் அகஸ்தியசங்கிதையும் கூறுகின்றன.

ஆன்மார்த்தபூசையில் உபயோகிக்கப்படும் இலிங்கங்கள் வாணலிங்கம் படிகலிங்கம் க்ஷணிகலிங்கம் முதலாகப் பலவகைப்படும். வாணாசுரன் என்பவன் ஒரு உழுந்து முதல் முழமீறாக உள்ள லிங்கங்களை மந்திரங்கொண்டு பூசித்தமையால் அவ்விலிங்கம் வாணலிங்கம் எனப்படும், இவ்விலிங்கங்களில் ஆவாஹனம் வேண்டியதில்லை. சிவபெருமான் எப்பொழுதும் சாந்நித்தியராய் இருந்தருளுவார். லிங்காத்திரி, நேபாளம் முதலிய இடங்களே அவன் பூசித்த இடங்களாம். வாணலிங்கம் முதலியன இட்டலிங்கமாகப் பூசிக்கப்படின் சலலிங்கம் என்று சொல்லப்படும் பரார்த்தலிங்கமாகத் தாபிக்கப்படின் அசலலிங்கம் எனப்படும்.

பிராமணர் முதலிய நான்கு வருணத்தாரும் அநுலோமர் அறுவருமே இட்டலிங்கபூசைக்கு அதிகாரிகள். இவருள்ளும் இடம் பொருள் ஏவல் முதலியன உடையோராய், சிவபூஜாவிதி முதலியவற்றை நன்கறிந்தவராய் உள்ளவரே சிலை முதலியவற்றாலாகிய லிங்கத்தைப் பிரதிட்டை செய்வித்துக்கொண்டு சிவபூஜை செய்யலாம். மற்றையோர் க்ஷணிகலிங்கபூஜை செய்

யக்கடவர். க்ஷணிகலிங்கமாவது பூசித்தவுடனே விடப்படும் இலிங்கமாம். க்ஷணிகலிங்கம் ஆற்றுமண் சந்தனம் முதலாகப் பன்னிரண்டு பேதமாம்.

ஆன்மார்த்தபூசை செய்யாது பரார்த்தபூசை செய்தவர்கள் பூசையின் பயனை இழப்பார்கள். பிரமவிட்டுணுக்களும் ஆன்மார்த்தபூசை செய்தே தங்கள் தங்கள் அதிகார கிருத்தியங்களைச் செய்வர். குருவுக்குச் சம்மதி கொடுத்து அவரிடத்தில் ஏற்றுப் பூசித்த லிங்கத்தை நன்கு பூசியாது இடையில் விடுத்தோர் மீளா நரகடைவர். "திருநாம மஞ்செழுத்தும் செப்பாராகில்" என்னும் தேவாரத்தால் உணரப்படும் சிவபூசை செய்யாது உண்டவனது உணவு உணவாகாது. அவன் சிவார்ச்சனையினின்று நீங்கிய முப்புரத்தசுரர் போலத் தண்டிக்கப்படுவன்.

திருக்கோயிலில் உள்ள தூபி தூலலிங்கமாம். விமானத்துள் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கம் சூக்குமலிங்கமாம். அதற்கு முன் உள்ள பலிபீடம் பத்திரலிங்கமாம். இவ்வுண்மை நோக்கியே திருமூலநாயனார்,

> "தூய விமானமுந் தூலம தாகுமா
> லாய சதாசிவ மாகுநற் சூக்குமம்
> பாய பலிபீடம் பத்திர லிங்கமா
> மாய வரனிலை யாய்ந்துகொள் வார்கட்கே"

என்று அருளிச்செய்தார்.

உயர்ந்த வருணத்தாருள் உறுப்புக் குறைந்தவர்களும், நான்கு வருணத்தாரல்லாதாரும், தங்கள் தங்கள் அதிகாராநுகுணமாக ஆசாரியரிடத்துத் தீக்ஷைபெற்றுத் தூபியினையும் கோபுரத்தையும் சிவனெனக் கண்டு, அவற்றுக்கெதிரே பத்திர புஷ்பங்களைத் தூவித் துதித்தல் முறையாம்.

சராசரப் பிரபஞ்சம் எங்கும் ஆன்மாக்களை இரக்ஷித்தல் வேண்டிச் சிவபெருமான் இலிங்க ரூபமாக விளங்குகின்றார். அன்போடு வழிபடுபவர்களுக்கு அவ்வவ்விடங்களிலே வெளிப்பட்டு நின்று அவரவர் வேண்டிய இட்டசித்திகளை அருளுகின்

ரூர். மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்றனையும் முறையாக வணங்குப்வர் ஞானசாரியனால் உண்மைஞானம் விளங்கப் பெறுவார்கள். இதனை "மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" எனத் தாயுமானசுவாமிகள் உணர்த்தியருளினார். "சிவலிங்கத்தைத் தினந்தோறும் காலை மாலை உச்சி என்னும் மூன்று காலங்ளிலும் பூசிக்க" என்று உபநிடதம் கூறுகின்றது. விட்டுணு சிவலிங்கார்ச்சனை செய்தே உலகங்களை ரக்ஷிக்கும் உரிமையை அடைந்தார். பிரமா சிருஷ்டிக்கும் அதிகாரத்தைப் பெற்றார். சிவலிங்பூஜாபலத்தினாலே சிலர் சாலோகாதி பதவிகளைப் பெற்றார்கள். சிவலிங்கபூஜாபலத்தினாலே தேவர் மனிதர் முதலியோர் செல்வத்தோடு வாழ்கின்றார்கள். சிலர் சத்துருக்களை ஜயித்துப் பூமியை அரசாட்சிசெய்தார்கள். சிலர் புத்திரர், பசு, சௌந்திரியம் முதலியவற்றை அடைந்திருக்கிறார்கள். சகல தருமங்களிம் இடையூறின்றி முற்றுப்பெறும் என்பதும், தம்மை அன்போடு வழிபடுபவர்களுக்குக் குழைந்து நிற்பார் என்பதும் காமாட்சிஅம்மையார் செய்த சிவபூசையினாலே பெறப்படும். சகல பாவங்களுக்கும் பிராயச்சித்தமாய் உள்ளது சிவபூசையாம் என்பது கயமுகாசுரன், சூரபதுமன் முதலாயினோரைச் சங்கரித்தமையாலே பாவம் ஒன்றும் ஏறப்பெறாத விநாயகர், சுப்பிரமணியர் செய்த லிங்கபூசையினாலே பெறப்படும். மேலும், அகங்கரிப்புக்குப் பரிகாரமாய் முடிவதும், அதிபாதகத்துக்குப் பரிகாரமாய் உள்ளதும், பிரமகத்தி நோய்க்கு மருந்தாய் உள்ளதும், காலத்தைக் கடக்கச்செய்வதும் இலிங்கவழிபாடேயாம் என்பது பிரமா, விட்டுணு, தக்கன், அகத்தியர், மார்க்கண்டேயர் முதலாயினோர் செய்த லிங்கவழி பாட்டினாலே பெறப்படும். இதுபற்றியே திருஞான சம்பந்த சுவாமிகளும் 'பூத்தேர்ந்தாயின கொண்டுநின் பொன்னடி—யேத்தாதாரில்லை யெண்ணுங்கால்' என்றருளிச்செய்தனர். "வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்—புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பும்—அண்டர்தொழ வாமுனிறுமாப்பு மாலால—முண்டவனைப் பூசித்த பேறென்றுணர்ந்திலையால்" என்பது புராணம். சிவலிங்கவழிபாடு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு மார்க்கத்

தாராலும் செயற்பாலதேயாம். மலம் நீங்கிய சிவஞானிகளும் பூர்வமலவாசனை தாக்காமைப் பொருட்டும், சிவானந்தம்மேன் மேல் வளர்தற்பொருட்டும் சிவலிங்கம் முதலிய திருமேனியை யும் மெய்யடியார்களையும் வழிபடல்வேண்டுமென்று சிவஞான போதம் முதலிய நூல்களில் உணர்த்தப்பட்டது. திருக்கோயி லுள்ளிருக்கும் திருமேனியை வழிபடல் ஞானிமுதல் நான்கு மார்க்கத்தாருக்கும் இன்றியமையாக் கடனேயாம். சிவாநு பூதிப் பெருவாழ்வுடையர்களாகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர், திருநாவுக்கரசுநாயனர், சுந்தரமூர்த்திநாயனர், மாணிக்கவாசகசுவாமிகள் என்னும் சமயாசாரியர்கள் நால் வரும் தலந்தோறும் சென்று, சிவலிங்கவழிபாடு செய்து, தமிழ்வேதம் பாடியமையே இதற்குச் சான்றாகும். இது ஞானத்திற் சரியை எனப்படும். சிவலிங்கவழிபாடு நான்கு பாதத்தாராலும் செய்யப்படுமாயினும், அது அவரவர் கருத்து வகையால் வேறுபடும். சரியாபாதத்தினர் சிவலிங்கம் முதலிய திருமேனியையே சிவமெனக் கண்டு வழிபடுவர். அவர்களுக் குச் சிவபெருமான் அங்கே வெளிப்படாது நின்று அருள் செய்வர். கிரியா பாதத்தினர் நிஷ்களப் பொருளாகிய சிவ பெருமான் மந்திரங்களினால் சிவலிங்கம் முதலிய திருவுருக் கொண்டாரென்று மந்திர நியாசத்தினாலே வழிபடுவர். யோக பாதத்தினர் இருதயமெங்கும் வியாபித்திருக்கும் சிவபெரு மான் இந்தச் சிவலிங்கத்தினும் அதிட்டித்து நின்று பூசை கொள்வார் என்று சாத்திய மந்திரங்களினாலே வழிபடுவர். அவர்களுக்குக் கடைந்தவிடத்துத் தோன்றும் அக்கினி போல வும், கறந்தவிடத்துத் தோன்றும் பால்போலவும், அவ்வப் பொழுது வெளிப்பட்டுநின்று அருள்செய்வர். ஞானிகள் இம் முத்திறத்தாரும் போல ஓரிடமாகக் குறியாது அன்பு மாத்தி ரத்தால் அங்கே வழிபடுவார்கள். அவர்களுக்குச் சிவபெரு மான்கன்றை நினைந்த தலையீற்றுப் பசுவின் முலைப்பால் போல அவ்வன்பே தாமாகிக் கருணைமிகுதியினால் எப்பொழுதும் வெளிப்பட்டுநின்று அருள்செய்வர். அது "திருக்கோயிலுள் ளிருக்குந்திருமேனி தன்னை" என்னும் சிவஞானசித்திச் செய்யுளால் உணரப்படும். தற்காலத்திலே அநுபவஞானமும் சாஸ்திர ஞானமும் கிரமமாகப் பெறாதவர் சிலர் தங்களை

ஞானிகளெனச் சொல்லிக்கொண்டு, சரியை கிரியைகளை இகழ்ந்து, மீளா நரகத்துக்கு ஆளாகின்றார்கள்.

பீடலிங்க ரூபமாயுள்ள சிவலிங்கமானது சிவசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திருசாதாக்கியம், கன்மசாதாக்கியம் என்னும் பஞ்ச சாதாக்கியங்களுள் ஒன்றாகிய கன்மசாதாக்கியமாகும். கந்தபுராணத்திலே சுப்பிரமணியக்கடவுள் "ஐவகை யுருவி லொன்றை" சிவாகமவிதியாற் பூசித்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சதா—எப்பொழுதும். ஆக்கியம்—புகழப்படுவது. எனவே, நாமரூபாதிகள் இல்லாத சுத்தசிவம், நாமரூபமுடையவராய் அன்பர்களாற் புகழ்ப்படுபவர் என்பது கருத்து.

கன்மசாதாக்கியமானது இச்சாசத்தியின் அம்சமாய்த் தோன்றியது. சிவபெருமான் ஆன்மாக்களது தியான பூஜா நிமித்தமாகச் சகல நிஷ்களத் திருமேனி கொண்ட நிலை ஆவுடையாளுடன் கூடிய லிங்கமாம். சிவலிங்கம் ஞானசத்தியையும் அதன் கீழ்க் காணப்படும் ஆவுடையாள் கிரியாசத்தியையும் குறிக்கும். சிவலிங்கத்திலே எப்பொழுதும் ஓர் அசைவு உண்டு. அதுவே சத்தியாகும். ஆன்மாக்களின் பாசத்தை நீக்குவதற்காக அசைதற் சக்தி இலிங்கத்தைச் சுற்றிக்கொண்டு இருக்கிறது. அவ் வசைவு லிங்கத்தில் உண்டென்பதை உணர்த்துவதற்காக ஆவுடையாள் இலிங்கத்தைச் சுற்றிக் கீழடங்கி அமைந்திருக்கிறது. ஆவுடையாளின் ஓர் பக்கத்தில் நீண்டிருக்கும் கோமுகியானது ஆன்மாக்களைத் திருநோக்கம் செய்யும் குறிப்பாகும். சிவசாதாக்கியம் முதலிய நான்கும் ஒன்றையொன்று பற்றி, ஐந்தாவதாகிய கன்மசாதாக்கியத்தை அடைந்திருத்தலின், இது மற்றைய சாதாக்கியங்களிலும் விசேடமுடையதாய் இருக்கும்.

(தொடரும்.)

---

நகம் யாரகஸ்ய த்ரிகரண ஸம்ஹவஃ ஶயாஶ்ரயஃ
ஹொமென வ்ராயஶ்சித்தேந தீக்ஷயாவ க்ஷீயதெ ।
ஶாஸ்த்ராஶாஸ்த்ர ஜமத்காரணம். ஶயாவயம் தத்ர ஶாஸ்த்ர
ஶயாஶிவஸ்ய ருயஹொமாயிகாரொவாயிஃ தேநொ
வாயிநா ஶிவஸ்திவியொஹஶ்ச. உவஸம்ஹ்ரத
ஷிஷ்ட்காயெஙா ருயஶிவஃ. உஷ்ட்க்க ஷிஷ்ட்காயெஙா
ஹொமஶிவஃ வ்ரவ்ரத்த ஷிஷ்ட்காயெஙாஉயிகார
ஶிவஃ. தஸ்யாஶ்ச ஷிஜெர் ஸ்தந கரண ஹவந
ஹொமாஃ விஜ்ஞாந கெவலாநாஜ்ஞாதாஃ, வதாவிஙயா
வாவஃ, ஷகவஞ்சாஶஷக்ஷராணி, ஶஂத்ரா ஷகாஷஶ,
வெஷாமஶாஸ்ய ஷகாஶீதிவஷாநி, ஶதஅயாயிக வதா
விஙம்ஶதி ஹவநாநி, நிவ்ரத்யாதிகலாஃ, ஶிவாஜ்ஞி
தக்வவஞ்சகஜ்ஞாதம். தயாஹி. ஶாஸ்த்ரஶயாயா ஶூஷள
நாஷ ஶாஸ்த்ரஜ்ஞாந ரூவஃ ஸஜ்ஞாதஃ தஜெவாஜ்ஶய்யா
ஞாரஹிதம் காஶெஶாநவச்ஷிஞம் விஷாநஞாரூவம்
வாரஶிவாயிஷ்டிதம் ஸஞ்ஶிவதக்வஶிதி வொசுதெ.
தஜெவ ருயதக்வம் தஸ்யாஞாஷாவ்யாஸக்ரியாரூவொ
ஷிஷ்ரஜாயத. தஞ்க்ரியாஶக்த்யயிஷ்டிதம் ஸஞ்ஶக்தி
தக்வஶிதி வொசுதெ. தஸ்யாஶ்ச ஸஶஜ்ஞாந க்ரியாவஞ்ச
ஸாஷாவ்யதக்வ ஶஜாயத. தஜெவெஶாநாஜி வஞ்ஶம்
த்ரஶீர ஸஷாஶிவஹட்டாரகாயிஷ்டிதம் ஸஞ்ஸஷ॥ஶிவ
தக்வ ஶிதிவொசுதெ. தஸ்யாஷஜ்ஞாநாயிக க்ரியா
யாக்த ஶீஸ்வரதக்வஶஜாயத. தஞ்வஞ்விம்ஶதிஶீஶாவ
தார ஶஹெஶ்வரஹட்டாரகாயிஷ்டிதம் ஸஞ்ஶஹெஶ்வர
தக்வஶிதி வொசுதெ. தஸ்லிஞநஞாஷ்யஷ்டவிஜெ
ஶ்வராஸ்ஞி. தஸ்லிஞயிகஜ்ஞாநாக்ரியாயாக்தம் ஶாஷ்ர
ஹட்டாரகாயிஷ்டிதம் ஶாஸ்த்ரவிஷ்யாதக்வ ஶஜாயத. தஸ்லிது
ஸவ்தகொடி ஶம்த்ராணவஃ ஸஞ்சி. ஸாஜ்ஙத்ரிகொடி
கம் ஸாயிகரண தீக்ஷாயாம் ஸாயநாநி ஹவஞ்சி.

ஷதஸ்ய தக்வவஞ்சகஸ்ய ஶாஸ்த்ராஜ்ஞதி நாஶ.
ததொஶ்ரம்யிவாஶஸ்ய லக்ஷண ஶாசுதெ. தஞ்ஶ்ரஜ்ஞி

ததः கஶாசி வணுகஞாகயாத்தஸ்ய வாஂஸः விஷயா
நாஹவகாரெ ஈாஞ்ரஸஂஶ்ரயம் வாஂஸ்லஶிதிஜஞாதம்.
வாநஈநஞெஶः கஶாஜெவ ஷுக்ஷாஹ்ய ஷுகூதி
உஜநயஸ் நநா ஹொமஸ்ய கஉுதஞ்தயா
கஜெுவநியாஉகஸ்யாகிஞியதி கஸ்நயெதிவெஞ.
ஸ்வுதகவாநாம் ஹொம ஊவ ஷுயொஜநம். ஜெஸா
வி கஉுதஞ்ஊவ. ததः கஜெுவாஶ்ரிதி ஶஸ்ரீ
ஈாதீ ஸவுதகவாநாம் ஜெவயயுஞம் ஷுாவ்யம். ஜெஹா
திஸாவெக்ஷஜெவ கஉுநியாஉகஸ்யா கா ஜொஹாநிः
அஶுஉஜநந ஷுகூத உநாஸஈாஉः ।

ததः ஷுகூஜெ வுஷ்யாஷ்யாவாஷாநாம்
ஶஊஉஜநி தஸ்ஶஊதகவம் ஸகவாஈஜஸ்யஉஸாம்
ஸாஉ்யாவஜெஸ்து தாவ்ஜெ. தஶுக்துயः ஷுகாஶாஷ்யாः
ஷுஸிஜாः. தஜொா நாநாஹாவ ஷுத்யயஶ்க்ஷணம்
வாஜிதகவஉாஷஹவஸ். தஜ்ஷயாகாஈம் ஸகவஶாஊா
யிகம் ஹொஶ்ஞ ஹவதி. நநாவாஜி வெுாயநிஶி
த்ஞெஸ் கிம் விஷ்யா கஸ்நயெதி வெஞ. யதி வ்ஞ
காஞஈஸஷ்யாவெ வ்ஞகஸ்ய ஜெவயயுஞம் தஷாஉநः
ஸஷாவெ வாஜிஈநயிுகா. உஜொவாஜெ வுடா
திஜ்ஜாஜெந கஈஊஶிதிவெஸ் தஷா வக்ஷாஈாதீநாம்
ஜெவயயுஞாவத்திः. ஹொஶஸாயஜெஸதி ஹொஶஸ
யநாஞாஈஸ்ய வ்யுஜெதிவெ த்துஷா ஶ்ரொத்ருஸஜெகவ
கவஶாதீநாம் ஜெவயஞம் ஸ்யாஸ் விஷ்யா வாஜெ்யா
ஜெஸ்கவஸாய்தா நாஸ்தி விஷ்யா தாவஷாதுஜொா
ஜ்ஞாநஶக்திவ்ஞகா உநஸ்ஸம்யாக்தெம் க்ரியாஊா
வாஹ்யவிஷய ஷுகாஶிகா வாஜிஸிதி விஷ்யா
வாஜெ்யா ஹிஞவிஷயகவம் ।

அய வாஜிஶாஊாஹாவாः கய்ஞெ. தயாஹி
யஉுஜ்ஜாந வெஈாஶ்ய ஹஸ்தயः கயஉுாஜ்ஜாநா
வெஈாஶ்ய ஹஸ்தயः க்ஷஹத்ய ஹாவாஷ்க ஶித்ய்வ்

தே. தே ஸநகாதிதேவாதயஸ் ப்ரஸாதஸத்வாத் பவந்தி. நநு புத்திமதா வைராக்யலக்ஷண ராகஸ்யைவ கிம் காரணஜநித ராகப்ரஸங்க இதி சேந்ந. அத்ர ஏவம் து ப்ரஷ்டவ்ய: . ராக: கிம் புத்திமதோ வா விஷயமதோ வா. நாத்ய: பால: புத்தே ஹேத்வாபா வத்வாத் ஸோமாஸ்காராதி ஜநநே ஸத்யஸ்த்வாத் த்ருதீய: வைஷயிக: பாஹ்யவிஷய ஸங்கல்பஜ நிதாதி ஸம்ஜ்ஞாயா ஸத்த்வேந ஸம்வேஷ்டம் ஸ்வரா கத்வம் ப்ராப்நோதி. ந கஸ்யசிதபி ராகோ பவதீதி வீதராகாதிவத்தோஷ: ப்ரஸஜ்யதே. தஸ்மாத் காரண ஜநிதோ ராகஸித்தி: ।

தஸ்மாத் புத்திதத்வாதஹங்கார: ப்ராதுர்பவதி. ஸ ச தைஜஸ வைகாரிக பூதாதி பேதாத் த்ரிவிதம். தத்ர தைஜஸாத் ச்ரோத்ர த்வக் சக்ஷு: ஜிஹ்வா க்ராணாநி ஜ்ஞாநேந்த்ரியாணி ஜாதாநி. வைகாரிகாத் வாக் பாணி பாத பாயூபஸ்தாநி கர்மேந்த்ரியாணி ஜாதாநி. பூதாத்யஹங்காராத் சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்த தந்மாத்ரா ஜாதா: . தேப்ய: க்ரமேண பஞ்சபூதாநி ஜாதா: . ஏவம் ஷட்த்ரிம்சத்தத்வாநி ஜாதாநி. கலாதி ப்ரக்ருதி தத்வபர்யந்தம் வித்யா தத்வம் சுத்தாசுத்தமிதி வ்யவஹ்ரியதே. மாயாதத்வாதி ஸப்த ஜ்ஞாநி சுத்ததத்வாநி அசுத்தாநீதி வ்யவஹ்ரியதே ।

அஹங்காராதி லக்ஷணமுச்யதே. அஹங்காரஸ்ய நாசகத்வம் ஜ்ஞாநத்வாதிநிவேசம் கரோதி. அஸ்மிந் ஸந்தாரயதி. மநஸ்தத்வஸ்ய ப்ரவ்ருத்திகார ணம் ஜீவஸ்ய ஸங்கல்பாத்மகம் ஸம்சயாத்மகம் விஷ யேஷு புத்திம் பவதி தத்ஸ்வரூபம் சுத்தம் ச்ரோத்ர விஷயாணாம் சப்தாதீநாம் ஸாதநாநாம் ஸஞ்ஜி யாநே ஸதி நித்யோபாதாநத்வம் ப்ரஸஜ்யதே.

𑌅𑌧𑍍𑌯𑌵𑌸𑌤𑍍𑌵𑌪𑌿 𑌹𑍇𑌤𑍁 𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌨𑍇 𑌭𑍂𑌭𑌾𑌵𑌃 𑌤𑌤𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑍈𑌵𑌾𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌸𑌜𑍍𑌯𑍇𑌤. 𑌨 𑌚𑍈𑌵𑌂 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌵𑌯𑌵𑌾𑌨𑌵𑌯𑌵𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌃 𑌤𑌤𑍍𑌰 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌤𑍁 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌿 𑌵𑌿𑌷𑌯 𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌾𑌣𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿. 𑌅𑌤𑍍𑌰𑌾𑌪𑌰𑍇 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑍇. 𑌯𑌦𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂 𑌯𑌦𑍍𑌭𑍂𑌤𑌗𑍁𑌣𑌂 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌤𑌦𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂 𑌤𑌦𑍍𑌭𑍂𑌤𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌕𑌂, 𑌯𑌥𑌾 𑌗𑌨𑍍𑌧𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌂 𑌘𑍍𑌰𑌾𑌣𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍇𑌨𑍈𑌵 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌨𑌚𑌾𑌹𑌂𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌣𑍀𑌤𑌿, 𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑍋 𑌵𑌾𑌰𑌿 𑌮𑌹𑍀 𑌰𑍂𑌪𑌗𑍁𑌣𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿. 𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑍂𑌪𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌕𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌯𑌤𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌕𑌮𑍁 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯 𑌸𑌮𑌵𑌾𑌯𑌾𑌰𑍍𑌥𑌂 𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿, 𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌕𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌾𑌨𑌿. 𑌵𑌾𑌕𑍍𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌪𑌾𑌯𑍂𑌪𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌵𑌚𑌨𑌾𑌦𑌾𑌨𑌗𑌮𑌨𑌵𑌿𑌸𑌰𑍍𑌗𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌨𑍍 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿. 𑌭𑍂𑌮𑍌 𑌪𑌟𑌪𑌟𑌶𑌬𑍍𑌦𑌃, 𑌕𑌠𑌿𑌨𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌃, 𑌪𑍀𑌤𑌾𑌦𑌿 𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌧𑌰𑍂𑌪𑌂, 𑌮𑌧𑍁𑌰𑌾𑌦𑌿 𑌷𑌡𑍍𑌵𑌿𑌧𑌰𑌸𑌃 𑌇𑌮𑍇 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌗𑍁𑌣𑌾𑌃. 𑌵𑌿𑌶𑍇𑌷𑌗𑍁𑌣𑌸𑍍𑌤𑍁 𑌗𑌨𑍍𑌧𑌃 𑌜𑌲𑍇 𑌚𑌲𑌚𑌲𑌧𑍍𑌵𑌨𑌿𑌃 𑌶𑍀𑌤𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌃, 𑌶𑍁𑌕𑍍𑌲𑌰𑍂𑌪𑌂, 𑌏𑌤𑍇 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌗𑍁𑌣𑌾𑌃. 𑌵𑌿𑌶𑍇𑌷𑌗𑍁𑌣𑌸𑍍𑌤𑍁 𑌮𑌧𑍁𑌰𑌰𑌸𑌃. 𑌤𑍇𑌜𑌸𑌿 𑌭𑍁𑌗𑌭𑍁𑌗𑌧𑍍𑌵𑌨𑌿𑌃, 𑌉𑌷𑍍𑌣𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌃. 𑌇𑌮𑍌 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌗𑍁𑌣𑍌. 𑌰𑍋𑌹𑌿𑌤𑌰𑍂𑌪𑌂 𑌤𑍁 𑌵𑌿𑌶𑍇𑌷𑌗𑍁𑌣𑌾𑌃 𑌵𑌾𑌯𑍌 𑌶𑌕𑌶𑌕𑌧𑍍𑌵𑌨𑌿𑌃 𑌅𑌯𑌂 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌗𑍁𑌣𑌃. 𑌵𑌿𑌶𑍇𑌷𑌗𑍁𑌣𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍁𑌷𑍍𑌣𑌾𑌶𑍀𑌤𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌃. 𑌆𑌕𑌾𑌶𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌧𑍍𑌵𑌨𑌿𑌰𑍇𑌕 𑌏𑌵 ॥

𑌅𑌤𑌃 𑌪𑌰𑌮𑌵𑌸𑍍𑌥𑌾𑌦𑌰𑍍𑌶𑌨𑌂. 𑌤𑌥𑌾𑌹𑌿 𑌅𑌧𑍋𑌽𑌵𑌸𑍍𑌥𑌾𑌃 𑌪𑌞𑍍𑌚. 𑌮𑌧𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌃 𑌪𑌞𑍍𑌚. 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌃 𑌪𑌞𑍍𑌚. 𑌕𑍇𑌵𑌲𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌸𑌕𑌲𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌚𑍇𑌤𑌿 𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌸𑍍𑌤𑌿𑌸𑍍𑌰𑌃 𑌸𑌂𑌹𑌤𑍍𑌯𑌾𑌷𑍍𑌟𑌾𑌦𑌶. 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌲𑌾𑌦𑌿𑌵𑌿𑌹𑍀𑌨𑌾 𑌕𑍇𑌵𑌲𑌾𑌵𑌸𑍍𑌥𑌾. 𑌕𑌲𑌾𑌦𑌿𑌸𑌹𑌿𑌤𑌾 𑌸𑌕𑌲𑌾

வஸ்தா. இச்சாரஹிதா ஶுஜாவஸ்தா. தத்ப்ராயோவஸ்தா,
ஸுஜா மரணாவஸ்தாயாஞ்ச தூஷ்ணீம்பாவஶ்ச தத்வாநி தஶேந்
த்ரியாணி தஶவாயவ: தந்மாத்ரா பஞ்சகம் வசநாதி
பஞ்சகம் குண: கரண சதுஷ்டயம் லலாடஸ்தாநம்.
தஶேந்த்ரியாணி விஹாய சதுர்விம்ஶதி தத்வாநி
ஸ்வப்நாவஸ்தாயாம் கண்டஸ்தாநம். ஸுஷுப்த்யவஸ்தாயாம்
ப்ராணவாயு: சித்தஞ்சேதி த்வயம் ஹ்ருதயஸ்தாநம்.
துர்யாவஸ்தாயாம் ப்ராண ஏக: நாபிஸ்தாநம்
துர்யாதீதாவஸ்தாயாம் தத்வாதீதாத்மைக ஏவஸ்தா
நம் மூலாதார: தத: கேவலாவஸ்தா பதிதாத்ம
போதந ப்ரகார: கத்யதே. ததாஹி பலேவாத்த
விதள ப்ராணி கரூபஶாஞ் கஷ்டிஞாதி உத்வஞ:
தைவ ஸூக்ஷ்மா வாக் உயரோணாரஸாஞலூரத
தூஞ்ஜ பக்ஷத்வய சரணத்வயஞ்ச வித்தாஞலூரதா
விஹாமவணூ பஶ்யந்தீ வாக். மத்யமா து ப்ராண
வாயு ஸஹிதா கண்டகதா உபாம்ஶு ஜபவச்ச
ஸூக்ஷ்மாக்ஷரா ஶ்ரோத்ரயோரஸ்பஷ்டாஸ்யாஞ் வை
கரீ து ப்ராணோதா நாஸ்யாம் ஸஹிதா ஶ்ரோத்ர
க்ராஹ்யாக்ஷரா ஸ்பஷ்டாக்ஷரா கடயுக்தா அயம் கட
இதி ரூபா ஸ்யாஞ். ஜா வாச: பஞ்சஸாம் ஜ்ஞாந
காரணம். ததாஹி அயம் கட இதி ஶப்தம் விநா
கம்பாதி பக்ஷ லொதாராகார கடஜ்ஞாநாநுப
பத்தே:. ஸூக்ஷ்மா வாக் ஶிவதத்வ ஶக்திதத்வ
ப்ரேரிதா. பஶ்யந்தீ ஸாதாக்யதத்வ ப்ரேரிதா.
மத்யமா ஈஶ்வரதத்வ ப்ரேரிதா. வைகரீ ஶுத்த
வித்யாதத்வ ப்ரேரிதா. ஏவம் ப்ரேரிதா: ஸத்ய:
சதுர்விதா வாச: ஸஸகாயஞ்ச கூவஞ்சி. ஏவம்
சதுர்விதவாக் போதித ஜ்ஞாநஶக்திராத்மா ஸக
லாவஸ்தாம் கச்சதி. தத்யதா, பரஶிவ ஸமவேதா
ஜ்ஞாநஶக்தி: ஶிவதத்வ ஶுத்தவித்யாதத்வே ப்ரேர
யதி. தத்ர க்ரமேண ப்ரக்ருதிதத்வ வித்யாதத்வ

ப்ரேரயதி. ஶிவதத்த்வே க்ரியாஶக்தி: ஶக்திதத்த்வ
ஸாதாக்யதத்த்வே ப்ரேரயதி. தேந க்ரமேண
கலாகால நியதி புருஷ தத்த்வாநி ப்ரேரயதி.
ஶிவதத்த்வேச்சா ஶக்தி: ஈஶ்வரதத்த்வம் ப்ரேரயதி.
ததா ராகதத்த்வம் ப்ரேரயதி. ஏதத் ஸர்வம் பரா
ஶக்தி: ப்ரேரயதி. தாம் பரஶிவ: ப்ரேரயதி.
ஏவமேதை: ப்ரேரிதாத்மா ஸகலாவஸ்தாம் கச்சதி. ஜாக
ரணாவஸ்தாயாம் உத்பத்த்யவஸ்தா: கத்யந்தே. கர்த்ருவிஷ
கிஞ்சித் அவஸ்தா ப்ரக்ஷிப்ய தத்விஸ்தாரண அதீதம் தஸ்யாஸ்வர
ணாயோத்பவிதம் யத் துரீயம் அநந்தரம் கிஞ்சித் ஸ்மர
ணம் ஸுஷுப்தி:. கர்த்ருத்வா நிக்ஷிப்த இதி ஸங்கல்ப
ஸ்வப்ந:. அதைவ நிக்ஷிப்த இதி நிஶ்சிதே ஜாகரணம்.
ததோ பரம் நிர்மலாவஸ்தா: பஞ்ச நிர்மலமேவ
ஜாக்ரத் ஸ்வப்நஸுஷுப்தி துரீயதுரீயாதீதாநி.
தத்ர நிர்மலஜாகரணம் யதா கஷ்ட ஸாத்ய உத்பத்தி
பாகவஶாத் ஆசார்யாநுக்ரஹேண ப்ரபஞ்சஸ்ய
அநித்யத்வம் ஜ்ஞாத்வா உபகாராபகாரயோ: ஹர்ஷா
மர்ஷரஹித: ஸர்வமபி ஜகச்சிவமயம் பஶ்யதி.
தத்ர நிர்மலஸ்வப்ந: யதா விஷயேஷு ஶப்தேஷு
ஸ்பர்ஶேஷு பஶ்யேஷு ஶ்ராவ்யேஷு ஜிஹ்வேஷு வசநேஷு கமநேஷு
க்ரஹணேஷு விஸர்ஜநேஷு ஆநந்தேஷ்வபி தத்ஸம்பந்தரஹித
ஸ்திஷ்டதி. தத்ர நிர்மலஸுஷுப்தி: யதா பரம:
ஶிவஜ்ஞாநாநந்த ஸஹித: ஶாந்தஸமஷ்டிம் திஷ்டதி.
நிர்மலதுரீயந்து யதா நந்தம் விநா கிமபி ந ஜா
நாதி. நிர்மலதுரீயாதீதந்து ஸர்வஜ்ஞத்வ ஸர்வ
கர்த்ருத்வாதி ஸஹித ஷட்த்வாதீத ஶிவஸமாந: ஸந்
யதா திஷ்டதி, ததாநீம் ஸர்வத்ராபஹித ஜீவா
த்மஸ்து ஸம்ஸாரநிவ்ருத்த பாஶாதிகாபஸ் நிவாதஸ்தித தீப
வச் சித்தவ்ருத்தி ரஹிதோ பவதி. ஆசார்யாநு
க்ரஹ ஜநிதஜ்ஞாநதீக்ஷயா பஞ்ச பாஶநாஶ: க்ரிய
தே. ததா, பஞ்சத்த்வ ஶாஸ்த்ரேண ஸ்வேஷ்டேஶா

𑌭𑌾𑌵𑌃; 𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌭𑍂𑌤𑌨𑌾𑌶𑌃; 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿
𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌨𑌾𑌶𑌃; 𑌤𑍈𑌜𑌸 𑌵𑍈𑌕𑌾𑌰𑌿𑌕
𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌮𑌨𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯 𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯 𑌨𑌾𑌶𑌃;
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑌤𑍍𑌤𑍍𑌵 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨𑌾𑌹𑌂𑌕𑌾𑌰 𑌨𑌾𑌶𑌃; 𑌗𑍁𑌣𑌤𑌤𑍍𑌤𑍍𑌵
𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌨𑌾𑌶𑌃; 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨
𑌗𑍁𑌣𑌤𑌤𑍍𑌤𑍍𑌵 𑌨𑌾𑌶𑌃; 𑌕𑌲𑌾 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌰𑌾𑌗𑌨𑌾𑌶𑌃; 𑌅𑌧𑍋𑌮𑌾𑌯𑌾𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌕𑌲𑌾𑌕𑌾𑌲
𑌨𑌿𑌯𑌤𑌿𑌨𑌾𑌶𑌃; 𑌮𑌾𑌯𑌾𑌯𑌾𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯 [illegible] 𑌮𑍋𑌹
𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌕𑌾𑌰𑍍𑌯 𑌨𑌾𑌶𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌪𑌾𑌶 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌬𑌿𑌨𑍍𑌦𑍁
𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌶𑌿𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵 𑌪𑌞𑍍𑌚𑌕 𑌵𑌾𑌕𑍍 𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯 𑌕𑌲𑌾
𑌪𑌞𑍍𑌚𑌕𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌭𑍁𑌵𑌨 𑌪𑌦𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾𑌂 𑌨𑌾𑌶𑌃 [illegible]
𑌬𑌿𑌨𑍍𑌦𑍁 𑌪𑌾𑌶𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, [illegible] 𑌕𑌰𑍍𑌮𑌸𑌾𑌮𑍍𑌯 𑌦𑌰𑍍𑌶
𑌨𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮 𑌪𑌾𑌶 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, [illegible]
𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨𑌾𑌣𑌵 𑌪𑌾𑌶𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, [illegible]
[illegible]
[illegible] 𑌜𑍍𑌞𑌾𑌨 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 [illegible]
𑌶𑌿𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 [illegible] 𑌭𑌵𑌤𑌿. [illegible]
[illegible] 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, [illegible] 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 [illegible]
[illegible] 𑌕𑌾𑌰𑌣 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 [illegible] 𑌨𑌾𑌶𑌃. [illegible]
𑌪𑌾𑌶𑌨𑌾𑌶𑌃 [illegible]
𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌂 [illegible] 𑌶𑌿𑌵𑌾𑌦𑌿 [illegible]
[illegible] 𑌵𑌿𑌷𑌯 𑌜𑍍𑌞𑌾
𑌨𑌾𑌤𑌿. [illegible] 𑌨 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿. [illegible]
𑌵𑌿𑌹𑌾𑌯 [illegible] 𑌤𑌦𑌾 𑌨
𑌚𑍇𑌷𑍍𑌟𑌤𑍇.

𑌦𑌶𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇. 𑌤𑌦𑍍𑌯𑌥𑌾 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑍂𑌪𑌂,
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌂, 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌆𑌤𑍍𑌮𑌰𑍂𑌪𑌂, 𑌆𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶
𑌨𑌂, 𑌆𑌤𑍍𑌮𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌶𑌿𑌵𑌰𑍂𑌪𑌂, 𑌶𑌿𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌂, 𑌶𑌿𑌵
𑌯𑍋𑌗𑌃, 𑌶𑌿𑌵𑌭𑍋𑌗𑌃. 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑍂𑌪𑌂
[illegible] 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 [illegible] 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂,

𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌏𑌤𑌤𑍍 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌅𑌯𑌾 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌏𑌤𑌾𑌨𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍀𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍍 𑌵𑌿𑌸𑌰𑍍𑌜𑌨𑌂. 𑌇𑌤𑌃𑌪𑌰𑌾𑌤𑍍𑌮𑌤𑍍𑌵𑍇𑌨 𑌏𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂. 𑌆𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌏𑌤𑌤𑍍 𑌷𑌟𑍍𑌤𑍍𑌰𑌿𑌂𑌶𑌤𑍍 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌜𑌡𑌾𑌨𑌿; 𑌏𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂. 𑌆𑌤𑍍𑌮𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌬𑌨𑍍𑌧𑌦𑌶𑌾𑌯𑌾𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌦𑌶𑌾𑌯𑌾𑌮𑌪𑌿 𑌶𑌿𑌵 𑌏𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌉𑌪𑌕𑌰𑍋𑌤𑍀𑌤𑌿 𑌸𑍍𑌵𑌸𑍍𑌵𑌤𑌂𑌤𑍍𑌰 𑌹𑌾𑌨𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂. 𑌮𑍁𑌕𑍍𑌤𑌦𑌶𑌾𑌯𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑍋𑌪𑌕𑌾𑌰𑌃 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌮𑌿𑌤𑌿𑌚𑍇 𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑌾𑌶𑌬𑌦𑍍𑌧𑌦𑌶𑌾𑌯𑌾𑌂 𑌪𑌾𑌶𑌮𑍋𑌚𑌕𑌶𑍍𑌶𑌿𑌵 𑌏𑌵. 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌪𑌞𑍍𑌚𑍋𑌪𑌕𑌾𑌰 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍇𑌣 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑍋 𑌭𑌵𑌤𑌿. 𑌤𑌤𑍍 𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌦𑌶𑌾𑌯𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰 𑌉𑌪𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑌂. 𑌶𑌿𑌵𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌷𑌡𑌧𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑌃, 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌅𑌨𑍁𑌪𑌮𑍋𑌦𑌾𑌰𑌃, 𑌸𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪 𑌇𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂.

𑌷𑌡𑌧𑍍𑌵𑌨𑌾𑌂 𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇. 𑌤𑌥𑌾𑌹𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌧𑍍𑌵𑌾, 𑌪𑌦𑌾𑌧𑍍𑌵𑌾, 𑌵𑌰𑍍𑌣𑌾𑌧𑍍𑌵𑌾, 𑌭𑍁𑌵𑌨𑌾𑌧𑍍𑌵𑌾, 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌧𑍍𑌵𑌾, 𑌕𑌲𑌾𑌧𑍍𑌵𑌾 𑌚𑍇𑌤𑌿 𑌷𑌡𑌧𑍍𑌵𑌾𑌃. 𑌤𑌤𑍍𑌰 𑌹𑍃𑌦𑌯𑌾𑌦𑌿 𑌷𑌡𑌙𑍍𑌗𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌃, 𑌈𑌶𑌾𑌨𑌾𑌦𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌃, 𑌆𑌹𑍇𑌤𑍍𑌯𑌕𑌲𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌃 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌧𑍍𑌵𑌾. 𑌶𑌿𑌵𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮 𑌇𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌪𑍀𑌤𑌿 𑌪𑌦𑌾𑌨𑌿 𑌪𑌦𑌾𑌧𑍍𑌵𑌾. 𑌅𑌕𑌾𑌰𑌾𑌦𑍍𑌯𑍇𑌕𑌪𑌞𑍍𑌚𑌾𑌶𑌦𑍍𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌵𑌰𑍍𑌣𑌾𑌧𑍍𑌵𑌾. 𑌕𑌾𑌲𑌾𑌗𑍍𑌨𑌿𑌭𑍁𑌵𑌨𑌾𑌦𑌾𑌰𑌭𑍍𑌯 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌭𑍁𑌵𑌨𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌶𑌤𑌦𑍍𑌵𑌯𑌾𑌧𑌿𑌕𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌂𑌶𑌤𑌿 𑌭𑍁𑌵𑌨𑌾𑌨𑌿 𑌭𑍁𑌵𑌨𑌾𑌧𑍍𑌵𑌾. 𑌶𑌿𑌵𑌾𑌦𑌿 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌨𑍍𑌤 𑌷𑌟𑍍𑌤𑍍𑌰𑌿𑌂𑌶𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌧𑍍𑌵𑌾. 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌕𑌲𑌾𑌃 𑌕𑌲𑌾𑌧𑍍𑌵𑌾.

𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇. 𑌶𑌿𑌵𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌯𑌯𑌾 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌸𑌾 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾, 𑌤𑌦𑌨𑍁 𑌯𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌦𑌦𑌾𑌤𑌿 𑌸𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾,

தயா ஓ¯ஃவொவஶஉ௩ம் யா ஓஓாதி ஸா ஶாஙிஃ நிவிடுகஸூஜ்ஞா௩ஜேவ ஶாஜ்ஞ்ரீதகஸூா இதி ஷ௯யூா. ஶிவ ஓஶடு௩ம் ஷட்¯ த்ரிம்ஶத்தவா௩ி ஜடா௩ி ஹதஅ்ர திரிக்த ஞூத்ராவிஓ்ர௭வ இதிஜ்ஞா௩ம் யொஓஓாதி ஷ் ஹவ வாாஉஶிவஇதிஜ்ஞா௩ம் ஶிவயொமஹூ¯ ஹூயும் ஶிவ ஹவ ஹ௭சவாவஷ்ூா௩ம். ஶிவஹொமஷூ¯ விஓா ௩ஞூா௭வஷூ ஶிவசவா௩¯லவஃ. ஓஶகாயூர்ரஃ ஸூாவ்ருஃ ।

வணுஹ௭தா௩ாம் ா௭வ ஷூா௭வ ஷூஹாவ விஶெஷ வ்ராஷ்த வ்ராவக ம¯ண வணடு ஓஶடு௩ ஶ¯ஜ்ஞக்ஷாா்யி ஜெவதா அாஓஶ காயஉஷூி. தஓ்ரயா வ்ருயிவ்ரா ா௭வம் காி௩்ர யாாணெ ஷூா௭வ ஞதீ¯ஷெஷ்ணம், ஷூஹாவொ வருதா, விஶெஷொ ௩ா௩ாவிய ா௭வதா, வ்ராஷ்தராகாஶ வயடுஜ்ஞம், வ்ராவகஃ ஶதகொடி யொஜ௩ விஷ்ணுதா, சவஷ்டு ஊாம்ஸாூி ஹவ௩ம் ௩வஉணி வணுயொஹா ^காாதா, ம¯ணஃ ஸவடுஸஹ௩ம், வணும் ஷூணடுா௭வம், ஓஶடு௩ம் ஹவம் வியஜ்ஞா௩ம் ஸா ஜடா௭வா ஊஓ ஜெ௩்ரதி தஅஜடு௩ம் ஶ¯ஃஃ, சக்ஷுஶொ மகாாஃ, சயி ஜெவதா வு்ஹூா. ஜயஸ்ரா௭வம் ஶீதஷூஶடு ஓ்்வ சவசவம், ஷூா௭வம் சஜடுவம் ஓ்ராகாாம், ஷூஹாவஃ வத௩ம், விஶெஷஃ கொஉஜசவம், வ்ராஷ்தஃ ஓ்ருகூ்ரதி வயடுஜ்ஞம், வ்ராவகஃ ஜெஷிா௩்ரா ஓஶம¯ண யொஜ௩ விஷ்ணுசவம் ஸவஷ்ஸஉ¯ ஓ்ராத்ரகசவம் ஜெஹெ உ௭ஓ்ரா ஷ்ரெ்ரதொ உஷ்ஷிஉஜாதகம், ம¯ணஃ ஜிஹூா ஷூாஓ்¯காாணம், வணெடுா யாவஜ்ரம், ம்ாஓ்ரகஃ ஜ்ஞா௩ஓஶடு௩ம் ஶ¯ஸி ாவிஜயூதி த்ராமஃ, சக்ஷுஶொ வகாாஃ, சயிஜெவதா விஷ்ணுஃ. ஜ்யா௩ஸ்ரா௭வஉ¯ஷ்ண ஷூஶடுக்வவசவம், ஷூா௭வம் த்ரிகொணம், ஷூஹாவஉ௭ஷ்ூடுஜ்ஜ௩ம், விஶெஷஃ ஓக்ஷி

ணாஹ்ராதித்ரயம், வ்ராவ்ருதெஜாஹிநீவயஞ்ஞம், வ்ரா
வகஃ சயந்தகொடி யொஜந விஸ்தீர்ணம் தெஹெ
சூஹார நிதராஹய தெஜொநாமஸ்ராத்மகம்,
மணஃ ஸமயாதி தெஜஸ்விரவம் வணம் ரொஹி
தம், தபோந தீர்கஃ ஜ்ஞாநம், பாஜிமூர்த்திதி
த்ராமஃ, அக்ஷரொ ரகாரஃ, அயிதெவதா ரூத்ரஃ.
வாயொ ரவம் வருவத்வம், ஸ்ரவம் ஷட்
கொணம், ஸ்ஹாவஃ அரவம், விஶெஷொ தபவா
தாத்மகம், வ்ராவ்ருஃ ஸதாஶிவவயஞ்ஞம், வ்ராவகம்
ருக்ஷகொடி யொஜந விஸ்தீர்ணம் ஶரீரெ மதநாதி
வணாத்மகம், மணஃ வ்ரஜநம், வணெந தீக்ஷ்ணஃ,
ஸவம்வியஜ்ஞாநம் தபநம் பாஜி ரெஷஜ்ஜஜதி
த்ராமஃ, அக்ஷரொயகாரஃ, அயிதெவதாஈஶ்வரஃ.
ஆகாஶஸ்ரவம் நிரந்தராவகாஶஃ, ஸ்ரவம்
வ்ருத்தாகாரம், ஸ்ஹாவொ நிர்ஜ்ஜுகம், விஶெஷஸ்வ
க்ஷம், வ்ராவ்ருஃ ஶக்திதவயந்தம், வ்ராவகம்
வாயொஃபமணவம் ஶரீரெ ராமாதி வணாத்மக
வம், மணொ வடாகாஶ ஈஹாகாஶா தா,
வணெந யவஃ, ஸவம் வியஜ்ஞாநம் தபநம்.
பாஜிஃ ஸதஜ்ஜஜதித்ராமஃ அக்ஷரொஹகாரஃ அயி
தெவதாஸதாஶிவஃ. வணஹதாநாம் ஷஷ்டி காயம்
தபகாயம் ஹ்ருகாராந்தரெண கத்யதெ |

இதி த்ரிவதாயவிவெகஸாரஃ.

---

# ஆலயவிதியும் சென்னை அரசாங்கச் சட்டமும்

ஆலயமாவது, எங்கும் வியாபகராய் மறைந்திருக்குங் கடவுள், தம்மை ஆன்மாக்கள் வழிபட்டு உய்யும் பொருட்டுச் சாந்நித்தியராய் எழுந்தருளியிருக்கும் இடமாம். கிறீஸ்தவர், மகமதியர் முதலியோரது சேட்சு, மசூதி முதலியனவும், அங்கே நடக்கும் ஆசாரங்களும் அவர் மனம் போனவாறு ஒவ்வொருவரால் ஒவ்வோர் காலத்து உண்டாக்கப்பட்டன. நம்முடைய சைவாலயங்களும் அங்கே செய்யப்படும் பிரதிஷ்டை உத்ஸவம் பிராயச்சித்தம் முதலிய கிரியைகளும் சிவாகமவிதியின்படி நடைபெற்று வருகின்றன. விஷ்ணுவாலயக் கிரியைகள் வைஷ்ணவாகம விதியின்படி நடைபெற்று வருகின்றன. வேதாகம விதிகள் அக்காலத்து மன்னரின் சட்டமுமல்ல; பொதுஜனங்களுடைய அபிப்பிராயமுமல்ல; பல மதத்தரும் குழுமிய சட்டசபையின் தீர்மானங்களுமல்ல. வேத சிவாகம விதிகளை அருளிச்செய்தவர் சிவபெருமானே. நான்கு வேதங்களையும், இருபத்தெட்டாகமங்களையும், தமிழிலுள்ள பன்னிரு திருமுறைகளையும், சித்தாந்த சாஸ்திரங்களையும் பிரமாண நூல்களாகக் கொண்டு ஒழுகும் வைதிகசைவருக்கே ஆலயங்கள் உரியனவாம். சைவசாஸ்திரங்களைப் பிரமாணமாக ஏற்றுக்கொள்ளாத சுயமரியாதைக் கட்சிக்காரர், பிரமசமாஜத்தார், ஆரிய சமாஜத்தார் முதலிய குழுவினர்க்கும் சைவாலயங்கட்கும் எட்டுணையேனும் சம்பந்தமில்லை. சமயசாஸ்திரங்களை நம்பாமலிருந்துகொண்டு நாங்கள் சைவர்கள் என்று சொல்லிக்கொள்வது முழுப்பொய்யே. பைபிளை நம்பாத கிறீஸ்தவரும் உளரோ? கோரானை நம்பாத மகமதியரும் உளரோ? வேதாகமங்களைப் பதிவாக்கென விசுவசித்து ஒழுகும் வைதிக சைவோத்தமர்கட்கே சைவாலயங்களைப் பரிபாலிக்கும் அதிகாரம் உண்டு. அக்காலத்து அரசினரும் ஆகம விதியின்படி நடப்பதே ஆலயபரிபாலனமென்று கருதினர். ஆகமஸ்தானத்தில் அரசாங்கசட்டத்தை நிறுத்துவது அரச

தருமமாகாது. ஆகமத்தோடு முரணி ஆலயப்பிரவேசத்துக்குச் சட்டஞ்செய்த அரசாங்கம், ஆலயநிர்மாணம், பிரதிட்டை, பூசை, உத்ஸவம், நிவேதனம், ஆராதனை, உபசாரம், பிராயச் சித்தம் முதலிய அனைத்துக்கும் பிரமாணம் உண்டுபண்ணும் வன்மையுடையதுதானே. பகிரங்க அசைவர்கள், சைவசமயப் பிரமாணநூல்கள் இவையென்பது தெரியாதவர்கள், சிவ தீக்ஷை, விபூதிருத்திராக்ஷதாரணம், சிவாலயசேவை, திரி பதார்த்தவிவேகம் முதலிய சைவசதாசாரங்களெல்லாம் தெரி யாதவர், முரணுன பல மதத்தவர் முதலிய பலவகைப்பட்ட குழுவினரெல்லாங் கூடிய அரசாங்கசபை இராசாங்கத்தமர்ந்து வைதிகசைவசமயத்துக்குச் சட்டம் அமைப்பது இச்சமயி களது மானத்தைக் கெடுத்து விடுதலேயாம். ஆகவே, சமய ஞானம் சிறிதுமில்லாத அவர் சட்டத்தை ஆராய்ச்சியின்றி ஏற்றுக்கோடல் சைவர்க்குச் சிறிதும்அடாது. சைவர் அவற்றை ஆராய்தலாவது, அவை சமயப்பிரமாண நூல்களிற் காணப் படும் விதிகளை அநுசரித்தனவா எனக் காணுதலேயாம்.

வேதசிவாகம விதிகளை எதிர்த்துப் பழையன கழிதல் புதியன புகுதல் முதலிய எவ்வகைப்பட்ட மாற்றங்களையும் ஆலயங்களிற் புகுத்தச் சைவசமயிகட்குத்தானும் அதிகாரம் இல்லை. புதியவைகள் புத்திக்குப் பொருந்துவனபோலத் தோன்றினும் ஆகமவிதிக்கு விரோதமாயின் அவைகளை ஆலயங் களிற் புகுத்துதல் தகாது. ஆலயங்களை நடாத்தும் விதிகள் வேதாகமங்களே. சந்தேக விபரீதங்கள் வருமிடத்து ஆகமவிதி களை ஆராய்ந்து அவற்றின்படியே அக்கிரியைகளை நடத்தல் வேண்டும். அரசனின் ஆணையின்வழி நடவாதோர் தண்டிக்கப் படுதல்போல, வேதாகமவிதிகளை மீறி நடப்போர் தப்பாது தண்டிக்கப்படுவர். அது "அருளினு லுரைத்தநூலின் வழி வாராததன்மஞ் செய்யி—னிருளுலா நிரையத் துன்பத் திட்டி ரும் பாவந் தீர்ப்பன்" எனச் சித்தியாரிற் கூறப்பட்டனவாற் றுன் உணரப்படும்.

பிராமணர்முதற் புலையரீறுகச் சிவபெருமானை வழிபடும் எல்லாச் சாதியாரும் சைவர் எனப்படுவர். உயர்ந்த நான்கு வருணத்தாரும் அநுலோமரும் ஓமத்தோடு செய்யப்படுவ

தாகிய ஔத்திரி தீக்ஷைக்கு யோக்கியர் எனவும், மற்றையோர் ஔத்திரி தீக்ஷைக்கு அங்கமாயுள்ள நயனதீக்ஷை, பரிசதீக்ஷை, வாசகதீக்ஷை, மானசதீக்ஷை, சாத்திரதீக்ஷை, யோகதீக்ஷை என்னும் அறுவகைத் தீக்ஷைகளுள் அவரவர் சாதிக்கும் பரிபக்குவத்துக்குமேற்ப ஒரு தீக்ஷை பெறுதற்கு யோக்கியர் எனவும் உண்மைநூல்கள் வற்புறுத்துகின்றன. தூலலிங்கமாகிய தூபியையேனும் திருக்கோபுரத்தையேனும் தரிசித்து அவற்றுக்கெதிரே பத்திரபுஷ்பந் தூவி அருச்சித்து நமஸ்கரிப்பது அவர்களுக்குச் சிவபூசை. சூரியவிம்பத்தினடுவே சதாசிவமூர்த்தி எப்பொழுதும் எழுந்தருளியிருப்பர் என்று நினைத்து அவருக்கெதிரில் பத்திரபுஷ்பங்களைத் தூவித் தோத்திரஞ் செய்வதும் அவர்களுக்குச் சிவபூஜை. கோயில்களில் வெளிப்பிராகாரத்தைத் திருவலகிடுதலும், நைவேத்தியத்துக்கு விறகு கொடுத்தலும், அபிஷேகஞ்செய்தற்குக் கோரோசனை கொடுத்தலும் அவர்களுக்குச் சரியை. வருத்தமற உய்யும் வழியிலே,

> “ தூவியினைக் கோபுரத்தை யீசனெனக் கண்டுதொழு
> பாவமறும் வாய்த்துறுமின் பம் ”

என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, சிவாகமங்கள் பெருங்கோபுரங்களை நிருமிக்கும்படி விதித்ததும், உற்சவ காலங்களில் மூர்த்தங்கள் திருவுலாக்கொண்டருள விதித்ததும் பெரும்பான்மை தாழ்ந்தசாதியார் பொருட்டேயாம்.

பிரதிலோமர் முதலிய தாழ்ந்தசாதியாருள் இருவினையொப்பு, மலமரிபாகம், தீவிரதர சத்திநிபாதம் உடையவர்களாயிருப்பின் அவர்கள் ஞானதீக்ஷைக்கே உரியவர்களாவர். அவர்கள் எந்த விதத்தாலும் கிரியாதீக்ஷைக்கு உரியராகார். சிவஞானபோத மாபாடியத்திலே, சிறப்புப்பாயிரத்திலே “சைவத்திலே தீக்ஷை முதன்மையாயின் வருணம் ஆச்சிரமம் பற்றித்தாரதம்மியம் கூறுதல் பொருந்தாதெனின் ; தீக்கைப்பின் விதிக்கப்படும் ஆசாரங்களெல்லாம் வருணமும் ஆச்சிரமும் பற்றியே தாரதம்மியம் ஓதலானும், சிவதீக்கை ஆன்மாவிற்கேயன்றி வைதிகச் சடங்குபோல உடம்பு முதலியவற்றிற்கு அன்றெனச் சித்தாந்தசாராவளி முதலியவற்றிற் கூறுதலின் அத்தீக்கையால் உடம்பின் கண்ணதாகிய சாதி நீங்காமை

யானும், சாதியுந் தீக்கையாற் கழியுமாயின் ஆதிசைவம் மகா சைவம் அநுசைவம் அவாந்தரசைவம் என்னும் பகுப்பு ஏலாமையானும், மகாசைவருக்கு விதித்த ஆசாரம் அவாந்தர சைவராற் செய்தல் கூடாமையானும்'' எனக் கூறப்பட்டிருக்கிறது. சிவஞானபோதம் எட்டாஞ் சூத்திரம் முதலாம் அதிகரண வெண்பாவில் "தவஞ்செய்த நற்சார்பில் வந்துதித்து'' என மெய்கண்ட தேவநாயனார் கூறியருளினர். இதற்குச் சிவஞான சுவாமிகள் வகுத்த சிற்றுரையில் "தவஞ்செய்தற்குரிய உயர்ந்த குலத்தின் கண் வந்து தோன்றி'' எனவும், 'நற்சாதியில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலென்ற அருத்தாபத்தியான் இழிகுலத்தோர் தத்துவஞானத்துக்குரியரல்லரென்பது பெறப்பட்டது'' எனவுங் கூறப்பட்டிருக்கிறது. சிவஞானசித்தியாரிலே எட்டாஞ் சூத்திரத்தும் உச-ம் செய்யுளில் "இந்தப் பார்மே-ளுட்டிய நற்குலத்தினில் வந்தவதரித்து'' எனவும், இரண்டாஞ் சூத்திரம் கூo-ம் செய்யுளில் "தரையினிற் கீழை விட்டுத் தவஞ்செய்சாதியினில் வந்து'' எனவுங் கூறப்பட்டிருக்கிறது.

இத்திருவாக்குக்களினாலே இழிகுலத்தார் ஆதிகாலந் தொட்டு உள்ளவர்கள் என்பதும், அவர்கள் உண்மைச் சரியை, கிரியை, யோகங்களாகிய அழிவற்ற தவஞ் செய்தற்குரியர் அல்லர் என்பதும் வலியுறுத்தப்பட்டன. திருநாவுக்கரசு நாயனார் "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்'' என்னும் தேவாரத்தில் 'ஆதித்திராவிடர்' என்று சொல்லப்படுவோரைப் புகழ்ந்துள்ளார் எனவும் சிலர் கழறுகின்றனர். "புலையரேனும்'' என்ற இழிவும்மையானும், "அன்பராகில்'' என்ற எச்சத்தானும் இன்மையையும் ஏகதேசத்தையும் விளக்கியதன்றி இழிகுலத்தோரனைவரையும் சிவாலயத்தில் நுழைவிக்கவேண்டும் என்பதற்குப் போதிய சான்றாகாமை காண்க.

ஆன்மாக்கள் தாம் தாம் செய்த கன்மத்துக் கீடாகவே இறைவன் கட்டளைப்படி இயல்பாகப் பலவேறு பிறவிகளைப் பொருந்துகின்றன. கன்மமானது மூன்றுவிதமாம். அவை சாதி, ஆயுள், போகம் என்பனவாம். உமாபதிசிவாசாரியர் சிவப்பிரகாசத்திலே "கன்மநெறி திரிவிதநற் சாதியாயுட்

போகக் கடனதென வருமூன்று முயிரொன்றிற் கலத்தல்—
தொன்மைய தூழல்ல துணவாகா" எனக் கூறியிருப்பதும்'
அருணந்திசிவாசாரியர் சித்தியாரிலே, "பேறிழவின்பமோடு
பிணிமூப்புச் சாக்காடென்னு மாறுமுன்கருவுட்பட்ட தவ்விதி
யனுபவத்தா—லேறிடும்" எனக் கூறியிருப்பதும், சர்வாத்ம
சம்புசிவாசாரியர்,

**அத்ர ஜாதிகுலாத்யபிமாநாஸ்பதம் ஸ்தூலதேஹம்**

(ஈண்டு சாதி, குலம், பிறப்பு முதலியவற்றுன் அபிமானஞ்செய்
தற்கிடமாகிய இந்தத் தூலதேகம்.) இதற்குப் பிரமாணங்களாம்.
கன்மநெறியாகிய ஜாதி, ஆயுள், போகம் என்னும் மூன்ற
னுள்ளே சாதியை மாத்திரம் சமப்படுத்த முயலுகின்றவர்
கள் ஆயுளையும் போகத்தையும் சமப்படுத்த முயன்றிலர்.
இயலாமையாற்போலும்! இவை இயலாதாகவே, சாதியை
மாத்திரம் சமப்படுத்த இயலுமெனக்கொண்ட இவர் புத்தி
வன்மை வியக்கத்தக்கதே! மனிதர்களுக்குள்ளே பேதம்
வேண்டுவதில்லை எனக் கூறுஞ் சமரசஞானிகள், மேலைத்
தேசத்தார், கீழைத்தேசத்தார் எனப் பேதங்கொள்வதும்
குற்றமாம். ஓடுஞ் செம்பொன்னும் சமமென மதித்து, உலக
போகங்களை வெறுத்து, மேலான நிலையிற் கூடும் சமரச
ஞானத்தை இடைப்பட்ட நிலையில் அநுட்டானத்திற்குக்
கொண்டுவரும்படி ஏவுதல் துன்பத்துக்கிடமேயாம். அபேத
மாயிருக்குந் தன்மை, மனமிறந்த நிலையில் வருவதன்றி
மனமுள்ளவரையும் பேதமுமுண்டு.

இனி, நமது தேகத்திலுள்ள அங்கங்களுள்ளே கரங்க
ளுக்குப் பெருமையும், கால்களுக்குச் சிறுமையும், வலக்கரத்
துக்கு மேன்மையும், இடக்கரத்துக்குச் சிறுமையும் கொள்வது
உண்மையியல்பாயினுமாகுக; பழக்கவாசனையாயினும் ஆகுக.
தேகம் முற்றும் நமக்குரியதன்றோ? எந்தப் பகுதியையேனும்
நாம் சேதிக்க உடன்படுவோமா? உடன்படோம். அங்ஙன
மாகவும், ஒரு பொருளை இடக்கையால் ஒருவன் கொடுத்தல்
வாங்குதல் செய்யின் அதிருப்தியையும், வலக்கையாற் செய்
வது திருப்தியையும் உண்டாக்குகின்றது. கையாலியற்று
வதை ஒருவனுக்குக் காலாற் செய்தல் எத்துணைப்பெருங் குற்ற

மாகக் கருதப்படுகிறது. அதுபோல் ஆசாரமுடைய மேற்குலத்தோர் வலக்கரம் போல்வர். ஏனையர் இடக்கரம் போல்வர். அநாசார நெறியுடைய கீழ்க்குலத்தோர் கீழ் அவயங்களையும், ஏனையர்மேல் அங்கங்களையும் போல்வர் என்றே விவேகிகள் கருதுவர்.

இந்த உடம்போடழியும் உலக இன்பத்துக்குக் காரணமாகிய சுயராச்சிய வாழ்வை விரும்பி, அழியாத இம்மை மறுமை இன்பத்துக்கு ஏதுவாகிய சமயாசாரத்தைக் கைவிடும்படி போதிப்பதுந் தருமமாகுமா? நமது கடவுளை இழந்து, சமயத்தைப் பறிகொடுத்து, வேதாகமக்கொள்கைகளை அழித்துவிட்ட பின் சுயராச்சியம் பெற்றுக்கொள்வது எதற்காகவோ? சாஸ்திரங்களையும் புராதனவழிகளையும் மீறி நடத்தல் சிவத்துரோகத்தின் பாற்படும். சிவத்துரோகம் பொல்லாதது! பொல்லாதது!!

"சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறு மாதமிலிநாயேன்" "கோத்திரமுங் குலமுங்கொண் டென் செய்வீர்" என்னும் திருவாக்குக்களையும், இவைபோன்ற பிறசெய்யுட்களையும் போலிச்சைவர் சிலர் சொல்லி, இழிந்த சாதியாராயினும் சுத்தமுடையவராயிருப்பின் ஆலயப்பிரவேசம் செய்யலாமென வாதாடுகின்றனர். மாணிக்கவாசக சுவாமிகள் முதலாயினோர் முறுகிவளர்ந்த அன்புமேலிட்டவிடத்தும், ஞானநிட்டை கைவரப்பெற்றவிடத்தும் சாதி முதலியன முன்னிற்கா எனக் கூறியதேயன்றி, எல்லாச்சாதிகளையும் ஒன்றுபடுத்தவேணும் நீக்கிவிடவேணும் கூறியதன்று. ஞானநிட்டையுடைய ஜீவன்முத்தர்களுக்கு இவ்வுலகத்தில் இருவினைகளுமில்லை. வினைகளைச் செய்தாராயினும் ஒரு பலனை நாடுவதுமில்லை. பலனைக் கருதாது வினைகளைச் செய்யுங் காலத்தும் சமாயாசாரம், தவம் மனச்சஞ்சலம் முதலிய யாவும் இல்லை. இவ்வாறொன்றுமின்றிப் பாலரைப்போல இவைகளைச் செய்யாதிருப்பினும் இருப்பர். செய்யினும் பித்தர்போல் நியதியில்லாது நேர்ந்தபடி செய்வர். அவ்வாறு செய்யுங் காலத்தும், பேய் பிடிக்கப்பட்டவன் போல சிவமே தாமாக நின்று செய்வர். இதுவன்றிப் பரமானந்தமேலீட்டினால் பாடலாடல்களைச் செய்திடினும் செய்வர்.

அன்புட ேனாக்கி நிற்ப ரழுவர்கை தொழுவர் வீழ்வ
ரின்புற வெழுவர் பின்பா லேகுவ ரிரங்கி மீள்வர்
நன்பகல் கங்குல் காணார் ஞானநல் லறிவே கொண்டு
கொன்புனை பித்தர் பாலர் பிசாசர்தங் கொள்கை யானார்

என்னுந் திருவாதவூரர்புராணச் செய்யுளால் மாணிக்கவாசக சுவாமிகளுக்கு இக்குணங்கள் பொருந்தப்பெற்றமை அறிக.

மேற்காட்டிய தமிழ்வேதத்தைப் பிரமாணம் காட்டி, சாதி குலம் கோத்திரம் பிறப்பு முதலிய பேதம் இல்லை; அவைபற்றிப் உயர்வுதாழ்வுகளுமில்லை என்று வாதாடும் சைவர்கள், "தந்தை யார் தாயாருடன் பிறந்தார் தாரமார் புத்திரரார் தாந்தா மாரே" என்னும் தேவாரத்துக்கும் தந்தை முதலிய முறைகளெல்லாம் பொய்; சைவத்தில் அம்முறை வேற்றுமை இல்லை. ஆகையால், முறைகெட்டு நடக்கலாம் என்று துர்அர்த்தம் செய்யப் பின்னிற்கமாட்டார்கள்.

உயர்சாதியாருள்ளும் ஆசாரமில்லாதவர் ஆலயத்திற் பிரவேசிக்கவில்லையா? எனின், அநாசாரமுடையவர்களைப் பிரவேசிக்க விடாது தடுத்தலும், பிராயச்சித்தம் செய்தலுமே உண்மையான ஆலயபரிபாலனமாகும். அதுவன்றி, (ஆசாரத்தை ஒருசேரக் கைவிடுதல் தகாது.) ஆலயத்தைக் கேடடையும்படி விட்டு, மற்றொரு பெருங்கேட்டிற்கு அதனையே ஆதரவாகப் பேசிவருவது ஆலயத்தை மேலும் நாசமாக்குவதாகவன்றோ முடியும்? நமது சரீரத்திலே ஓர் புண் வரின் தகுந்த பரிகாரஞ் செய்து அதனை மாற்றுவதை விடுத்து, மேலும் பல புண்களை உண்டுபண்ணிக்கொண்டு அலைபவர் ஒருவரும் இல்லை. இத்தேசம் புண்ணியபூமி. மேல்நாடு மிலேச்சதேசம். புண்ணிய பூமியிற் பாவிகளும், மிலேச்சபூமியிற் புண்ணியர்களுமிருக்கிறார்கள். இங்கே யுள்ள பாவிகளை அங்கே துரத்திவிட்டு, அங்கே யுள்ள புண்ணியர்களை இங்கே அழைக்க ஒருவராலும் முடியாது. இங்கேயுள்ள பாவிகளை இங்கே வைத்துத் திருத்தல் வேண்டும். அங்கே யுள்ள புண்ணியரை அங்கேவைத்து மகிழ வேண்டும் என்பதாம்.

பெரியபுராணம் முதலிய உண்மைநூல்களைக் குருமுகமாகப் படித்துணர்தற்கேற்ற புண்ணிய விசேடமில்லாத நவீனர்

சில்லோர் திருநாளைப்போவார்நாயனர், திருநீலகண்டயாழ்ப் பாணநாயனர் முதலிய மெய்யடியார்களது சரித்திரங்கள் தமது வைதிக சட்ட மறுப்பியக்கத்துக்குப் பிரமாணமாகு மெனக் கரைகின்றார்கள். அதனையும் ஆராய்வாம்.

திருநாளைப்போவார் நாயனர் சிவாலயங்கள் தோறும் பேரிகை, மத்தளம் முதலியவற்றுக்குத் தோலும் வாரும், வீணைக்கும் யாழுக்கும் நரம்பும், அருச்சனைக்குக் கோரோசனை யும் கொடுக்கும் நியதியுள்ளவர். ஆலயத்தின் திருவாயிற்புறத் தில் நின்று அன்பின்மேலீட்டினால் கூத்தாடிப் பாடுகின்றவர். ஒருநாள் திருப்புன்கூரிலே சுவாமியை நேரே கும்பிட நினைந் தார். இவரது மெய்யன்பினால் சுவாமி தமக்கு முன் இருந்த இடபதேவரை விலகும்படி செய்து காட்சிகொடுத்தருளினர். யாவராயினுந் தங்கள் தங்கள் சாதிக்கு விதித்த விதி கடவாது ஆலயவழிபாடு செய்வோர் முத்தி அடைவர். அவ்விதியைக் கடந்தோர் பயன்பெறார். திருநாளைப்போவார்நாயனர் தாம் இழிவாகிய புலையர்குலத்திலே பிறந்தமையால் அதற்கு ஏற் பவே தோல், வார் முதலியவற்றைக் கொடுக்கும் சிவத்தொண்டு பூண்டார். இவருக்குச் சிதம்பரதரிசனத்தில் வேட்கை மிக் கது. இந் நாயனர் தாம் தில்லைக்குச் செல்லின் கோயிலி னுள்ளே புகுதல் தமது சாதிக்கு இயையாது என்பதை நினைந்து போகாதொழிந்தார். ஆயினும், இவருக்கு ஆசை மேலும் மேலும் வளர்தலினலே 'நாளைப் போவேன்' 'நாளைப் போவேன்' என்று பல நாட்கள் கழித்து, அவ்வாசையை அடக்குதல் முடியாமையினலே தில்லையின் எல்லையை அடைந் தார். இவ்வாறு சென்றும், தில்லையில் வேதவிதிப்படி ஓமஞ் செய்யப்படுதலைக் கண்டு, உள்ளே செல்லாது, இரவும் பகலும் திருவெல்லையை வணங்கிவந்தார். இதனல் வேதாகமவிதிக்குப் பயந்து சாதிநெறி கடவாமல் நின்ற இந்நாயனரது பெருந் தன்மை எல்லாரும் அறிந்து உணர்ந்துகொள்ளத்தக்கது. இவர் கருத்தை முற்றுவிக்கத் திருவுள்ளங்கொண்ட சிவபெரு மான் திருமதிற்புறத்திலே தில்லைவாழந்தணரைக் கொண்டு அக்கினி வளர்ப்பித்து, அதிற் பிரவேசிக்கச் செய்து, இவ ருடைய புலையுடம்பை நீக்கிப் பிராமணமுனி வடிவங்கொடுத்தே

கனகசபையிலே புகுந்து தம்முடைய திருவடிகளை வணங்கிக் கொண்டிருக்கும்பொருட்டு அருள்செய்தார்.

"அல்குந்தங் குலநினைந்தே யஞ்சியணைந் திலர்நின்றார்"

"இன்னறரு மிழிபிறவி யிதுதடையென் றேதுயிலார்
அந்நிலைமை யம்பலத்து ளாடுவா ரறிந்தருளி"

"மாசுடம்பு விடத்தீயின் மஞ்சனஞ்செய் தருளியெழுந்
தாசின்மறை முனியாகி யம்பலவர் தாளடைந்தார்"

என்னுந் திருத்தொண்டர்புராணச் செய்யுட்கள் காண்க.

சிவபெருமானுடைய திருவடிகளில் இடையறாத பத்தியுள்ளவரும், சிவபெருமானைக் குறித்து இசைபாடுபவரும் ஆகிய திருநீலகண்டப் பாணனாரைத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் சீகாழியில் திருக்கோயிலின் வாயில் முன் நிறுத்தி இசைபாடச்செய்தனரன்றி, அப்பெரியார் கோயிலினுள்ளே சென்று இசைபாடச் செய்திலர். இதனை,

"கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்
தேயுமிசை யாழுங்க ளிறைவருக்கிங் கியற்றுமென
வாயபுகழ்ப் பிள்ளையா ரருள்பெற்ற வதற்கிறைஞ்சி
மேயதொடைத் தந்திரியாழ் வீக்கிமிசை விரிக்கின்றார்"

என்னுஞ் சேக்கிழார்நாயனார் திருவாக்கால் உணர்க.

திருநாளைப்போவார் முதலிய பெரியார்களுடன் இக்காலம் தேகாபிமானம் கொண்டு தீச்செயல் புரியும் கீழ்மக்களைச் சமப்படுத்திப் பேசவும் எழுதவும் துணிந்த தீச்செயல் விதியின் செய்கையன்றி வேறென் சொல்வது. திருநாளைப் போவாரை அக்கினியில் மூழ்குவித்து அழைத்துவரும்படி கூறியது முதலிய அருட்செயல்கள் சிறப்பிலக்கணங்களாம். அத்தகைய அருட்செயல்கள் வெளியான பின்னும் அவ்வக் காலத்துக் குறிப்பிட்ட அவ்வொருவரேயன்றி, அவர்கள் பந்துக்கள் ஒருவராவது நுழைந்தாரென்பதற்குப் பிரமாணம் இல்லை. ஆகவே, தத்தமக்கு விதித்த எல்லை கடந்து தாம் கருப்பக்கிரகம் முதலிய இடங்களிற் போக ஆசைப்படுவதும், போக முயலுவதும், போவதும், பெரும் பாவம்! பெரும் பாவம்!!

"எவரேனுந் தாமாக விலாடத் திட்ட திருநீறுஞ் சாதன முங் கண்டா லுள்கி—உவராதே யவரவரைக் கண்டபோது வுகந்தடிமைத் திறநினைந்தங் குவந்துநோக்கி" என்று திருநாவுக் கரசுசுவாமிகள் தேவாரத்திலும் பிறவிடங்களிலும் கூறப்பட் டிருக்கின்றனவேயெனின், இது தீண்டாதாரைக் கோயிலினுள் விடும்படி சொல்லப்பட்டனவன்று. எவராயினும் விபூதி, உருத்திராக்கங்களை அணிந்து, சிவபெருமானுடைய ஸ்ரீபாதங் ளில் மெய்யன்பு செலுத்துவாராயின், பத்திநெறி கடைப் பிடித்து, அவரைச் சிவமாகப் பாவித்து வழிபடக்கடவர். திருநீலநக்கநாயனார் தம்முடைய இல்லத்தின்கண்ணே ஓம குண்டத்துக்கருகில் திருநீலகண்டப்பெரும்பாணர் தங்குவ தற்கு இடங்கொடுத்தது முதலியன இப்பத்திநெறி பற்றி யேயாம்.

அகோரசிவாசாரியர் செய்த பரார்த்த நித்தியபூஜாவிதியி லும், சுப்பிரபேதத்திலும்,

> ஶிவத்விஜா கர்ப்பகேஹாநு மஹோத்ஸவே பவேத்ததா ।
> ஶிவதீக்ஷித விப்ராணாம் ஸந்த்யாந்தரே பவேத்ததா ।
> ஶ்ரோத்ரியாத்யாபக விப்ராணாம் ஸமாவேஶநேவ பவேத்ததா ।
> யஜ்வாநாமபி யதீநாம் ஸ்நாநமேவ பவேத்ததா ॥
> நரபதி வைஶ்யயோஶ்சைவ மஹாமண்டபே பவேத்ததா ।
> தீக்ஷாநைஷ்டிக ஶூத்ராணாம் பஹிர்மண்டபே பவேத்ததா ॥
> தீக்ஷாஸமய ஶூத்ராணாம் ந்ருத்தமண்டபே பவேத்ததா ।
> அந்ய ஜாதீயதீக்ஷாணாம் கோபுராத்வாரே பவேத்ததா ॥

ஆதிசைவராகிய குருமார் கருப்பக்கிருகத்திலும், சிவ தீக்ஷைபெற்ற பிராமணர் அந்தராளமண்டபத்திலும், வேதம் மாத்திரம் அத்தியயனஞ்செய்யும் வைதிகர் அர்த்தமண்டபத்தி லும் நின்றுவணங்கவேண்டும். யாகஞ்செய்பவனும், முனிவனும் முகமண்டபத்தில் நின்று சேவித்தல்வேண்டும். தீக்ஷைபெற்ற க்ஷத்திரியவைசியர் மகாமண்டபத்தில் நின்று சேவித்தல்வேண் டும். தீக்ஷைபெற்ற நைட்டிக சூத்திரர் வெளிமண்டபத்திலும், சமய தீக்ஷைபெற்ற சூத்திரர் நிருத்தமண்டபத்திலும் ஏனே யார்கோபுரவாயிலிலும் நின்று சேவிக்கவேண்டும் என்று சொல் லப்பட்டிருக்கிறது.

சுப்பிரபேதாகமம் பிராயச்சித்தப் படலத்திலே

[illegible]
[illegible]
[illegible]

அந்தராளர் முதலியவர் தீண்டினால் இருமுறை ஸ்நானஞ் செய்க. பிரமாதத்தாற் பரிசித்தால் ஸ்நானம்பண்ணிப் பின்பு பஸ்மதாரணஞ்செய்து, பஞ்சாக்ஷரத்தில் நூறுருச் செபிக்க எனவும்,

ஜாதிபேதவிதிப் படலத்தில்,

[illegible]

விராத்தியர்கள் எல்லாக் கருமங்களுக்குப் புறம்பானவர் கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

உத்தரகாரணாகமம் பாதுகாராதனவிதிப் படலத்திலே,

[illegible]
[illegible]
[illegible]

சண்டாளன் முதலியோர் சிவாலயத்தைத் தாண்டுதல் ஆகாது. மயக்கத்தினால் தாண்டின் சம்புரோக்ஷணஞ் செய்க.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

சண்டாளர், மிலேச்சஜாதி முதலியோர் கருப்பக்கிருகத் திற் போனாலும், முதலாம் ஆவரணத்திற் போனாலும், மடைப் பள்ளியிற் போனாலும் சம்புரோக்ஷணஞ் செய்க. முதலாம் ஆவரண வாசல்வரையிற் போனால் சாந்திஹோமம் செய்க. இரண்டாம் ஆவரணத்திற் போனால் சாந்திகும்பத்தாற் புரோ க்ஷிக்க. மூன்றும் ஆவரணத்திற் போனால் பஞ்சகவ்வியத்தினாற் புரோக்ஷிக்க.

ப்ரதமாவரணே ப்ராப்தே ஸோபாநாத் ப்ராக் விஶோதித: |
மண்டபாந்த: ப்ரவிஷ்டாய ஸம்ப்ரோக்ஷணம் ஸமாசரேத் |
ப்ராகாரமத்யதேஶேவாபி ஶாந்திஹோமம் ஸமாசரேத் |
[illegible] ப்ரவிஷ்டாய [illegible] |
த்விதீயாவரணே சைவ [illegible] ப்ரோக்ஷணம் பவேத் |

கள்விற்போர் முதலாவரணத்திற் சென்றாலும், மண்டபத்திற் சென்றாலும் சம்புரோக்ஷணஞ்செய்க. பாகசாலையிற் பிரவேசிப்பின் சாந்திஹோமஞ்செய்க. இரண்டாம் ஆவரணத்திற் பிரவேசிப்பின் பஞ்சகவ்வியத்தாற் புரோக்ஷிக்க.

ஜாதாஶௌசமயே [illegible] |
[illegible] |
[illegible] ப்ரவிஶேத் [illegible] |
ஸம்ப்ரோக்ஷணம் ப்ரகுர்வீத ப்ரதமாவரணே [illegible] |
[illegible] ஸம்பவேத் யதா
[illegible] ப்ரகுர்வீத த்விதீயாவரணே யதா
ப்ராதக்ஷிண்யக்ரமேணைவ [illegible] ப்ரதர்ஶயேத் |
விமாநம் தர்ஶயேச்சைவ தீபஸ்தாநம் ப்ரதர்ஶயேத் |

(உயர்ந்த ஜாதியாருக்கும்) ஜனனசௌசம், மரணசௌசம் சம்பவிக்குமாயின், இரண்டாம் ஆவரணத்தைப் பிரதக்ஷணம் செய்து பலிபீடத்தைத் தரிசிக்க. விமானத்தையாவது, ஆலய தீபத்தையாவது தரிசித்தலுமாம். அவர்கள் பிரவேசித்தால் பிராயச்சித்தம் பண்ணுக.

இப்படியே காமிகம் முதலிய ஆகமங்களிலும் கூறப்பட்டிருக்கிறது. சுப்பிரமணியக்கடவுள் அகத்திய முனிவருக்கு உபதேசித்தருளிய சிவதருமோத்தராகமத்திலே, "புன்புலைச்சிமனைபுகுந்தாற் புத்தியிழப்பாகிற் போக்கிடுக மட்பாண்டமுற்புனிதம் புரிக" என்றற்றொடக்கத்தனவாக, உயர்ந்த சாதியினர் வீட்டினுள்ளே புலையர் முதலோர் புகுந்திடின் பிராயச்சித்தங்கள் விதிக்கப்பட்டுள்ளன. இது இவ்வாறாயின், அதி பரிசுத்தமாகிய ஆலயத்தில் அவர்களைப் பிரவேசிக்கவிடுவது மிகப் பெருங் குற்றமாகவன்றோ முடியும்? பாஞ்சராத்திராகமத்திலே

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

சண்டாளன் முதலியவர்கள் கோயிலி னுள்ளே பிரவேசித்தால் மட்பாண்டங்களை எறிந்துவிட்டு மந்திரபூர்வமாகச் சுத்தி செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஒவ்வொருவரும் தத்தம் சாதிக்குக் கூறிய ஆசாரங்களில் வழுவாது நடந்து ஆலயவழிபாடு செய்வாராயின் முத்தியடைவர். அங்ஙனமாக நடவாதவர் பிசாசராவர் என்பது ஆகமசம்மதம்.

[illegible]

[illegible]
[illegible]
[illegible]

சுருதியாகமங்கள் எனது கட்டளை. எவன் அவற்றை உல்லங்கனம் செய்கிறானோ அவன் ஆஞ்ஞையை மீறியவன்; எனக்குத் துரோகி; சைவன் அல்ல; கோரமான நரகத்தில் கிடந்து வருந்துவான்.

பகவத்கீதை

[illegible]
[illegible]
[illegible]

சாஸ்திரவிதியைக் கடந்து விரும்பியபடி செய்பவன் சித்தியடையான்; அவனுக்குச் சுகமும் மேலான கதியுமில்லை. சாஸ்திரவிதியை அறிந்து கருமஞ்செய்க.

# குரு லிங்க சங்கமம்

[அச்சுவேலி சிவஸ்ரீ கு. வைத்தீஸ்வரக் குருக்கள்]

(முற்றொடர்)

சிவலிங்கபூசையிலே செய்யப்படும் கிரியைகள் ஒவ்வொன்றும் ஞானார்த்தமுடையன. சிவபெருமானுடைய திருவடிகளிலே பொருந்துதற் கறிகுறியாகவே பாத்தியமும், அருட்டிருமுகத்திலே பொருந்துதற் கறிகுறியாகவே ஆசமனமும், பரை அதீதமான திருமுடியிற் பொருந்துதற் கறிகுறியாகவே அருக்கியமும் கொடுக்கப்படுகின்றன. புஷ்பம்—மோக்ஷவின்பத்தை அடைவதற்கு அறிகுறியாம். திருமஞ்சனம்—ஆன்மாவின் மலத்தைச் சுத்திசெய்வதற்கு அறிகுறியாம். அஞ்ஞானவாசனையை நீக்குதற்கு அறிகுறியாகவே தூபம் சமர்ப்பிக்கப்படுகின்றது. தீபம்—அந்த அஞ்ஞானம் நீங்கியவிடத்து விளங்கும் ஞானத்துக்கு அறிகுறியாம். தற்போதத்தை நீக்குதற்கு அறிகுறியாகவே நைவேத்திய உபசாரம் செய்யப்படுகிறது. கர்ப்பூரதீபம் சமர்ப்பித்தல் ஆன்மா சிவத்துடன் அத்துவித நிலை அடைதலைக் குறிக்கும். இவ்வுண்மை "தீதணையாக் கர்ப்பூர தீபமென நானகண்ட—சோதியுட னொன்றித் துரிசறுப்ப தெந்நாளோ" என்னும் தாயுமானசுவாமிகள் திருவாக்கால் உணரப்படும். இப்படியே ஒவ்வொரு கிரியைகளும் ஆன்மாக்கள் பொருட்டே வைக்கப்பட்டனவாம்.

இனி, அந்தர்யாகபூஜையாவது இருதயகமலத்திலிருக்கும் ஆன்மலிங்கத்திற் பூசித்தலேயாம். இது உட்பூசை எனவும் கூறப்படும். முன்னர் உயிரிடமாக நின்று அருளுவாரென்று கூறியதும் இதனையே. எமது ஆசாரியசுவாமிகளும் "மனமணி லிங்கமாக" என்று கூறியருளினார். ஈண்டு மனமென்றது ஆன்மாவுக்குப் பெயராகக்கொண்டு ஆன்மலிங்கமே சொல்லப்பட்டதெனக் கொள்ளப்படும்.

அகத்தியமுனிவர், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முதலிய மஹான்களாற் சிவபாவனையோடு வழிபட்டன யாவும்

சிவலிங்கமாயிருக்கும். தமிழ்முனிவர் திருக்குற்றாலத்தில் சிவ பாவனையோடு விட்டுணுவைச் சிவலிங்காகாரமாகச் செய்து வழிபட்டார். திருஞானசம்பந்த பரமாசாரியர் காஞ்சிபுரத்திலே, திருமேற்றளி என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கும் விட்டுணு, சிவலிங்கமாகுக என்னும் பாவனையோடு தமிழ்வேதம் பாடியருள, உடனே விட்டுணு சிவலிங்க ரூபமாதலாகிய சிவ சாரூப்பியம் பெற்றனர் என்பர். குதிரையின் வாயிலே காண மிட்டுக் கட்டப்படும் தோற்பை, உத்தமோத்தம பத்தியிற் சிறந்த பாண்டியர் ஒருவரது பாவனையினால் சிவலிங்கமாயிற்று. திருவாப்புடையார்கோயிலிலே ஓர் அரசன் பொருட்டு நிறுத்தப்பட்ட ஆப்பானது சிவலிங்காகாரமாயிற்று. திருக்கன்றாப்பூரிலே ஓர் கன்று கட்டும் தறியைச் சிவலிங்க வடிவமாகக் கொண்டு பூசித்த ஓர் பிராமணப்பெண்ணின் பொருட்டு அத்தறி சிவலிங்க ரூபமாயிற்று. இங்ஙனம் புராணங்களிலே கூறப்பட்டுள்ளது. இதனாலேயே "சிவஞானிகள் பாவனையுற்றது சிவலிங்கம்" என்று பெரியோர் கூறுவர்.

சைவசமயத்தை அடைந்தவர்கள் சிவபெருமானுடைய திருவடியைச் சேர்தற்குரிய மார்க்கம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்காம். அவைகளுள்ளே சரியையாவது புறத்தொழிலினாலே உருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. கிரியையாவது புறத்தொழில், அகத்தொழில் என்னும் இரண்டினாலும் அருவுருத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. யோகமாவது அகத்தொழிலினாலே அருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. ஞானமாவது புறத்தொழில், அகத்தொழில் என்னும் இரண்டும் இல்லாமல் அறிவுத்தொழில் மாத்திரத்தினாலே அம்மூன்று திருமேனிக்கும் மேலாய் அகண்டாகார சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்து நின்ற சிவத்தினிடத்திலே செய்யும் வழிபாடு.

முத்தியாகிய பேரின்ப ரசத்தை அநுபவித்தற்கு அரும்பு போல் விளங்கும் சரியையும், மலர்போல் விளங்கும் கிரியையும், காய்போல் விளங்கும் யோகமும், கனிபோல் விளங்கும் ஞானமும் படிகளாக இருக்கின்றன. அரும்பில்லாமல் மலர் உண்டாகாதவாறுபோலச் சரியை இல்லாதவர்களுக்குக் கிரியை பயன்

கொடாது. மலர் இல்லாமற் காய் உண்டாகாதவாறுபோலக் கிரியை செய்து அதனாற் சித்தி அடையாதவர்களுக்கு யோகம் பயன் கொடாது. காயில்லாமற் கனி உண்டாகாததுபோல யோகமில்லாதவருக்கு ஞானம் பயன்கொடாது. கனி உண்ணாதவர் அதன் சுவையை அறியமாட்டாததுபோல ஞானமில்லாதவருக்கு முத்தியின்பங் கைகூடாது. அது,

விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே

எனத் தாயுமானசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியவாற்றான் உணரப்படும்.

இங்ஙனமாக, கிரியைகளிற் பயனில்லையென்று அவற்றை இகழ்ந்து, முத்தியடைய விரும்புவோர், படிவழியேறிச் செல்லாது கீழ்நின்று மலையின் உச்சிக்குப் பாய விரும்புவோரைப் போன்றவராவர். ஆகையால், அனைவரும் அகத்தும் புறத்தும் சிவபெருமானை வழிபடுதல் அத்தியாவசியகமேயாம்.

சிவபெருமான் எங்கும் வியாபகமாய் இருப்பினும், புறத்தே சிவலிங்கம் முதலிய திருமேனியும் குருவும் சங்கமமுமாகிய இம்மூன்று இடத்து மாத்திரமே தயிரில் நெய்போல விளங்கி நிற்பர். மற்றையிடங்களில் பாலில் நெய்போல வெளிப்படாது நிற்பர். ஆதலினாலே, சிவபெருமானைக் குரு லிங்க சங்கமாகிய இடங்களிலே விதிப்படி சிரத்தையோடு வழிபடல் வேண்டும்.

ஆசாரியராவார், தம்முடைய சந்தானத்துக்கேற்ற குருவினால் சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, நிருவாணதீக்ஷை, ஆசாரியாபிஷேகம் என்னும் நான்கையும் பெற்றுக்கொண்டு, அததற்கேற்ற ஆசாரங்களையும் அநுட்டானங்களையும் அநுட்டிப்பவர். பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சுத்தகுலத்திற் பிறந்த சூத்திரர் ஆகிய நான்கு வருணத்தாரும் குருவாதற்கு உத்தமர்கள். மற்றையோருக்கு ஒருக்காலும் குருத்துவமில்லை. பிராமணர்—பிராமணருக்கும் மற்றை மூன்று வருணத்தாருக்கும் குருவாவர். க்ஷத்திரியர்—க்ஷத்திரியருக்கும் ஏனையிரண்டு வருணத்தாருக்கும் குருவாவர். வைசியர்—வைசியருக்கும் சூத்திர

ருக்கும் குருவாவர். சூத்திரரால் சூத்திரருக்கே தீக்ஷாபலன் உண்டாம். ஞானமார்க்கத்தில் இந்த நியமம் இல்லை. (சிவார்ச்சனை முதலிய கிரியைகளைச் செய்யும்பொழுது சிவபெருமானை ஆண்டவனாகவும், தன்னை அடிமையாகவும் பாவித்து, அநாதி மல முத்தராகிய சிவபெருமானிடத்தே அன்புவைத்து, தனதல்லாத புவனபோகங்களை எனதென்னும் மமகாரமும், தானல்லாத தநுகரணங்களை யானென்னும் அகங்காரமுமாகிய இவ்விரண்டையும் நீக்கினவரே உத்தமர்.)

பிராமணர் முதலிய மூன்று வருணத்தாருள்ளும் ஞானசாரியர் இல்லாது நான்காம் வருணத்தாராய சூத்திரருள் ஞானசாரியர் உண்டாயின், அவ்வாசாரியனிடத்திலே பிராமணர் முதலாயினோர் ஞானோபதேசம் பெறலாம். வைதிகத்திலே பிரம இருடியாகிய துருவாசர் முதலாயினோர் முதன் மூன்று வருணத்தாருள்ளும் ஞானசாரியர் இல்லாமையால் நான்காம் வருணத்தாராகிய விதுரரிடத்திலே ஞானோபதேசம் பெற்றார்கள். சைவத்திலே ஆதிசைவராகிய அருணந்திசிவாசாரியர் நான்காம் வருணத்தவராகிய மெய்கண்டதேவரிடத்திலே ஞானோபதேசம் பெற்றார். சந்தியாகாலம் மூன்றிலும் கிரியை உபதேசித்த ஆசாரியருடைய பாதங்களைத் தியானம் பண்ணி, பின் ஞானம் உபதேசித்த ஆசாரியர் பாதங்களைத் தியானிக்க. ஆசாரியர் வேதாகமங்களைக் குருமுகமாகக் கேட்டு, அவைகளிலே சொல்லப்பட்ட திரிபதார்த்தங்களையும் சந்தேக விபரீதமற ஆராய்ந்தவரா யிருத்தல்வேண்டும். வேதாகமங்களிலே பேசப்படாதபொருளைத் தங்கள் மனசிலே கற்பித்துச் சொல்லும் ஆசாரியர்கள் நரகத்தில் விழுந்து வருந்துவார்கள்.

சிவாகமத்திலே விதிக்கப்பட்ட சமஸ்கார தீட்சையினாலே வாகீசுவரர்வாகீசுவரிகளிடத்திருந்து தோன்றியவர்களாகையால் ஆசாரியரை மனிதரென்று கருதலாகாது.

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் குருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருரூபம் சிந்தித்தல் தானே"

என்பது திருமந்திரம்.

பெருமிழலைக்குறும்பநாயனார் சமயாசாரிய மூர்த்திகளாகிய சுந்தரமூர்த்திநாயனாரை நியமமாக வணங்கியமையாலே அட்ட சித்திகளையும் பெற்று, ஸ்ரீபஞ்சாக்ஷரமே தமக்குச் சுற்றமும் பொருளும் உணர்வும் எனக் கொண்டார். சுந்தரமூர்த்திநாயனார் கைலாசத்தை அடைவதை முன்னரே அறிந்து, தாம் அவரைப் பிரிதற்கு ஆற்றாமையினால் முதனாள் யோக முயற்சியால் திருக்கைலையங்கிரியை அடைந்தார். இதனால் இவருடைய குருபக்தி முதிர்ச்சி நன்கு தெளியலாம். குரு, லிங்கம், சங்கமம் என்னும் மூன்றனுள் குருவருளால் முத்தியடைந்தோர் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், திருமூலர் முதலியோர் என்று சேக்கிழார் புராணத்திற்சொல்லப்பட்டது.

இலிங்கமானது தாவரலிங்கம், சங்கமலிங்கம் என இரு திறப்படும். தாவரலிங்கமானது ஆலயத்துள் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கமாம் என்றும், சங்கமலிங்கமானது அடியார்களது இருதயத்துள்ள இலிங்கமாம் என்றும் சிவாகமம் கூறுகின்றது. சலலிங்கமாகிய சங்கமத்தை அவமதித்து, அசலலிங்கமாகிய தாவரலிங்கத்தை வழிபடுவதனாற் பிரயோசனமில்லை என்பது சிவாகமநூற்றுணிபு. இதுபற்றியே "ஈசனுக்கன்பில்லா ரடியவர்க்கன்பில்லார்" என்று சிவஞானசித்தியாரும் கூறிற்று. சிவனடியார்களை "நடமாடுங் கோயில்" என்றருளிச்செய்தார் திருமூலநாயனார். வீடு பேற்றின் பொருட்டு மெய்யடியார்களை அடைந்து, அவர்கள் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவமெனக் கண்டு வழிபடுக என்று சிவஞானபோதம் பன்னிரண்டாஞ் சூத்திரத்திற் செப்பப்பட்டது. திருவேடத்தினியல்பை,

> தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமு
> நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்
> பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொன்
> மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே

என்றற்றொடக்கத்த திருநாவுக்கரசுநாயனார்புராணச் செய்யுளானும் பிறவாற்றானும் உணரப்படும்.

(தொடரும்)

# இ. மு. சுப்பிரமணியப்பிள்ளையாருக்கு திருப்பள்ளியெழுச்சி மோதக நிவேதனம்

## பூர்வபாகம்

ஐயா ! பிள்ளையாரே !

10—3—37-ல் தங்களுக்குச் செய்துகொண்ட நிவேதனம் அர்த்த ஜாமத்தின்போது செய்துகொண்டதுபோலும். அதனாலே தான் தூக்கமயக்கத்திலென்ன, பிறகு விழித்துப் பார்த்துக்கொள்ளலாம் என்று அசட்டையாயிருந்துவிட்டீர்கள் போலும் ! சிவநேசனும் மோதக நிவேதனத்திலுள்ள கூ வினாக்களுக்கும் பதில் எழுதத் தங்களை எச்சரித்தும் பதில் கிடைக்குமென்று எதிர்பார்த்தும் நின்றது.

பிள்ளையாரே ! பிழை பொறுத்தருளும். பிழை என்னுடையதே. அர்த்தநிசியில் பள்ளிக்குப் போகும் சமயத்தில் நிவேதனம் (விண்ணப்பம்) செய்துகொண்டால் பிரசாதம் (பதில்) கிடைக்குமா ? சமயந் தெரிந்தன்றோ வேண்டிக்கொள்ள வேண்டும் ?

### திருப்பள்ளியெழுச்சி வசனம்

ஐயா ! பிள்ளையாரே ! சைவப்பஞ்சாங்கத்தவரே ! தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தவரே ! புதுவருஷம் புலர்ந்தது. கோழி சாந்திர விரதங் கூவுகின்றது. பஞ்சாங்க கெணன வந்திகள் சௌரவிரதமில்லையென்று பாடுகிறார்கள். கார்த்திகைமீ கந்தர்சட்டியென்று சங்கூதுகின்றது. எக்காளம் ஐப்பசிமீ சஉ மகாநவமியென்று கொக்கரிக்கின்றது. திருச்சின்னம் புரட்டாசிமீ உஎஉ மகாநவமி விழாவாரம்பமென் றொலிக்கிறது. ஐப்பசிமீ ௩உ விஜயதசமியென்று ஜயபேரி முழங்குகிறது. எம்பெருமானே திருப்பள்ளி யெழுந்தருளாயே!

### மோதக நிவேதனம்

சாமீ ! அடியேனைத் தங்களிஷ்டன் பழைய விகடனே விகடனென் றுணர்ந்து, கொட்டாவிவிட்டுக் கூடியவரை யோசித்து எட்டாத விஷயத்தை எடுத்தெறிந்து தள்ளாமல், பழைய வினாக்கள் கூ-க்கும் அதன் தொடர்ச்சியான கீழ்க் காணும் கேள்விகட்கும் உத்தரம் தரல் வேண்டும். ஓங்கி நிற்கும் பெம்மானே !

முன்தொடர்ச்சி வினாக்கள்

(௧௪) ஐயா! 13-3-37-ல் அடியேன் விடுத்த மோதக நிவேதனத்திலுள்ள பதிமூன்று வினாக்களுக்கும் பதிலெழுதாத தாங்கள் இன்னும் சௌரமான விநாயகசதுர்த்தி, நவராத்திரி, கந்தசட்டி விரத மூட்டைகளைச் சுமந்துவருவது மிகப் பிழையாகுமன்றோ? துண்டுப் பிரசுரம் அச்சுப்போட இயலவில்லையென்று வைத்துக்கொண்டாலும், தங்கள் பிரமாதிவருட சைவப்பஞ்சாங்கத்திலே இதற்கென்றொரு தாளைச் சேர்த்திருக்கலாமே. அதற்கும் வகையில்லையென்று வைத்துக்கொண்டால், நாளது வருடப் பஞ்சாங்கத்திலே 17-வது பக்கத்திலே பிள்ளையார் வணக்கத்துக்கும் முன்னே அறிவிப்புச் செய்வதென்ன மதி? அந்த ஆறு வரியும் எழுதாதிருந்தால் அடியில் வரும் கேள்விகளாகிற கிரகங்கள் உம்மைப் பீடிக்கா. இந்தப் பாவங்கூடத் தெரிந்துகொள்ளாத ஜோதிஷரானால், தங்களால் கெணிக்கப்படும் பஞ்சாங்கத்தில் எம்போன்றவர்கட்கு எப்படி நம்பிக்கையுண்டாகும்? ஆகையால், முன் பிரசுரத்திலுள்ள ௧௩ வினாக்களுக்கும் கட்டாயம் விடை வேண்டுமென்பதே பதினாலாவது வினா.

(௧௫) நுமது பிரமாதிவருட சைவப்பஞ்சாங்கம் 17-வது பக்கத்தில், அறிவிப்பு என்பதன் கீழ் "நிகழும் பிரமாதி ஆண்டிலே நவராத்திரி ஆரம்பம் ஆவணி௴ 28௳ புதன்கிழமை; மஹாநவமி புரட்டாதி௴ 5௳ வியாழக்கிழமையே. சுமார்த்தர்கள் நவராத்திரி ஆரம்பத்தைப் புரட்டாதி௴ உ௯௳ வெள்ளிக்கிழமையிலும், மஹாநவமியை ஐப்பசி௴ 4௳ சனிக்கிழமையிலும் குறித்திருப்பது முற்றிலும் பிழை" என்றிருக்கிறதே. சுமார்த்தர்கள் நவராத்திரி ஆரம்பத்தையும் மஹாநவமியையும் ஷை தேதிகளில் குறித்திருப்பது பிழையென்று அர்த்தமா? அல்லது சுமார்த்தர்களுடைய நவராத்திரி ஆரம்பத்தையும் மஹாநவமியையும் ஷை தேதிகளில் குறித்திருப்பது பிழையென்று அர்த்தமா?

(௧௬) சுமார்த்தர்கள் குறித்திருப்பது பிழையென்றால் சுமார்த்தர்களல்லாத நும்போன்ற பிள்ளைகள், ஆசாரிகள், வைணவர்கள் ஷை தேதிகளில் குறித்திருப்பது சரியென்றுதானே ஆகின்றது. அவர்களை விடுத்துச் சுமார்த்தர்கள் குறித்ததுமட்டிலும் பிழையென்றலதற்குக் காரணம் தங்களுக்கு அவர்களிடத்திலுள்ள துவேஷமென்பதைத் தவிர வேறென்ன? இல்லையென்கிற பிச்சையை மருகி சொன்னாலென்ன? மாமி சொன்னாலென்ன?

(கஎ) சுமார்த்தர்களுடைய நவராத்திரியை மேற்படி தேதிகளில் குறித்திருப்பது பிழையென்றால், எந்தத்தேதிகளிற் குறிக்கவேண்டும்? நும் பஞ்சாங்கத்தில் எந்தத் தேதிகளிற் குறிக்கப்பட்டிருக்கிறது?

(கஅ) சுமார்த்தர்களுடைய நவராத்திரியைக் குறிக்க எமக்குத் தேவையில்லையென்பீரேல், ஆனிமீ 2உ வெள்ளிக்கிழமை சுமார்த்த அமாவாசையென்று குறிக்கத் தேவையென்ன? தேவையல்லாதவற்றைப் பிழையென்று குறிக்கத் தேவையென்ன?

(கக) சுமார்த்தர்களுடைய நவராத்திரியும் சௌரமானப்படி எமது பஞ்சாங்கத்தில் குறித்திருக்கிறபடியேதான் என்பீரேல், நும்முடையவும் நுமது சங்கத்தினுடையவுமான முற்பிரசுரங்களில் சுமார்த்தர்கள் சாந்திரமானிகளென்றே குறித்திருக்கிறபடியால், அவர்களுக்கும் சௌரமானப்படிதானென்பது தவறல்லவா?

(உ0) எதெப்படியானாலும் எனக்கு இஷ்டமிருந்தாற்றானே குறிப்பேனென்பீரேல், நுமது பஞ்சாங்க முகபாத்திரத்தில் சுமார்த்த, வைணவ, கிறிஸ்தவ, மகம்மதிய விசேடங்களும்......அடங்கியுள்ளன என்றிருப்பது ஏமாற்றலென்பதாக அல்லவா ஆகும்?

(உக) நுமது கோஷ்டியினரான சிலரைத் தவிர, உலகிலுள்ள பெரும்பாலோர்களான சைவர்களும், மடாதிபதிகளும், இதரர்களும் சாந்திரமானப்படியேதான் செய்தார்கள்; இனியுஞ் செய்யப்போகிறார்கள். ஆதலால், நுமது பஞ்சாங்க அறிவிப்பில் "கந்தர்சட்டியைச் சுமார்த்தர்கள் கார்த்திகைமீ 1உ என்பது பெரும்பிழை" என்றிருப்பதே மகாபிழையாகுமல்லவா?

## உத்தரபாகம்

(உஉ) பிரமாதிவருஷம் நவராத்திரிவிழா என்கிற நுமது துண்டுப்பிரசுரத்தில் காமிகாகமமென்றிருக்கிற பிரமாணவாக்கியம் "கன்யாசிதப் பிரதமா மாரப்ய நவப்யந்த முமாவிரதம்" என்றிருக்கிறது. இது ஒரு சுலோகத்தின் பாதி. இது அநுஷ்டுப் சுலோகமா? விருத்தமா? இதை ஸம்ஸ்கிருதத்தில் வரைந்தால் 18 அக்கரமாகும். இதை என்னென்பது? இது ஆதியான் குறைவா? ஆக்கியோன் குறைவா? கால வித்தியாசமா?

(உங) ஷை பிரசுரத்தில் (பூர்வகாரணம்) (நவராத்திரி விதிப்படலம்) ஒன்றரைச் சுலோகமெழுதி, அதிலுள்ள "ஆஸ்வயுக் சுக்ல

பக்ஷே து'' என்கிற பதத்திலுள்ள ஆஸ்வயுக் என்பதை எடுத்துக் கொண்டு சாந்திரமான ஐப்பசியாமென்கிறீரே, ஆஸ்வீஜமென்றால் போதாதா? யுக்என்பதெதற்கு? மேலுமிதைச்சௌரமான ஐப்பசியென்றாவது சாந்திரமான ஐப்பசியென்றாவது மயங்கிவிடுதல் கூடாதென்கிறீர். இந்தக் குளறுபாட்டிற்கு ஏது செய்யலாம்? நானும் உளறித் திரிகிறேன். ஆனால், நீர் இதை திருவுசாத்தானம் முத்துக்குமாரசாமியார் மாதிரி ஒரேயடியாகச் சௌரமான ஐப்பசிதானென்றாவது போட்டுடைத்திருக்கலாம். அதையும் விட்டு "சாந்திரமானப் பெயராக இங்கே கூறப்பெற்ற ஆஸ்வயுக் சௌரமானப் புரட்டாசியையே உணர்த்து" மென்றீர். ஹா! ஹா! விகடன் சிரிப்பு பூராவும் கொட்டிக்கவிழ்த்தால் கடுதாசி பூராவும் நிறைந்துவிடும். பாத்திரபதமென்றிருந்தாலும் ஒருவேளை சௌரப்புரட்டாசி சாந்திரப் புரட்டாசியென்று புரட்டி மருட்டிப்பார்க்கலாம். மல்லுக்கும் நிற்கலாம். குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டிக் கொள்ளாது. (அடதெய்வமே!) ஆஸ்வயுக் என்றால் சௌரப்புரட்டாசியை உணர்த்துமென்பது பதவுரையா? கருத்துரையா? நும் கருத்துரையா? முழுப்பூசினிக் காயைச் சோற்றில் மறைப்பது போன்ற உரையா?

(உரு) ஐயா! ஷை இரண்டாவது பக்கத்திலே காமிகாகமம் நவராத்திரிவிதி கூறுமிடத்தில் என்று நோண்டியிருக்கிற செய்யுள், இடத்திலும் லேது; வலத்திலும் நாஸ்தி. (இல்லை). ஆனாலும், தாங்கள் தந்த பிச்சையை (சுலோகத்தை) அப்படியே பொரித்துப் பதம்பதமாய்ப் பிரித்துப் புள்ளிவைத்துத் தருகிறேன். புலவரிடம் பொருள் தெரிந்து உத்தரம் தாரும். "சௌரமானே-நகர்த்தவ்யா நவராத்திரி: விசேஷத: சாந்திரமானேந-கர்த்தவ்யம் கிருதஞ்சேத் ராஷ்டிர நாசனம்" இதற்கு அந்வய பந்தி (நவராத்திரி: விசேஷத: சாந்திரமானேன கர்த்தவ்யம். சௌரமானே நகராயேத். கிருதஞ்சேத் ராஷ்ட்ரநாசனம்) இதை நீங்கள் ஏற்றுக்கொள்ளாது போனாலும், ஷை சுலோகம் காமிகாகமத்தில் எங்குள்ளதென்பதை மட்டிலும் நீட்டுங்கள். வீட்டுச்சுவடி, காட்டுச்சுவடி, ஏட்டுச்சுவடி என்றால், விகடன் வீட்டுக் கட்டுப்பெட்டிச்சுவடி கட்டுக்கட்டாகப் பொற்றுக்கொண்டு வெடிக்கும்! யோசனை செய்யவும்.

(உசு) ஷை பக்கத்திலேயே பூர்வகாரணம் மகோத்ஸவவிதிப் படலத்திலுள்ள ஒரு சுலோகத்தையும், உத்தரகாரணம் சிவராத்திரிபூஜா விதிப் படலத்திலுள்ள சுலோகத்தையும் நீட்டி, நவராத்திரிக்கென்றுள்ள காரணாகம வாக்கியத்தை ஒட்டி, வெகு சாமர்த்தியமாக சௌர

நவராத்திரியை நாட்டினீரே. மகோத்ஸவத்தையும் சிவராத்திரியையும் சாந்திரமானமாக நடத்தவேண்டுமென்று எந்த விகடனும், பூசாரியும், ஆசாரியும் கூறவந்ததில்லை. உத்ஸவம், சிவராத்திரி வாக்கியங்களைக் கொண்டு நவராத்திரி வாக்கியத்தைப் பூர்வபக்ஷம் செய்த வன்மையே வன்மை! ' பவித்திரோத்ஸவவிதிப்படல வாக்கியத்தைக் கொண்டும் நவராத்திரி நிர்ணயம் செய்யலாமே. பலே பேஷ்; பலே ஷோக்! இது நல்ல தமாஷே!

(உரு) மேற்படி பக்கத்தில் $1\frac{1}{4}$ சுலோகம் காமிகாமம் என்று தீட்டப்பட்டிருக்கிறது. கொட்டிக்கொட்டி அளந்தாலும் குறுணி குறுணியே. விகடனுக்கும் ஓய்ச்சல் உண்டாய்விட்டது. திரும்பத் திரும்பு எழுதுவதில் பிரயோசனம் என்ன? இதில் அதிகம் எழுத இஷ்டமில்லை. "பரார்த்தே ஆலயேஷு-கிருதே யதி".இந்த ஏழாம் வேற்றுமைப் பதங்களில் சதிசப்தமியிருக்கிறதே. இவைகளில் எது விசேஷ்யம்? எவை விசேஷணங்கள்? எதெது என்னஎன்ன வேற்றுமை? இவைகளைச் சற்றுத்துலக்குங்கள். ஐயாவே! ஆயாசப்பட வேண்டாம். கொஞ்சம் தயவுசெய்து இந்த $1\frac{1}{4}$ சுலோகம், காமிகத்தில் எந்தப்படலத்திலுள்ளதென்று மட்டிலுமாவது கட்டாயம் இந்தப் பாராவுக்குப் பதிலெழுதவேணுமாகக் கோருகிறேன்.

(உசு) மேற்படி பிரசுரம் 3-வது பக்கத்திலே உத்தரகாமிகாகமம் துர்க்காபூஜாவிதிப் படலத்திலுள்ள சந்தர்ப்பச்செய்யுட்களில் ஒன்றைக் காட்டி இரண்டை விழுங்குவானேன்?

(உஎ) ஐய! பெரியவரே! நாலாவது பக்கத்தில் உமது கக்ஷிப்படி சென்ற விபவ ஆண்டில் திருநெல்வேலி சங்கரநயினார்கோயில் முதலிய பல பெரிய கோவில்களிலெல்லாம் நடைபெற்றதென்று ஜோதி காட்டுகிற நீவிர், நும்கட்சிக்கு விரோதமாக நடந்தேறிய மதுரை, மாயூரம், திருவிடைமருதூர் திருவாரூர், வேலூர் முதலிய பலபல கோயில்களும் பெரிய கோவில்கள் தாம் என்பதில் ஆக்ஷேபனை என்ன?

(உஅ) உமது கக்ஷிப்படி நடந்தேறிய கோவில்களிலும், சில கோயில்களில் பின்னுடித் திருத்தப்பட்டு நடந்துவருகிற விஷயம் உமக்குத் தெரியுமா? தெரியவராதா? தெரியாதென்றால் தெரிவிப்போம்.

(உகூ) மேற்படி நாலாவது பக்கத்திலேயே விஜயதசமி சுலோகங்கள் காணப்படுகின்றன. அது விஷயமான விபரங்களும் பிறவும் முற்பிரசுரங்களான பகிரங்கக் கடிதம், மோதக நிவேதனம், விரத நிர்ணய விபரீத கண்டனம் முதலியவைகளிற் காணப்படுகின்றனவாதலால் அவைகளை நன்காராய்ந்து, மேற்கண்ட உக வினாக்களுக்கும் பதில் தருவீர்களென்று நம்புகிறேன். மேற்கண்ட பிரசுரங்கள் நுமக்குக் கிடைக்கவில்லையென்பீரேல், பத்திராதிபர் அவர்களுக்கு எழுதினால் திரும்பவும் அனுப்பும்படி செய்கிறேன்.

இங்ஙனம்
தங்களிஷ்டன்
பழைய விகடன்.

—

# சைவசமய சாஸ்திரங்கள்

*பிடியத னுருவுமை கொளமிகு கரியது*
*வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்*
*கடிகண பதிவர வருளினன் மிகுகொடை*
*வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.*

வேதம் சிவாகமம் என்னும் இரண்டும் முதனூல்கள் எனவும், சிவவாக்கெனவும் சொல்லப்படும். சிவபெருமான் ஆன்மாக்கள்மேல் வைத்த கருணையினாலே அவை உணர்ந்து உய்யும்பொருட்டு சதாசிவமூர்த்தியாய் வேதங்களையும், ஆகமங்களையும் பிரதமசிருட்டி ஆரம்பத்திலே அருளிச்செய்தார். வேதம் நான்கும் சதாசிவமூர்த்தியினுடைய தத்புருஷம் முதலிய நான்கு முகங்களினின்றுந் தோன்றியன. ஆகமங்கள் இருபத்தெட்டும் ஈசானமுகத்தினின்றுந் தோன்றியன. வேதம் நீதி நெறியில் நிற்கும் உலகோர் பொருட்டாம். ஆகமம் ஞான நெறியில் நிற்கும் உயர்ந்தோர் பொருட்டாம். வேதம் சூத்திரம் போலவும், ஆகமம் அதன் வியாக்கியானம் போலவும் ஒருவராலேயே அருளப்பட்டமையின் இரண்டும் சமத்துவமுடையன என்பது உணரப்படும்.

*"வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள்*
*வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்*
*ஆதிநூ லனாதியம லன்றருநூ லிரண்டு*
*மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்*
*நீதியினா லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு*
*நிகழ்த்தியது"*

எனச் சிவஞானசித்தியாரும்,

*வேதமொ டாகம மெய்யா மிறைவனூ*
*லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளுக*
*நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்*
*பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே.*

எனத் திருமந்திரமும்,

உலகியில் வேதநூ லொழுக்க மென்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்

எனத் **திருத்தொண்டர் புராண**மும்புராணமும் கூறுமாற்றால் இனிது விளங்கும்.

சிவபெருமான் அருளிச்செய்த வேதங்கள் பஞ்சபூதங்களையும் உயிர்களையும் தேவர்களையும் பிரமமெனக் கூறுவது என்னையெனின்; அழியாத சிவபெருமானைக் குறித்து வேதங்கள் கூறியவை மாத்திரம் விதிவாதமாம்; ஒழிந்தன முகமனும். சதுர்வேதங்களாலும் முதற்கடவுள் எனக் கூறப்பட்டவர் சிவபெருமானே என்னும் உண்மை **சதுர்வேததாற்பரிய சங்கிரகம்** முதலிய நூல்களாலே நன்கு உணரப்படும். சிவபெருமானாலே திருவாய்மலர்ந்தருளப்பட்ட வேதம், சுயம்பு என வழங்கப்படுவது சுயம்புவாகிய அப் பரமேசுரனாலே செய்யப்பட்ட காரணம் பற்றியேயாம்.

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே.

எனக் கூறப்பட்டதும் தேவர் முதலிய பசுக்களாலே செய்யப் படாத மொழியென்னுங் கருத்துப்பற்றியேயாம்.

சிலர் வேதமே பிரமாணநூல்; சிவாகமம் அதுபோன்ற பிரமாணமாகாது என்பர். சிலர் சிவாகமம் பிரமாணநூல்; வேதம் அதுபோன்ற பிரமாணமாகாது என்பர். அரதத்தாசாரியர், உமாபதிசிவாசாரியர் முதலிய சைவாசாரியர்களெல்லோரும் வேதம், ஆகமம் இரண்டையும் பிரமாணமாகக் கொண்டிருக்கின்றமையாலும் அவையிரண்டும் பிரமாணநூல்களாமென்பது தெளியப்படும்.

வேதம் நான்கும் பிரமகாண்டம், கருமகாண்டமென இருவகைப்படும். பிரமகாண்டம் உபநிடதமெனவும், வேதாந்தமெனவும், வேதசிரசெனவும் பெயர்பெறும். உபநிடதங்கள் அதர்வசிகை முதலியனவாம். வேதத்தின் உண்மைப்பொருள் ஆகமமாகிய கண்கொண்டு பார்ப்பவர்க்கே விளங்கும். ஆகமத்தையின்றி வேதத்தின் பொருளை உண்மையாக நிச்சயித்தல் கூடாது. இதுபற்றியன்றோ கபிலர் முதலிய இருடிகள்தாமும்

வேதத்துக்குத் தாந்தாம் நினைத்தபடி ஒவ்வொரு பொருள் கொண்டு இடருற்றனர். வேதத்துக்கு அங்கமாகிய நூல்கள் சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தம், சோதிடம் என்னும் ஆறும், உபாங்கமாகிய நூல்கள் புராணம், நியாயம், மீமாஞ்சை, மிருதி என்னும் நான்குமாம்.

வியாசமுனிவர் வரையறைப்படாத வேதத்தின் உண்மைப் பொருளைப் பரிபக்குவர் உணரும்பொருட்டு வேதாந்த சூத்திரம் செய்தருளினர். வேதாந்தசூத்திரப் பொருளும் மாசற்ற ஞானமுடையார்க்கே விளங்கும். கந்தபுராணம் "மாசறு காட்சியர், பார்த்துணர் பான்மையிற் பலவகைப்படச், சூத்திரமானவும் சொற்று வைகினன்" எனக் கூறுகின்றது. வேதாந்த சூத்திரத்துக்குப் பலராற் பாடியங்கள் செய்யப்பட்டன. அப்பாடியங்கள் எல்லாவற்றுள்ளுஞ் சிறந்து உண்மைப்பொருள் போதிப்பது வேதசிவாகமம் என்னும் இரண்டையும் நன்கு அறிந்த நீலகண்டசிவாசாரியர் பாடியமேயாகும். நான்கு வேதங்களாலும் புராணம், இதிகாசம் முதலியவற்றாலும் முழுமுதற்கடவுளென அறுதியிடப்பட்டவர் சிவபெருமானே என்பதை விளக்கும் கிரந்தங்கள் அரதத்தாசாரியர் இயற்றிய **சதுர்வேத தாற்பரிய சங்கிரகம்**, அப்பைய தீக்ஷிதர் இயற்றிய **சிவதத்துவவிவேகம்** முதலாயின.

சிவாகமங்களுக்கு மிருகேந்திரம் முதல் விசுவான்மக மீறாகிய இருநூற்றேழும் உபாகமங்களாம். சிவாகமங்கள் சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாதம் எனத் தனித்தனிநான்கு பாதங்களையுடையன. சிவாகமத்தின்கண்ணே சரியாபாதத்தில் சொல்லப்பட்ட ஆசௌசவிதிகளை இலகுவில் உணர்தற்பொருட்டு, வேதஞானமுனிவர் ஆசௌசதீபிகை என்னும் சங்கிரகநூலைச் செய்தருளினர். இது முதனூற் பெயரோடு தமிழில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. சிவாகமத்தின்கண்ணே செப்பப்பட்ட தீக்ஷை, சிவபூஜை, அந்தியேஷ்டி முதலிய கிரியைகளின் கிரமங்களைக் கூறுவனவாய் வழங்கிவரும் பத்ததிகள் பதினெட்டு. அவற்றைச் செய்த சிவாசாரியர்களும் பதினெண்மராவார். பத்ததி-மார்க்கம், வழி.

சிவாகமங்களின் ஞானபாத மூலங்கள் விரிவாயிருத்தலி ஞலே பெரியார் சிலர் எட்டு நூல்களைச் சுருக்கி இயற்றித் தந்தார்கள். இவை அட்டப்பிரகரணம் என வழங்கப் பெறும்.

இப் பிரகரணங்களின் பெயரும், இயற்றினார் பெயரும் வருமாறு:—

| | | |
|---|---|---|
| தத்துவப்பிரகாசிகை | ... | ஸ்ரீபோஜதேவர் |
| தத்துவசங்கிரகம் | .... | சத்தியஜோதிசிவாசாரியர் |
| தத்துவத்திரயநிர்ணயம் | .... | சத்தியஜோதிசிவாசாரியர் |
| இரத்தினத்திரயம் | .... | ஸ்ரீகண்டாசாரியர் |
| போககாரிகை | .... | சத்தியஜோதிசிவாசாரியர் |
| நாதகாரிகை | .... | ஸ்ரீபட்டராமகண்டர் |
| மோக்ஷகாரிகை | .... | சத்தியஜோதிசிவாசாரியர் |
| பரமோக்ஷநிராசகாரிகை | .... | சத்தியஜோதிசிவாசாரியர் |

இவற்றுள் முன்னைய ஆறுக்கும் அகோரசிவாசாரியரும், பின்னைய இரண்டிற்கும் இராமகண்டரும் செய்த உரைகள் வெளிவந்துள்ளன. இன்னும் சிவாகமங்களின் ஞானபாதப் பொருளை விளக்கும் நூல்கள் **சித்தாந்தப்பிரகாசிகை, திரிபதார்த்தவிவேகம்** முதலாயின. இவற்றுள் சித்தாந்தப்பிரகாசிகை ஸ்ரீ சிவஞானசுவாமிகளால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. சிவாகமங்களின் நாற்பாதப் பொருளைத் தெளிவாய் விளக்கும் நூல்கள் திரிலோசனசிவாசாரியர் இயற்றிய **சித்தாந்தசாராவளி** முதலாயின. இதற்கு வியாக்கியானம் செய்தார் அநந்தசிவாசாரியர். ஆகமங்கள் சிற்றறிவினராகிய நமக்கு விளங்குதற் கருமைநோக்கி அவற்றுக்கு வியாக்கியானஞ் செய்துபகரித்த பேரறிவாளரும் சிலர். பௌஷ்கரத்துக்கு வியாக்கியானம் செய்தருளியவர் உமாபதிசிவாசாரிய சுவாமிகள். மிருகேந்திரத்துக்கு உரையியற்றினார் பட்டநாராயணகண்டரும், அகோரசிவாசாரியருமாவர்.

செந்தமிழ்மொழியிலே திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அருளிச்செய்த தேவாரம் முதன் மூன்று திருமுறைகளாம். திருநாவுக்கரசுநாயனார் அருளிச்செய்த தேவாரம் மூன்று திரு

முறைகளாம். சுந்தரமூர்த்திநாயனர் அருளிச்செய்த தேவாரம் ஒரு திருமுறையாம். இவ்வாறு தேவாரம் ஏழு திருமுறைகளாயின. மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திருவாசகம், திருக்கோவையார் இரண்டும் எட்டாந் திருமுறையாம். திருமாளிகைத்தேவர் முதலிய ஒன்பதின்மரும் அருளிச் செய்த திருவிசைப்பாவும் அவருட்சேந்தனர் அருளிச்செய்த திருப்பல்லாண்டும் ஒன்பதாந் திருமுறையாம். திருமூலநாயனர் அருளிச்செய்த திருமந்திரம் பத்தாந்திருமுறையாம். திருவாலவாயுடைய சோமசுந்தரக்கடவுள் முதலாயினேர் அருளிச்செய்த திவ்வியப் பிரபந்தங்கள் பதினொராந் திருமுறையாம். சேக்கிழார்நாயனர் அருளிச்செய்த பெரியபுராணம் பன்னிரண்டாந் திருமுறையாம். வேதாந்தத்தெளிவாம் சைவசித்தாந்தத் திறனைத்தெரிவிப்பனவாகிய இத்திருமுறைகள் அருட்பாக்கள் என்று சொல்லப்படும். சிவபெருமான் திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் முதலிய ஆசாரியமூர்த்திகளை அதிட்டித்து நின்று திருமுறைகளைத் தோற்றுவித்தலால் இவை பதிவாக்கேயாம். பேய்பிடித்தவன் சொல்லும் சொற்களைப் பேயின் சொல் என்று சொல்லுவதுபோலச் சிவபெருமானல் அதிட்டிக்கப்பட்ட நாயன்மார் சொல்லிய திருமுறைகளைப் பதிவாக்கென்றே கொள்ளவேண்டும்.

திருச்சிற்றம்பலக்கோவையார் உண்மையிலே "அத்திருவாக்கைப் பதிவாக்கியமென்றே கொள்வதல்லது பசுவாக்கியமென்று நினைத்தலுஞ் சனனமரணத்துக்கு வித்தாம்; இவ்வுலகத்திலே பதிவாக்கியமேதென்னில் அநாதிமலமுத்தராகிய சதாசிவமூர்த்தியினுடைய திருவாக்காகிய ஆகமவேதங்களன்றி, முன் பரிபாக சின்னம் விளங்கும்படி போதிக்கின்ற ஞானகுரு மூர்த்தங்களாயுள்ள சந்தானசாரியர் சமயாசாரியர் திருவாக்குக்களுமாம்" எனக் கூறப்பட்டிருக்கிறது. திருமுறைகளை நிந்திப்போர் எரிவாய்நரகத்திலே விழுந்து வருந்துவர். அருணகிரிநாதர் அருளிய திருப்புகழும் அருட்பாவாதலின் சுப்பிரமணியசுவாமியினது பூஜாகாலங்களில் பாராயணஞ் செய்யப்படுகின்றது. உத்தரவேதமான திருக்குறளும் திருமுறைகள்போல்வதோர் அருள் நூலாம்.

ஆரியவேதம் சிவபெருமானுற் செய்யப்பட்டதென்றும் தமிழ்வேதம் மனிதப்பாடல்கள் என்றுங் கூறித் தமிழ்வேதத்தை நிந்திப்பர் சிலர். வடமொழி வேதாகமங்கள் சைவ முதல் நூல்கள் அல்லவென்றும், பரமசிவனுல் தோற்றுவிக்கப்பட்டன அல்லவென்றும், யாரோ சிலராற் பாடப்பட்டன என்றும் செப்பி அவற்றை நிந்திப்பர் சிலர். அவ்விருபகுதியாரும் உண்மை உணராதவர்களே. சிவரகசியத்திலே சிவபெருமான் திராவிடவேதத்தைத் திருவாய்மலர்ந்தருளினர் என்றும், அது வெள்ளிமலைக்கண் விளங்குகிறதென்றும், ஸ்ரீஞான சம்பந்தாதி அருளாளர்கள் பின் சிவாஞ்ஞைப்படி வெளிப்படுத்துவாரென்றும் கூறப்பட்டமையானும், அங்ஙனமே வெளிப்படுத்தியருளினமையானும், திராவிடவேதமும் வடமொழி வேதம்போன்று பூர்வீகமே உள்ளன என்பது துணியப்படும். இவ்வுண்மை "ஆதியவருமறையீர்" எனவும், "தமிழ்ச்சொலும் வடசொலுந் தாணிழற் சேர" எனவும், "ஆரியந்தமிழோடிசை யானவன்" எனவும், "செந்தமிழோடாரியனைச் சீரியானை" எனவும் வரும் தேவாரப் பிரமாணங்களாலே நிச்சயிக்கப்படும்.

வேதப்பொருளையும் திருமுறைப்பொருளையும் அறிதற்குப் புராணங்கள் உதவியாயிருக்கின்றன. புராணங்கள் சைவ புராணம் முதற் பதினெட்டாம். புராணங்களைப் பொய்யாகிய கட்டுக்கதை என்று இகழ்ந்துரைப்பது தவறு. வேதப்பொருளை உள்ளபடி விளக்கிக் கூறுவன புராணங்கள். சமஸ்த வேதங்களையும் ஒருவன் நன்கு அறிந்தானுயினும் சிவபுராணத்தை அறியானுயின் அவ்வேதத்தை விளங்கமாட்டான். இதுபற்றியே சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் வேதப்பொருளை நிச்சயித்தற்குப் புராணம் அங்கமாம் என்று செப்பப்பட்டது.

" தக்கன்றன் சிரமொன்றினை யரிவித்தவன் " என்று தமிழ் வேதத்திலே குறிக்கப்பட்ட சரித்திரம் வீரபத்திரக் கடவுள் அதிபாதகனுகிய தக்கனைத் தண்டித்தருளிய சரித்திரமேயாம். இச்சரித்திரம் புராணத்தைக்கொண்டே நன்கு அறியத்தக்கது. இப்படியே திருமுறைகளில் வரும் சரித்திரங்களெல்லாம் புராணங்களில் விரிவாக உணரக்கூடியனவாய் இருக்கின்றன. சிவஞானசித்தியார் முதலிய சித்தாந்த சாத்தி

ரங்களிலும் புராண சரிதங்களே அநுபவப்பயனுக்கும் பிறவற்றுக்கும் பலப்பல விடங்களில் கூறப்படுதலினுலும் புராணங்களின் மகிமை உணரப்படும். புறச்சமயத்தார் சைவசாஸ்திர உண்மை உணராமல் புராணங்களைப் பொய்யெனவும், இயற்கைக்கு மாறுனவை யெனவும், அருவருப்பானவையெனவும் புகலுதல்போலச் சைவருள்ளும் அங்ஙனங் கூறுபவர் இருப்பின் அவர்களுக்கெல்லாம் திருமுறைகளும் சித்தாந்தசாத்திரங்களும் பொய்யெனப்பட்டு சமயமுமின்றுகவே முடியும். கந்தபுராணம், கூர்ம புராணம், வாயுசங்கிதை முதலாகத் தமிழிலே மொழிபெயர்க்கப்பட்ட புராணங்கள் பலவுள. இதிகாசங்கள் புராணத்துள் அடங்கும்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நாற்பாதப் பொருளைத் தமிழிலே சுருக்கியும் விளக்கியும் கூறும் நூல்கள் தத்துவப்பிரகாசம், சைவசமயநெறி, சிவதருமோத்தரம் முதலியனவாம். திருவுந்தியார் முதல் சங்கற்பநிராகரணமீருகிய பதினன்கு திவ்விய நூல்களும் சைவாகம ஞானபாதப் பொருளுணர்த்தும் திராவிடசித்தாந்த ஞானசாத்திரங்களாம்.

(தொடரும்.)

# சமயசுயாதீனமும் சீர்திருத்தக்காரரும்

[வதிரி ஆசிரியன் திரு K. S. நாதன் அவர்கள்]

உலகிற் பல்வேறு சமயங்களுள. அவை ஒவ்வொன்றும் அவற்றினைக் கொள்பவரது அறிவின் தாரதம்மியத்துக்கு அமைந்தனவாகும். அவை ஒன்றற்கொன்று ஏற்றத்தாழ்ச்சியுடையனவாயிருப்பினும் அவர்க்கேற்றனவாயே யிருக்குமென்பதும், ஒவ்வொருவரும் தத்தம் சமயக்கொள்கைப் பிரகாரம் ஒழுகிக்கொள்ளும் சுயாதீனமுடையரென்பதும் விரிந்த அறிவும் பரந்த சிந்தையு முடையாரது கொள்கையாகும். இச்சமயங்கள் பிராகிருத சாமானியபுத்திமான்கள் நிறுத்தியனவும், பிராகிருத விசேடபுத்திமான்கள் நிறுத்தியனவும், கலைஞான சித்தியுடையோர் நிறுத்தியன்வும், தத்துவஞானசித்தியுடையோர் நிறுத்தியனவும், முதற்கடவுள் நிறுத்தியதும் எனப் பலவகைப்படும்.

இவ்வாறாய பல்வேறு சமயங்களும், தத்தம் கொள்கையை வரையறுத்து நிற்கும் சமய நூல்களையே பிரமாணமாகவுடையன. அவை அவரவர்க்கேற்ப ஒவ்வோர் காலத்து இறைவனால் அவரவர்க் கருளப்பெற்றனவென்பது அவ்வச் சமயிகள் நம்பிக்கையாகும். விவிலிய நூலைப் பிரமாணமாகக் கொள்பவர் கிறிஸ்தவரெனப்பெறுவர். கோறானைப் பிரமாணமாகக் கொள்பவர் மகமதியரெனப்பெறுவர். திரிபிடகம் முதலிய நூல்களைப் பிரமாணமா யேற்பவர் புத்தசமயிகள். இங்ஙனமே வேத சிவாகமசாஸ்திரங்களைச் சைவசமயம் பிரமாணமாகக் கொள்ளும். இச் சமயசாஸ்திரங்களுக்கு முரண்பாடான அரச கட்டளைகளும் அவ்வச் சமயிகளுக்குப் புறனடைச் சட்டங்களையுடையனவாய் நிற்கும்.

மேற்படி சுருதிகளுக்கு மாறுபாடான கொள்கையுடையவரும், தம் கொள்கைக்கியையச் சமாதானபங்கமின்றி ஒழு

கும் சுயாதீனமுடையரே. எனினும், சுருதிகளைப் பிரமாண மாகக் கொள்ளும் சமயிகளாகார். அத்தகையர் சுயாதீனத் தைப் பங்கமுறுத்தும் உரிமையுமுடையராகார். அவர் தாம் ஒவ்வோர் காலத்து அவ்வச் சமயங்களை அனுட்டித்தோராயி னும் அவற்றின் பிரமாணசாஸ்திரங்களுக்கு மாறுபட்ட கொள்கையுடையராயினபோதே அச்சமயிகளினின்றும்பிரிந்து தமக்குப் பொருத்தமான முறையில், வேருக ஒழுகிக் கொள்வதேயன்றிச் சமயக் கொள்கைகளையேனும் அனுட் டான முறைகளையேனும் மாற்றிப் பங்கப்படுத்தும் உரிமை யுடையரல்லர்.

கிறிஸ்தமதத்தினரால் ஆதியில் நிறுவப்பெற்ற கத்தோ லிக்கசபையினரது கொள்கைக்கும் வழிபாட்டு முறைக்கும் மாறுபட்ட சிலர் அக் கத்தோலிக்கசபையினின்றும் பிரிந்து புரொற்றெஸ்ரூண்ட் (Protestant) சபையெனப் புதியதாயோர் சபையினையாக்கித் தமது கொள்கைக்கியைய ஆலயங்களையும் வழிபாட்டு முறைகளையும் அமைத்துக்கொண்டனர். அன்றி, தமக்குப் பொருத்தமற்றதெனக் கண்ட கத்தோலிக்கசபையை யாவது அவரது ஆலயவழிபாட்டு முறைகளையாவது மாற்றிப் பங்கஞ்செய்யும் உரிமைபெற்றிலர்.

இவ்வாறே வைதிகமதக்கிரியை, ஆசாரம் முதலியவற்றில் விருப்பிலார் சிலர் தம்மை ஆரியசமாஜத்தினரென்றும், பிரம சமாஜத்தினரென்றும் அழைத்து, தத்தமக்கியைந்த வழிபாட்டு முறைகளில் நிற்கின்றனர். தமக்கியைபில்லாத முறையில் நிற்போரையாவது அவரது சமய நடைமுறைகளையாவது யாதுஞ் செய்திலர். இதுவே சுயாதீனமுறையுமாகும்.

மானுடவர்க்கத்தினர் ஒருவரையொருவர் அடிமைப்படுத் திக் கொடுமைபுரிந்ததும் சுயாதீனமென்பதின்னதென்ற உணர்ச்சியுமில்லாததுமான ஒருகாலத்தில் மதங்களொன்ரூே டொன்று மாறுபட்டு ஒரு மதத்தினரை, வலிமையிலும் அதி காரத்திலும் மிக்க இன்னொரு மதத்தினர் நெருக்கி, அவரது ஆலயங்களையும் வழிபாட்டு முறைகளையும் பங்கப்படுத்தின துண்டு. ஆயின், அம்முறை இந்த இருபதாம் நூற்ருண்டிற் பொருந்தாது.

சைவசமயி ஒருவர் கிறிஸ்தவராகவோ, மகமதியராகவோ தாம் விரும்பியவாறு தம்மை மாற்றிக்கொள்ளலாம். இவ்வாறு மாறினதும் முன்னிருந்த சமய ஆலயங்களையேனும் நடைமுறைகளையேனும் தமக்கிணங்கத் திருத்தமுடியாது.

உண்மைச் சுயாதீனமுறை இவ்வாறாகத் தற்காலத்திற் சீர்திருத்தக்காரரெனத் தம்மை அழைத்துக்கொள்ளும் சிலர் தமக்குப் புதிது புதிதாய்த் தோன்றும் நவீன கொள்கைகளுக்கியையச் சுருதிகளைப் பிரமாணமாகவுடைய சமயமுறைகளை அவ்வச் சுருதிகளுக்கு மாறுபட அமைக்கும் தொழிலிற் பிரவேசிக்கின்றனர். இது தெய்வநீதியுமாகாது; மனுஷநீதியுமாகாது. சுருதிகளின் கொள்கைகள் தவறென்பதும், தமக்கு இன்றொரு விதம் நாளை இன்னொரு புதுவிதமாய் மாறிமாறியெழும் கொள்கைகளே சரியானவையென்பதும், அவற்றைச் சாதனைக்குக் கொண்டுவர முயல்வதும் இவர் கருத்துப் போலும்! இவர் மதியீன மிருந்தவாறென்னே! சுருதிவழி நிற்போர் நிலைபேறான ஒழுக்கமுடையரென்பதையும், அவற்றினின்றும் மாறுபட்டு நிற்போர் நிலையற்ற ஒழுக்கமுடையரென்பதையும் இவர் உணரக்கடவர்.

சமயசாஸ்திரப்படி நிலைபெறவேண்டிய சமயஸ்தாபனங்களும் வழிபாட்டுமுறைகளும் அவ்வச் சமயசாஸ்திரங்களுக்கு மாறுபட்ட நிலையை அடையின் அவற்றினைத் திருத்திச் சாஸ்திரசம்மதமான முறைக்குக் கொண்டுவருவதே உண்மைச் சீர்திருத்தமுறையாகும். தற்காலத்து அவ்வித திருத்தங்கள் வேண்டப்படுமென்பது உண்மையே. ஆதலால், உண்மைச் சீர்திருத்தத்தில் விருப்பமும் ஆற்றலும் உடையோர் சமய நூல்களை நன்காராய்ந்து வேண்டிய திருத்தங்களைச் செய்யும் கடப்பாடுடையர். இஃதன்றி, முறைகேடுகள் சில நுழைந்துவிட்டனவென்ற காரணத்தால் முழுவதையும் முறைகேடாக்கிவிடுதல் புத்தியின்பாற்படாது.

சைவசமயத்துள்ளும், பெரும்பாலும் ஆலயங்களுள்ளும் சில சிவாகமவிரோதமான முறைகள் நுழைந்திருக்கலாம். அவைகளைச் சிவாகமங்களுக்கியையத் திருத்திவைப்பதே அறி

வின்பாற்பட்ட செயலாகும். அன்றிச் சிவாகமமுறையை முற்றாகத் தள்ளிவிட்டு மனம்போனபாட்டிலெல்லாம் மாற்றிவிடுதல் தகாத செயலாகும். இத்தகைய சீர்திருத்தம் செய்வதற்கு வேதசிவாகம உணர்ச்சி அவசியம் வேண்டற்பாலது.

இந்தியா இலங்கையென்னும் நம் நாடுகளைக் கைப்பற்றி அரசுபுரிந்த அந்நிய நாட்டவருள் பிரித்தானிய அரசினரே தர்மக்கொடி நாட்டிச் சகலருக்கும் சமயசுயாதீனமளித்துச் செங்கோலோச்சுகின்றனர். இத்தகைய பிரித்தானிய அரசினரின் கீழ்ச் சென்ற பல்லாண்டுகளாகச் சைவ, வைஷ்ணவ மதத்தினர் பூரணசமயசுயாதீனத்தை அனுபவித்துவந்தனர். தற்காலம் சிலர் தங்களைச் சைவர்களென்றும், வைஷ்ணவரென்றும் பேரளவில் மாத்திரம் வைத்துக்கொண்டு சமயசுயாதீனத்தை அழித்துவிடப்பார்க்கின்றனர். வேதசிவாகமம், வைஷ்ணவாகமமென்பனவற்றில் தமக்கு நம்பிக்கை இல்லையாம். அவைகளின் கொள்கைகள் தங்கள் வாழ்க்கைநோக்கத்திற்குப் பொருத்தமில்லாதனவாம். ஆயினும், தாம் அவ்வாகமங்களைப் பிரமாணமாகவுடைய சமயத்தவர்களாம். தங்களுக்கு அவ்வாலயங்களில் உரிமையுண்டாம். தாம் விரும்பியவாறெல்லாம் அவ்வாலயங்களிற் செய்துகொள்ளவேண்டுமாம். தமக்கவ்வித சுதந்தரத்துக்குத் தடையாயிருக்கும் பிரித்தானியரது சமய சுயாதீன சட்டத்தையும் தாம் நீக்கிவிடவேண்டுமாம். இதுதானும் தாம் அரசியலுரிமைபெற்றதன் பயன். இது தர்மமாகுமா? அறிவாளிகள் உற்றுநோக்குவார்களாக. இவர்கள் அரசசட்டத்தை மாற்றியமைக்க முடியுமெனினும், சமயசாஸ்திரங்களையும் அவற்றின் முறைகளையும் மாற்றியமைக்கும் ஆற்றலாவது அதிகாரமாவது உடையவராகார். இவ்வித மாற்றங்கள் சுயராச்சியத்திற்குச் சாதகமானவையென்றுதான் வைத்துக்கொண்டாலும், ஆன்மஈடேற்ற சாதனைகளை இழந்து உலகம் முழுவதையும் தான் பெற்றுக்கொண்டாலும் ஈற்றில் நமக்குண்டாகும் கதிதான் யாதோ! வாழ்க்கையின் நோக்கம் உலகபோகானுபவமா? ஆன்ம ஈடேற்றமா? எது நிலையானது. என்பதைச் சிறிதுவேளை சிந்தித்தால் அறிவிற்றோன்றும் சுயராச்சியம் வேண்டற்பாலதாகியதே எனினும் சமயசுயாதீ

னத்தை இழந்துபெறும் சுயராச்சியம் பயன்றரக்கூடியதாகாது. இச் சீர்திருத்தக்காரர் தம் செயல் ஆகமசாஸ்திர விரோதமென்பதை அவற்றினை முறையாக ஓதியுணர்ந்து அனுட்டித்து நிற்கும் பெரியோர் வாயிலா யறியக்கடவர்.

எனவே, உண்மைச் சைவசமயாபிமானிகளாயினோர் வேத சிவாகம சாஸ்திரங்களை முறைப்படி ஓதி உணர்ந்து, அவற்றின் வழி ஒழுகி, உண்மை நிலையை உலகிற்குணர்த்தி, வேண்டிய சமயச்சீர்திருத்தங்களைப் புரியும் தொண்டில் ஈடுபட்டு நிற்க இறைவனருளை வேண்டிநிற்பாமாக.

---

# குரு லிங்க சங்கமம்

[அச்சுவேலி சிவஸ்ரீ கு. வைத்தீசுவரக் குருக்கள்]

(முற்றொடர்.)

சிவபெருமான் தம்மை அறியுமாறு கருணைசெய்து தமது திருவேடமாகிய விபூதி ருத்திராக்ஷம் முதலிய தமது வடிவத்தை தமது அன்பர்களிடத்துக் கொடுத்து அவர்களிடமாக நின்று அங்கங்கே அறிவு விளக்குகின்றார். விபூதி ருத்திராக்ஷமணிந்து திருவைந்தெழுத்தோதும் மெய்யடியார்பால் சிவபெருமான் சாந்நித்தியமுற்றிருப்பர். கபடவேடமுடையார் விளங்கமாட்டார். அது தேவாரத்திலே "நெக்குநெக்கு நினைபவர் நெஞ்சுளே—புக்குநிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்" என்று கூறப்பட்டவாற்றால் உணரப்படும்.

சிவபத்தரை மனிதர் எனக் கருதாது சிவன் எனவே கருதி மனம் வாக்கு காயம் என்னும் மூன்றினாலும் வழிபடல் வேண்டும். ஓர் அரசன்கீழ் வாழும் குடிகள் அவ்வரசனுடைய புத்திரனைக் காணும்பொழுது அவனிடத்திலே குணம், குற்றம் பாராமல் மிக்க அச்சத்தோடும் அவனை வணங்குவர். சிவபத்தரை அவமதிப்பவர் தண்டிக்கப்படுவர். விபூதி ருத்திராக்ஷம் முதலிய திருவேடங்களை உடைமை, சிவோகம்பாவனை, பிரா

சாதயோகஞ்செய்தல், தம்மின் இரண்டற இயைந்த சிவத்தோடு கலந்துநிற்குந் தன்மை ஆகிய காரணங்களால் சிவபத்தர் சிவ பெருமான் எனவே வழிபடற்பாலர். பாசக்கட்டுடைய ஏனையோர்மாட்டு "பாசத்தார்க் கின்றாம் பதி" எனச் சிவஞான போதத்திற் கூறப்பட்டவாறு பாலில் நெய்போல விளங்காது நிற்றலால் மெய்யுணர்வுடையார் அஞ்ஞானிகளுடன் கூடாது மெய்ஞ்ஞானிகளது இணக்கத்தையே பொருளென வேண்டுவர். பட்டணத்துப்பிள்ளையார் "நல்லாரிணக்கமு நின்பூசைநேசமு ஞானமுமே யல்லாது நிலையுளதோ" என்றருளிச்செய்தார். "சிவனடியார் திருக்கூட்டத்தையே விரும்புவோம். பிள்ளைமைப்பருவத்தும் சிவனடியார் திருவடிப் பொடிகொண்டே வண்விளையாட்டுச் செய்யப்பெற்றோம்" என்று கூறுகின்றார் அரதத்தாசாரிய சுவாமிகள்.

வருணத்தாலாவது ஆச்சிரமத்தாலாவது இவையிரண்டினுலுமாவது தம்மிற்றாழ்ந்தவர் தீக்ஷை முதலியவற்றினால் தம்மில் உயர்ந்தவராயின் அவரை அவமதித்தல் செய்யாது, மனத்தால் வணங்குதல் வேண்டும். குருவையும் சிவனடியாரையும் கண்டவுடன் இருக்கைவிட்டெழாமை, அவர் திருமுன்னே உயர்ந்த ஆசனத்திருத்தல் முதலிய குற்றங்களைச் செய்தலாகாது. தன்னுடைய குரு, சிவநிந்தை முதலிய பெரும் பாதகங்களைச் செய்துகொள்வானாயின், அவனை இகழாது மனம் நொந்து கைவிட்டு வேறொரு குருவை அடைந்து வழிபடுக. தனியடியார் அறுபத்துமூவரில் சங்கமத்தால் முத்தியடைந்தோர் திருநீலகண்டநாயனார் முதலிய பத்தொன்பதின்மர் என்று சேக்கிழார் புராணத்திற் சொல்லப்பட்டது.

நமது சற்சமயமாகிய சைவசமயம் அறுபத்துமூன்று நாயன்மாராலும், மாணிக்கவாசக சுவாமிகளாலும், சேக்கிழார் நாயனாராலும், மெய்கண்டதேவர் முதலிய சந்தானகுரவர்களாலுமே தழைத்தோங்கியது. ஆதலினாலே அவ்வுண்மைநாயன்மார்களுக்கு அவர்கள் திருவடிப்பேறடைந்த திருநக்ஷத்திரங்களிலே குருபூஜை செய்தல்வேண்டும். அதற்குச் சத்தியில்லையாயின், சமயாசாரியமூர்த்திகள் நால்வருக்கும், சேக்கிழார் நாயனாருக்கும், சந்தானாசாரியர் நால்வருக்கும் குருபூஜை செய்

வது அத்தியாவசியகம். மேலும் தீட்சாகுரு வித்தியாகுரு முதலாயினோர் சிவபதமடைந்த தினங்களிலும் குருபூஜை செய்யத்தக்கது. அங்ஙனஞ்செய்வோர் திருவருள் எய்தப்பெறுவார் என்பது திண்ணம். ஆகவே, சைவசமயிகளாகிய நாம் எல்லோரும் குரு, இலிங்கம், சங்கமம் என்னும் மூன்றிடத்தும் சிவபெருமானை அத்தியாவசியகம் வழிபடல் வேண்டும் என்பது ஒருவாறு சுருக்கிக் கூறப்பட்டது. குரு-லிங்க-சங்கம வழிபாடு எங்குந் தழைத்தோங்குக.

---

# திருநாவுக்கரசுசுவாமிகள் புராணம்

[கந்தவனக் கோவில் ஆதீனகர்த்தா
ஸ்ரீமான் திக்கம் செல்லயாபிள்ளை அவர்கள் எழுதியது]

"இருவினைப் பாசமும் மலக்கல் லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட
வருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கட
லொருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ"

இது கவிக்கூற்று

(இ-ள்:) இருவினைப்பாசம் - நல்வினை தீவினையாய்ப் பக்குவப்பட்ட பிராரத்தநுகர்ச்சிக்கண் எழுவதாகிய விருப்பு வெறுப்பாகிய பாசம்,—மும்மலக் கல் ஆர்த்தலின்-கன்மம் மாயை ஆணவமெனப்படும் மூன்று கற்களையும் ஆன்மாவோடு ஒருசேரக் கட்டுதலால்,—வரு பவக்கடலில்-நாழிகைவட்டமும் கறங்கும் போலச் சுழன்று ஒழிவின்றி வருவதாகிய பிறவிப் பெருங்கடலில்,—வீழ் மாக்கள் ஏறிட-வீழ்கின்ற மாக்கள் முத்திப் பெருங்கரையினேற,—அருளும் மெய் அஞ்செழுத்து - அருளும் மெய்மையையுடைய ஸ்ரீபஞ்சாக்கரம்,—அரசை-எம் அரசாகிய திருநாவுக்கரசுசுவாமிகளை,—ஒரு கல்மேல் ஏற்றிடல்-ஒரு கல்லின்மேலேற்றுதல்,—உரைக்கவேண்டுமோ-வியப்பன்றாதலின் அதனை யாம் விதந்து கூறவேண்டுமோ? வேண்டா என்பதாம்.

(க-ரை:) மூன்று பெருங்கற்கள் பிணிக்கப்பெற்றுப் பவப்பெருங்கடலில் வீழ்ந்து ஆழ்ந்து கிடக்குமுயிரை அதனி னின்று மெடுத்துச் சுமந்து கொடுசென்று முத்திப்பெருங்கரை யிற் சேர்க்கும் ஐந்தெழுத்து, ஒருகல்லிற் பிணிக்கப்பெற்று இச் சிறுகடலில் வீழ்த்தப்பெற்ற சீவன்முத்தராகிய எம்மரசை வருணன் சிரமீது எடுத்தேற்றுதல் எளிதினெளிதாயசெயல். ஆதலின், அது வியப்பன்று. அதனை யாங் கூறுவதும் மிகை என்றபடி.

"இக்கடல்" என முன்னிலைப்படுத்திக் கிளந்து கூறிய தனால் இதனது சிறுமையும், அக்கடல் எனப் படர்க்கையிற் பெறப்படும் பிறவிக்கடலின் பெருமையும், ஒருகல் எனக் கிளந்து கூறினமையான் மும்மலங்களும் மூன்று கற்கள் என் பதூஉம் ஆற்றலாற் பெற்றும். பிராரத்தநுகர்ச்சிக்கண் எழு வதாகிய விருப்புவெறுப்பாகிய ஆகாமியமே சஞ்சிதமாய்ப் பின்னர்ப் பிராத்தமாய் நாழிகைவட்டமும் கறங்கும் போல் மாறி மாறிச் சுழன்று வருதல் காண்க.

கன்மமல முளதாகவே அதன் பற்றுக்கோடாகிய மாயா மலமும், மாயை யுளதாகவே மாயாகாரியங்களைச் சுட்டியறிவ தாகிய விபரீதவுணர்வைப் பயக்கும் ஆணவமலமு முளதாகும். அங்ஙனமாதலின் மும்மலங்களும் பந்தமாதல் காண்க.

மலமூன்றும் பந்தமாதலை:

"புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமு
மண்முதன் மாயைகாண் மாயையுங்—கண்ணிய
வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்று
மெய்ஞ்ஞானிக் காகா விடு"

என மெய்கண்டதேசிகன் திருவாய்மலர்ந்த திருவாக்கானு முணர்க. இன்னும் கண்ணப்பநாயனார் புராணத்தும் "வினை யிரண்டுஞ்சாரு மலமூன்றுமற" எனச் சுவாமிகளே தெரித்துக் கூறியிருத்தலுங் காண்க.

பிராரத்தநுகர்ச்சிக்க ணெழுவதாகிய விருப்புவெறுப்பே பாசமாதல் "அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்

—தவாஅப் பிறப்பீனும் வித்து" என்னும் நாயனர் வாக்கானுந் தெளியப்படும்.

புண்ணியபாவப் பயன்களாகிய சுகதுக்கங்களைச் சுவர்க்காதி யுலகங்களில் மாறிச்சென்று நுகர்ந்து, அந்நுகர்ச்சிக்கணெழுவதாகிய விருப்புவெறுப்பானே மீட்டும் வினையை யீட்டுவாராய் இருவினையொப்பெய்துந் துணையுங் காலவரையறையின்றிப் பல்லூழிகாலம் பிறந்திறந்துழல்வாராதலான், "வருபவக்கடல்" எனவும், பெருந்துன்பத்தைப் பயப்பதும் வரம்பின்றியிருப்பதுமாய பவக்கடலிற் படுதல் எம்பெருமானேடு என்றும் பிரியாது அத்துவிதமாய்க் கலந்துநிற்கும் உயிர்கட்கு இழிவென்பதூஉம், மும்மலபந்தமே அதற்கேதுவென்பதூஉம், அன்றியும் பிறவியிற் புகுதல் பெருந்துன்பத்தைப் பயப்பதென்பதூஉம் போதர "வீழ்" எனவும் மக்களாய்ப்பிறந்து பகுத்தறிவுடையராய வழியும் மெய்பொய் இரண்டனையு முள்ளவாறுணராதவர் எனபார் "மாக்களி" எனவும், அத்தன்மையாராயினும் அஞ்செழுத்தை யோதுவாராயின் அது அவரைத் தப்பாது முத்திப் பெருங்கரையி னேற்றிவிடும் என்பார் "ஏறிட அருளும்" எனவும், அங்ஙனமேற்றுதல் எம்பிரானது சுதந்தரவடிவாய் நிற்கும் உண்மையுடைமையான் என்பார் "மெய் அஞ்செழுத்து" எனவும், முற்பிறப்பிற் செய்த தவத்தின் நலமையும், இப்பிறப்பி னெம்பெருமான் தடுத்தாட்கொண்ட அநுக்கிரகத்தின் நலமையும், தம்பிரானரது சேவடியினயராது தைவந்துநிற்கும் அன்பின்நலமையும், தாண்டகச் சதுரராகும் வாக்கின்நலமையும், சிவவேடப் பொலிவின் நலமையும், திருத்தொண்டின் நலமையும், 'நாவுக்கரசன்' என இனி உன் நாமம் வழங்கக் கடவதென எம்பிரான் கூறியருளப்பெற்ற பேற்றின் நலமையும், இன்னும் இவைபோன்ற பிறவும் ஒருங்கமையுமாறு பத்திச்சுவை நனிசொட்டச்சொட்ட ஆராவன்பு ததும்பத் ததும்ப "அரசை" எனவும், சிற்றறிவுடைய மனிதரானுங் கணிக்கப்படும் பரிமாணமுடையதும், அதனற் சிறுமையுடையதும், பிறவிப்பெருங்கடல் போலாது எம்முனர்ப் பிரத்தியட்சக் காட்சிக்கு விடயமாதலுமுடைய கடல் என்பார் "இக்கடல்" எனவும், மும்மலங்களாகிய மூன்று கற்கள் பிணிக்கப்பெற்று,

மனத்தானும் வாக்கானு மளவிடற்கரிய பிறவிப்பெருங்கடலில் வீழ்ந்த மாக்கள் முத்திப்பெருங்கரையினேற அருளும் ஸ்ரீபஞ் சாக்கரம் சீவன்முத்தராகிய எம்மரசை இச்சிறுகடலில் வரு ண்ன் சிரமேற் சுமக்க ஒரு கன்மேலெடுத்தேற்றும் ஒரு செயல் வியப்பன்றாதல் கைமுதிகஞாயத்தாற் பெறப்படுதலின் "ஒரு கன்மேலேற்றிட லுரைக்கவேண்டுமோ" எனவுங் கூறினர்.

"கல் ஆர்த்தலின்" என்றவிடத்து இரண்டாவதனுருபும், 'பவக்கடல்" "இக்கடல்" என்றவிடங்களில் ஏழாவதனுருபும் விரிக்க. ஒகாரம்—எதிர்மறை.

திருச்சிற்றம்பலம்

---

# சைவசமயத்தின் தற்கால நிலையும் சைவசாஸ்திரபரிபாலனப் பத்திரிகையும்

"சென்னியில் வைத்து ராசாங்கத்தி லமர்ந்தது வைதிக சைவ மழகிதந்தோ" என்று தாயுமானப் பெருந்தகையாரால் பாராட்டப்பட்ட நமது சைவசமயத்தின் தற்காலநிலை பரித பிக்கத்தக்கதாயிருக்கின்றதென்பது அனைவரும் அறிந்ததொன் றாம். நாற்பது ஐம்பது வருடங்களுக்கு முன்னிருந்த சைவக் கிளர்ச்சியும் பற்றும் இப்போது காணப்படவில்லை. அக்கா லத்தில் வெளிவந்த சைவநூல்களும், பத்திரிகைகளும், சஞ் சிகைகளும் அளப்பில. தினப்பிரசங்கங்களும், வாரப்பிரசங் கங்களும், சமயாசாரியர் முதலியோர் குருபூசைப் பிரசங்கங் களும் எங்கும் நடந்தேறும். அப்பிரசங்கங்களில் திருவிளை யாடற்புராணம், கந்தபுராணம், சீகாளத்திப்புராணம், தணி கைப்புராணம் முதலியன முறையாகத் தொடங்கப்பட்டுப் பொருள் சொல்லப்படும். இவற்றால் பலர் நற்பயனெய்தினர். இப்போது இத்தகைய பிரசங்கங்கள் நடைபெறுவதில்லை. கரு மாதிகளில் கதைப்போக்காகச் சிவபுராணப் பிரசங்கம் நிகழ்த்

தப்படுகின்றது. இம்மாறுதலுக்குக் காரணம் சைவப்பற்று நாளுக்குநாள் குறைதலும், பரிபாலிப்பார் இன்மையுமேயாம். நமது சமயசாத்திரங்களுள் பலகாரணங்களால் இறந்தவை போக எஞ்சியிருப்பவை சில. அச்சிலவற்றுள்ளும் அச்சிடப் பட்டு இப்போது வெளிவந்துலவுவன மிகச்சில. அச்சிடப் பட்டு இப்போது கிடைத்தற்கரியனவாய் இருப்பவற்றை மீட் டும் அச்சிட்டுக் காப்பாற்றுவிடில் அவை சில ஆண்டுகளுக்குள் இறந்துபோவது நிச்சயம். நமது ஆன்றோர் நமக்காகத் தேடி வைத்துச் சென்ற அரும்பெரும் நிதிக்குவைகளை நாம் காப்பாற் றுவிடில் நாம் அவர்களுக்குத் தீங்கு செய்தவர்களாவேம் என் பது ஒருதலை. எத்தனை புராணங்கள் பிரபந்தங்கள் நமது ஆன்றோர்களாற் பாடப்பட்டன? அவற்றுள் இப்போது பெயரளவில் கேட்கப்படுவன எத்தனை? உதாரணமாக, விநா யகப்பெருமான், பண்டிதர்முதல் பாமரர் ஈறுக வழிபடற்குரிய மூர்த்தி. இவரைக்குறித்த தமிழ்ப்புராணம் ஒன்றே. அது கவிசிரேட்டரான திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த கச்சியப்பமுனிவரால் பாடப்பட்டதாகும். அப்புராணம் இற் றைக்கு முப்பது வருடங்களுக்கு முன்னர் ஓர் பிரபுவால் அச்சிடப்பட்டது. பிரதிகள் இப்போது கிடைப்பதருமை. இவ்வரிய புராணத்தை மீட்டும் அச்சிட்டு வெளியிடவேண்டிய அவசியம் இல்லையா? அச்சிடாதொழியின் நூல் இறப்பது திண்ணமல்லவா? இப்புராணத்தை அச்சிடவேண்டியது அவசியமென்பதை வற்புறுத்தி யான் இங்குள்ள சில சைவாபி மானிகளிடத்திற் கூறியுமிருக்கின்றேன். அச்சிட்டால் விலைப் படாதென்று சாக்குப்போக்குச் சொல்லி விலகினர் சிலர். எவரும் நூல் கற்று இன்புறத்தக்கதென்பதை மறுத்திலர். பழைய வேதாரணியபுராணம், உத்தரகோசமங்கைப் புராணம் முதலியன பலவருடங்களுக்கு முன்னர் அச்சிடப்பட்டனவாம். பலவருடங்களாக இப்புராணப் பிரதிகளைப் பெறயான் முயற்சி செய்தும் கைகூடவில்லை. பிரபல க்ஷேத்திரங்களின் தமிழ்ப் புராணங்கள் சேமிக்கப்படவில்லை என்றால் நமது சமயாபிமான மும் பாஷாபிமானமும் இருந்தபடி யென்னேயோ?—வட்கம்! வெட்கம்!!

சைவசமயசாத்திரங்களிற் பிரசித்திபெற்றது சிவஞான சித்தியார். "பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே ஓர் விருத்தப் பாதி போதும்" என்பது பழைய வாக்கு. இவ் வரிய சாத்திரத்துக்கு ஆறு உரைகளுள. இவ்வாறுரையும் சேர்த்து ஓர் புத்தகமாக இற்றைக்கு 50 வருடங்களுக்குமுன் பதிப்பிக்கப்பட்டது. அப்புத்தகம் இப்போது அகப்படுவது கடினம்.

அப்பதீக்ஷிதர், அரதத்தாசாரியர், சிவாக்கிரயோகியர், ஞானப்பிரகாசர் முதலியோர் சைவசம்பந்தமாகப் பல நூல்களும் வியாக்கியானங்களும் செய்துள்ளனர். இவற்றுள் பல தமிழில் மொழிபெயர்க்கப்பட்டில. மொழிபெயர்க்கப்பட்டு அச்சில் வந்தவைதானும் இப்போது கிடைப்பதருமை. பௌஷ்கராகமம், காமிகாகமம், சிவாக்கிரயோகியர் சிவஞானபோத பாடியம், அகோரசிவாசாரியர் பத்ததிகள் முதலியனவடமொழி யிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்படவில்லை. இத்தகைய குறைபாடுகளையும் பிறவற்றையும் நீக்கக் கருதியே போலும் யாழ்ப்பாணத்து அச்சுவேலி சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள் அவர்கள் **சைவசாஸ்திர பரிபாலனம்** என்னும் மாதப் பத்திரிகையொன்றை ஆரம்பித்துள்ளனர். குருக்களையாவை யான் ஒன்பது வருடங்களாக அறிவேன். அவரைப் போல் சைவபரிபாலனத்தில் ஊக்கமுள்ளவர்கள் நான்குபேரிருந்தால் பல அருந்தொண்டை ஆற்றலாமென்பது எனது துணிபு. அவர்கள் சைவத்துக்காகச் செய்துள்ள காரியங்கள் பல. வித்யாசாலை ஒன்று வைத்து நடாத்துதல், கோயிற்பூசை, உற்சவாதி தீக்ஷாகாரியம் ஒழுங்குபெறச் செய்தல், உலகோபகாரமாகச் சிவபூசைவிளக்கம், மகோற்சவசந்திரிகை, விநாயகபரத்துவம், சைவப்பிரகாசிகை, சிராத்ததீபிகை, சைவாநுட்டான அகவல் உரை, சிவபூசாவிதி முதலியவற்றை அச்சிட்டுதவல் முதலியன. இப்பெரியாரை நேரே சந்திக்கும் பாக்கியத்தைச் சில மாதங்களுக்குமுன்னரே பெற்றேன். தமது தேகநிலையைப் பொருட்படுத்தாது இந்தியாவிற்கு வந்திருந்தபொழுது இப் பத்திரிகை விஷயமாகப் பலருடன் ஆலோசித்தனர். இவரைப் போல் ஏனைய குருக்கள்மார்களும் கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்து விளங்கினல் நமது சமயம் ஓங்கிவளருமே. ஒவ்வொரு

சைவனும் இப்பெரியார் தொடங்கிய இப்பத்திரிகையை ஆத ரித்து அவர்களை ஊக்கப்படுத்தினால் அதுவே பெருஞ் சிவ புண்ணியமாகும். திருவருள் துணைபுரிவதாக.

புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கன் தாளே புந்திவைத்திட்டு
இகழ்மின் எல்லா வல்லலையும்
இனியோ ரிடையூ றடையாமே
திகழுஞ் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்தாள் வணங்கிநாம்
நிகழுமடியார் முன்சென்று
நெஞ்ச முருகி நிற்போமே.

திருமயிலை:
15-10-39.

சே. வே. ஜம்புலிங்கம்பிள்ளை

---

# சிறுவர் பகுதி

## உக்கிரபாண்டியர்

உக்கிரபாண்டியர் என்பவர் மதுரையிலிருந்து அரசாட்சி செய்தார். அக்காலத்தில் கிரகநிலை பிழைத்தமையால் சேர நாடு, சோழநாடு, பாண்டிநாடு என்னும் மூன்று நாடுகளிலும் மழை பெய்யவில்லை. தமிழ்நாடுகள் மூன்றும் பஞ்சத்தினால் வருத்தமுற்றன. அதுகண்ட தமிழரசர் மூவரும் அகத்திய முனிவரை அடைந்து, தங்கள் நாட்டிலே மழையில்லாமையைச் சொன்னார்கள். அகத்திய முனிவர் அம்மூவரையும் நோக்கி, "அரசர்களே! கிரகநிலை பிழைத்தமையினால் பன்னிரண்டு வருஷம் மழை பெய்யாது. மழை பெய்விப்பவனாகிய இந்திர னிடத்தே சென்று கேளுங்கள்" என்றார். அரசர்கள் "நாம் இந்திரனிடத்தே செல்வது எப்படி?" என்றார்கள். அகத்திய முனிவர் "நீங்கள் சோமவாரவிரதத்தை நோற்று, சிவபெரு மானுடைய திருவருள் பெற்று, ஆகாயவழிக்கொண்டு செல்லக் கடவீர்கள்" என்று உபதேசித்தார்.

தமிழரசர்கள் மதுரையை அடைந்து, பொற்றுமரைத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, சோமசுந்தரக் கடவுளை வழிபட்டு, சோமவாரவிரதம் அனுட்டித்தார்கள். அந்த விரதப் பேற்றினாலே ஆகாய மார்க்கமாகச் சென்றார்கள். இந்திரன் அதனை அறிந்து அம் மூவரும் இருக்கும் பொருட்டு தனது ஆசனத்திற் பதிந்ததாய் மூன்று சிங்காசனம் போடுவித்தான். அரசர் மூவரும் தேவருலகத்தை அணிடந்து இந்திரன் பக்கத்திற் சென்றார்கள். அவர்களுள் சேரனும் சோழனும் இந்திரன் காட்டிய ஆசனங்களில் இருந்தார்கள். உக்கிரபாண்டியர் இந்திரனுடைய சிங்காசனத்தில் ஏறி ஒருசேர வீற்றிருந்தார். இந்திரன் அவர்மேல் அழுக்காறு அடைந்தான். மற்றைய அரசரிருவரையும் பார்த்து, "நீங்கள் வந்த காரணம் என்னை?" என்று வினவினான். அவர்கள் "எங்கள்நாட்டிலே மழையின்மையால் வந்தோம்" என்றார்கள். இந்திரன் அவர்கள் நாடுகளில் மாத்திரம் மழை பெய்யும் வண்ணம் வரங்கொடுத்து அனுப்பினான். உக்கிரபாண்டியர் தன் ஆசனத்திலே வீற்றிருத்தலையும் மழை வேண்டாததையும் இந்திரன் பார்த்தான். அவருக்கு உயர்வாகிய உபசாரம் செய்பவன் போல, அளவில்லாதவர் வருத்தத்தோடு தாங்கும் ஒரு ஆரத்தை அவருக்குக் கொடுத்தான். அவர் அதனை வாங்கிப் பூமாலைபோலக் கழுத்திலே தரித்துக்கொண்டார். இந்திரன் அதிசயம் கொண்டு, "அரசனே! இத்தினம் முதல் உன்னை உலகம் ஆரந்தாங்கு பாண்டியன் என்று மதிக்கக்கடவது" என்றான். உக்கிரபாண்டியர் அதனைச் சிறிதும் மதியாது மதுரையை அடைந்தார்.

இந்திரனுடைய கட்டளையினாலே சேரநாட்டிலும் சோழநாட்டிலும் மழை பெய்தது. பாண்டிநாட்டில் மாத்திரம் மழை பெய்யாதிருந்தது. ஒருநாள் பாண்டியர் பொதியமலையிற் சென்று வேட்டையாடினார். அப்பொழுது புட்கலாவர்த்தம் முதலியமேகங்கள் மலையில்விழுந்து மேய்ந்தன. பாண்டியர் அவைகளை (அம்மேகங்களின் அதிதேவர்களைப்) பிடித்துச் சிறையில் வைத்தார். இந்திரன் கோபங்கொண்டு பாண்டியரோடு யுத்தஞ்செய்யும் பொருட்டு மதுரையை வளைந்தான். அதனைத் தூதுவரால் அறிந்த பாண்டியர் நால்வகைச் சேனை

கள் சூழ யானைமேல் ஏறிக்கொண்டு சென்றார். பாண்டிய ருடைய சேனைகள் தேவசேனைகளைக் கொன்றார்கள். இந்திர னும் பாண்டியரும் எதிர்த்துச் சமர்செய்தார்கள். இந்திரன் குலிசாயுதத்தைச் செலுத்தினான். பாண்டியர் தமது கையி லிருந்த சக்கரத்தைச் சுழற்றி வீசினார். அது குலிசத்தை விலக்கி இந்திரனுடைய மகுடத்தைத் தள்ளி அழித்தது. உடனே இந்திரன் பயந்து ஓட்டெடுத்தான்.

போர்செய்வதற்குப் பயந்துபோன இந்திரன் "தங்கள் நாடுகளுக்கு மழைதருவேன்; மேகங்களைத் தருக, என்று உக்கிரபாண்டியருக்கு ஓலை விடுத்தான். ஓலைகொண்டுசென்ற தூதுவர் பாண்டியனுடைய திருவடிகளை வணங்கி ஓலையை நீட்டி னார்கள். அங்கே உள்ள ஒருவர் வாங்கி வாசித்துக் காட்டினார். பாண்டியர் அதுகேட்டு, இந்திரனுடைய வார்த்தையை நம் பாது, மேகங்களைச்சிறை நீக்கி விடுதற்கு உடன்படாதவராயி னார். அப்பொழுது இந்திரனுடைய சிநேகிதனாகிய ஒரு வேளாளன், "நான் பிணை" யென்று வணங்கி நின்றான். துன்பம் வரினும் உயிர் நீங்கவரினும் உண்மையைக் காத்துக் குற்றம் நீங்குமாறு நடக்கும் வேளாளமரபிற் பிறந்த அவ னுடைய சொல்லை வேதம் போல் நம்பி உக்கிரபாண்டியர் மேகங்களைச் சிறைநீக்கி விடுத்தார். இந்திரனுடைய ஏவலி னாலே மழை பெய்து பாண்டிநாடு செழித்தோங்கியது.

---

## உடுவில் ஞானவைரவ சுவாமி கோவிலும் புராண படனமும்

**சிவநேயர்களே!**

ஆலயங்களிலும் மடம் முதலாகிய சுத்த ஸ்தானங்களிலும் புரா ணங்களைப் படித்துப் பொருள் சொல்வது சிறந்த புண்ணியமாகும். யாழ்ப்பாணத்திலுள்ள சில மடாலயங்கள் புராண படனத்திற் கென்றே தோற்றுவிக்கப்பட்டதாகச் சாசனங்களாலும் கர்ணபரம் பரையாலும் அறிகின்றோம். ஆலயங்களும் மடாலயங்களும் காப்புக் கட்டிப் படிப்பதற்கு ஏற்றவையாகும். இவ்விடங்களில் கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், உபதேசகாண்டம், காசி காண்டம் முதலிய தமிழ்ப்புராணங்கள் படித்துப் பொருள் சொல் வர். புராணம் படிப்பவரும் பொருள் சொல்பவரும் காலத்திற்கும்

குணத்திற்கும் ஏற்ற இராகத்தில் படித்துப் பொருள் சொல்லல் வேண்டும். பொருள் சொல்பவர் இலக்கண வழுவின்றிக் கேட்பவர் எளிதில் உணரும்படியும் சொல்லல்வேண்டும். சிவபுராணம் படிக்கும் சபையிலே உயர்ந்த ஆசனத்தில் இருத்தல், வெற்றிலைபாக்குண்ணல், பிறவார்த்தை பேசுதல், குதர்க்கம் பேசுதல், பொருளுமையினுற் பிறிது பொருள் கற்பித்தல் முதலியன செய்யத்தகாத குற்றங்களாம். சிவபுராண படனவிதி ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்களால் சைவ உலகினர்க்குப் பயன்படுமாறு வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றது. இவ்விதிகளைப் புராண ஆரம்பதினங்களில் சபையார்கள் கேட்கும் படி வாசித்து விளங்கச் செய்யவேண்டும். சைவபுராண படனம் செய்தல், வேதாகமப் பொருள்களைச் சிறுநூல்களாகத் செய்து உலகிற்கு உதவுதல், சைவசாத்திரக் கருத்துகளுக்கு விரோதமாகக் காண்பவர்களைச் சாஸ்திர நீதியாகக் கண்டித்து நல்லறிவுச்சுடர் கொளுத்துதல் சைவப்பத்திரிகைகளை ஆதரித்தல், படிப்பித்தல், சைவப்பிரசங்கஞ் செய்தல் முதலியன சைவசாஸ்திர பரிபாலனச் செயல்களாகும். இக்காலத்தில் புராணம் படித்தல் அருகி வருவது மிக வருந்தத்தக்கதாம்.

## புராணம் படிப்பவர் கவனிக்கவேண்டியன :

1. அர்ச்சகர்களும் ஆலய அதிகாரிகளும் உபயகர்த்தாக்களும் புராணம் படிக்கும் மணித்தியாலங்களை வரையறுக்க வேண்டும். 2. புராண படன நேரம், ஆரம்பதினம், முடிவுதினம் இவைகளைத் தொடங்கும் புராணத்தின் செய்யுட்டொகைக்குத் தக்கவாறு ஒழுங்கு செய்தல் வேண்டும். 3. குறித்த மணித்தியாலங்களும் புராணப் பெயரும் அடங்கிய நேரசூசிகையும் நாழிகைவட்டமும் புராணமண்டபத்தில் வைத்துத் தாமே அதன்படி நடந்து ஊரவர்கட்கு முன்மாதிரி காட்டவேண்டும். 4. புராண ஆரம்பதினம் முடிவுதினம் முதலிய காலங்களில் புராணத் திருமுறைக்கு விசேஷபூசையும் மகேசுரபூசையும் செய்தல் வேண்டும்.

மேற்கூறிய விதிகளைத் தழுவி உடுவில் ஞானவைரவசுவாமி கோவிலில் பிரமாதிஞு ஐப்பசிமீ ௩௨ விஜயதசமியில் திருவிளையாடற்புராணம் ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. முடிவுப்படிப்பு கார்த்திகைமீ ௧௮-ம் திகதியாகும்.

இங்ஙனம்

ஐ. முத்துச்சாமிக் குருக்கள்,

உடுவில்.

# மதிப்புரை

## சிவசம்புப்புலவர் பிரபந்தத்திரட்டு (முதற்பாகம்)

இது ஆரியதிராவிடபண்டிர் திரு. செவ்வந்திநாத தேசிகரால் திரட்டப்பெற்று, ஈழகேசரி திரு. நா. பொன்னையா பிள்ளையால் வெளியிடப்பட்டது. விலை ரூபா ஒன்று.

இப்பிரபந்தத்திரட்டில் இராமநாதபுரம் பாற்கரசேதுபதி கல்லாடக் கலித்துறை, பாற்கரசேதுபதி நான்மணிமாலை, பாண்டித்துரைத் தேவர் நான்மணிமாலை, மயில்வாகனவம்ச வைபவம், வல்லைக் கந்தசாமி பிரபாவப்பாமாலை, பருத்தித்துறைக் கலித்துறை, வல்லைக் கலித்துறை, அணைக்குடி இராமசாமிப்பிள்ளை, சித்தங்கேணி வைத்தியலிங்கபிள்ளை, கரவைச் சிற்றம்பலமுதலியார், நவிண்டிற் சதாசிவக் குருக்கள் முதலியோர் மீது பாடிய தனிச்செய்யுட்கள் அடங்கியுள்ளன. இவற்றைத் திரட்டி யுதவிய தேசிகர் அவர்களுக்குத் தமிழகத்தார் என்றும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையர். புலவர் அவர்கள் சுப்ரமணியசுவாமி மீது மிகுந்த பத்தியுடையவர் என்பதும், இலக்கிய இலக்கண நூல்களையும் வேறு பல நூல்களையும் தகுந்த மாணவர்களுக்குப் போதித்தலிலேயே தமது காலம் முழுவதையும் போக்கியவர் என்பதும், சொல்லும் பொருளும் தொடைகளும் சிறப்புற வைத்துக் கவியமைப்பதில் வல்லவர் என்பதும் தமிழுலகு நன்கு அறிந்தனவே. இவர் இயற்றிய ஏனைய நூல்களும் உரைகளும் அச்சிற் பதிப்பிக்கப்படின் மிகப் பிரயோசனப்படும்.

## ஸ்ரீ மாணிக்கவாசக சரித்திரம்

இது நமது சமயாசாரியமூர்த்திகள் நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசகசுவாமிகளது சரித்திரமுணர்த்தும் வடமொழிப் புராணம். இது ஞானதீக்ஷாகண்டம், அச்வவிக்ரயகண்டம், பிஷ்டமிருத்பரணகண்டம், சிவக்ஷேத்ரயாத்ராகண்டம், சிதம்பரகண்டம், சிவசாயுஜ்யகண்டம் என்னும் கண்டங்களையுடையது. ஒவ்வொரு கண்டத்திலும் பல அத்தியாயங்கள் உள்ளன. இது மாணிக்கவாசக சுவாமிகளது மகிமையெல்லாம் அங்கைநெல்லிக்கனிபோல் எடுத்து விரித்துரைக்கும் திவ்ய நூல். இது நேமத்தான்பட்டி ஸ்ரீ மு. பெ. ப. சு. பழநியப்பச்செட்டியார் பொருளுதவி கொண்டு, இராமச்சந்திரபுரம் ஸ்ரீ உ. மு. உ. உலகப்பச் செட்டியாரால் பதிப்பிக்கப்பட்டது. சிவசரிதைகளையும், சிவனடியார் சரிதைகளையும் பிரசங்கித்தலிலும், பிரகடனஞ்செய்தலிலும் சிறந்த புண்ணியம் வேறில்லை.

**பத்திராதிபர்.**

# சாஸ்திரோபதேசக் கிரமம்

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
க்டிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே

சதாசிவராற் கலக்குவிக்கப்பட்ட விந்துவிலிருந்து சைவகாயத்திரிசத்தி தோன்றியது. அச்சத்தியால் அதிட்டிக்கப்பட்ட சைவசந்தானமானது வித்தியேசுராதி கிரமமாக நாட்டப்பட்டது. விந்து கலங்கியபோது அநந்தாதி வித்தியேசுரர் எண்மர் தோன்றினர். அவருள் தலைவராகிய அநந்தேசுரரால் மாயை கலங்கியபோது பிரகிருதி தத்துவத்திலுள்ள கைலாசத்தில் வீற்றிருந்தருளும் ஸ்ரீகண்ட உருத்திரர் தோன்றினர். அந்த ஸ்ரீகண்டரால் விட்டுணு தோன்றினர். விட்டுணுவால் பிரமாவும், பிரமாவால் இந்திரன் முதலிய தேவர்களும் பிறருந் தோன்றினர். திரும்ப அந்த ஸ்ரீகண்டரால் துருவாச முனிவர் தோன்றினர். பின்பும் அந்த ஸ்ரீகண்டரது சங்கற்ப ரூப சிருட்டியால் கௌசிகர் முதலிய சிவப்பிராமணர் தோன்றினர்.

அதிபரமாப்தராகிய சதாசிவமூர்த்தி சாதாக்கிய தத்துவத்தில் எழுந்தருளியிருந்து ஆன்மாக்கள் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கையும் விரும்பி அடையும் பொருட்டு இருபத்தெட்டு ஆகமங்களைக் குருபரம்பரைக் கிரமமாக வெளிப்படுத்தியருளினார். அந்தக் குருபரம்பரைக் கிரமம் மகௌகக் கிரமமென்றும், பிரதிசங்கிதாக் கிரமமென்றும் இருவகைப்படும். சிவாகமங்களை முதலில் வித்தியேசுரரின் தலைவராகிய அநந்ததேவருக்கு உபதேசித்தருளினார். அது மகௌகக் கிரமமெனவும் அநந்தேசுராதி சம்பந்தம் எனவும் சொல்லப்படும். அநந்தரால் ஸ்ரீகண்டருக்கும், ஸ்ரீகண்டரால் தேவர்களுக்கும், தேவர்களால் முனிவர்கட்கும், முனிவர்களால் மனுடருக்கும், மனுடரால் மனுடருக்

கும் உபதேசிக்கப்படும். இங்ஙனம் உபதேசிக்கப்படுங்கால் உளவாகிய சம்பந்தமும் ஆறுவிதமாம். சதாசிவருக்கும் அநந்தேசுரருக்குமுள்ள ஆகமசம்பந்தம் பரசம்பந்தம் எனவும், அநந்தேசுரருக்கும் ஸ்ரீகண்டருக்குமுள்ள சம்பந்தம் மகாசம்பந்தம் எனவும், ஸ்ரீகண்டருக்கும் தேவர்களுக்குமுள்ள சம்பந்தம் அந்தராள சம்பந்தம் எனவும், தேவர்களுக்கும் முனிவர்களுக்குமுள்ள சம்பந்தம் திவ்வியசம்பந்தமெனவும், முனிவர்க்கும் மனுடர்க்குமுள்ள சம்பந்தம் திவ்வியா திவ்வியம் எனவும், மனுடருக்கும் மனுடருக்குமுள்ள சம்பந்தம் அதிவ்ய சம்பந்தம் எனவும் பூர்வாசாரியர்கள் கூறியுள்ளார்கள்.

இனி, காமிகம் முதலிய இருபத்தெட்டாகமங்களும் சிவபேதம் ருத்திரபேதம் என இருதிறப்படும். அநந்தேசுரருக்கு உபதேசமானபின் இருபத்தெட்டாகமங்களுள்ளும் காமிகம் முதலிய பத்தாகமங்களையும் விஞ்ஞானகலருள் பிரணவர் முதலிய பத்துச் சிவன்களுக்கும் உபதேசித் தருளினர். ஆகையால் அப்பத்தும் சிவபேதம் எனப்படும். சிவபேதம் பத்தையும் கேட்டவர் ஒருவரிடத்தொருவராக ஒவ்வோராகமத்துக்கும் மும்மூன்றுபேராய் அணுசதாசிவருட்டலைவராகிய பிரணவர்முதல் முப்பதின்மராவர். இது பிரதிசங்கிதாக்கிரமம் எனவும் பிரணவாதி சம்பந்தமெனவும் சொல்லப்படும்.

**சிவபேதம் பத்தும் கேட்டவர்**

| | | | |
|---|---|---|---|
| 1. | காமிகம் கேட்டவர் | ... | பிரணவர், திரிகலர், ஹரர். |
| 2. | யோகஜம் | ,, ... | சுதர்க்கியர், பஸ்மர், விபு. |
| 3. | சிந்தியம் | ,, ... | சுதீப்தர், கோபதி, அம்பிகை. |
| 4. | காரணம் | ,, ... | காரணர், சர்வருத்திரர், பிரஜாபதி. |
| 5. | அசிதம் | ,, ... | சுசிவர், சிவர், அச்சுதர். |
| 6. | தீப்தம் | ,, ... | ஈசர், திரிமூர்த்தி, உதாசனர். |
| 7. | சூக்குமம் | ,, ... | சூக்குமர், வைச்சிரவணர். பிரபஞ்சனர் |
| 8, | சகச்சிரம் | ,, ... | காலர், பீமர், தருமர். |
| 9. | அம்சுமான் | ,, ... | அம்பு, உக்கிரர், ரவி. |
| 10. | சுப்பிரபேதம் | ,, ... | தெசேசர், விக்கினேசர், சசி. |

சிவபேதங்களுக்குச் சம்பந்தம் ஆறுவிதமாம். அவை வருமாறு:—சதாசிவருக்கும் பிரணவருக்குமுள்ள சம்பந்தம் பரமெனவும், பிரணவருக்கும் திரிகலருக்குமுள்ள சம்பந்தம் மாகானெனவும், திரிகலருக்கும் அரருக்குமுள்ள சம்பந்தம் அந்தராளம் எனவும், அரருக்கும் தேவருக்கும் உள்ள சம்பந்தம் திவ்வியமெனவும், தேவர்களுக்கும் இருடிகளுக்குமுள்ள சம்பந்தம் திவ்வியாதிவ்வியம் எனவும், இருடிகளுக்கும் மனுடருக்குமுள்ள சம்பந்தம் அதிவ்யம் எனவும் சொல்லப்படும்.

சிவபேதம் பத்தனுள் யோகசம் முதலிய ஒன்பது ஆகமங்களைச் சொன்னவர் கேட்டவர்களுடைய சம்பந்தத்தையும் சதாசிவருக்கும் சுதாக்கியருக்குமுள்ள சம்பந்தம் பரம் சுதாக்கியருக்கும் பஸ்மருக்குமுள்ள சம்பந்தம் மகாசம்பந்தம்; பஸ்மருக்கும் விபுவுக்குமுள்ள சம்பந்தம் அந்தராளம் என்பது முதலாக அறியத்தக்கது.

ஈசுரதத்துவத்திலிருக்கும் அநாதிருத்திரர் முதலிய பதினெண்மர்களையும் அறிஞர்களாக்கி அச் சதாசிவநாயனாரால் அவர்களுக்கு உபதேசிக்கப்பட்ட விஜயம் முதலிய பதினெட்டாகமங்களும் உருத்திரபேதமெனப்படும்.

உருத்திரபேதம் பதினெட்டையும் கேட்டவர் ஒருவரிடத்தொருவராக ஒவ்வோராகமத்துக்கு இவ்விரண்டு பேராய் அநாதிருத்திரர் முதல் முப்பத்தறுவராவார்.

**உருத்திரபேதம் பதினெட்டும் கேட்டவர்**

1. விஜயம் ... அநாதிருத்திரர், பரமேசர்.
2. நிச்வாசம் ... தசார்ணர், பார்வதி.
3. சுவாயம்புவம் ... நிதனேசர், பத்மபூ.
4. ஆக்கினேயம் ... வியோமர், உதாசனர்.
5. வீரம் ... தேசர், பிரசாபதி.
6. ரௌரவம் ... பிரமேசர், நந்திகேசர்.
7. மகுடம் ... சிவர், மகதேவர்.
8. விமலம் ... சர்வாத்மர், வீரபத்திரர்.
9. சந்திரஞானம் ... அநந்தர், பிரகஸ்பதி.
10. முகவிம்பம் ... பிரசாந்தர், ததீசி.

| | | | |
|---|---|---|---|
| 11, | புரோற்கீதம் | ... | சூலி, கவசர். |
| 12. | இலளிதம் | ... | ஆலயேசர், இலளிதர். |
| 13. | சித்தம் | ... | விந்து, சண்டேசர். |
| 14. | சந்தானம் | ... | சிவநிஷ்டர், அசம்பாதர். |
| 15. | சருவோக்தம் | ... | சோமதேவர், நிருசிங்கர். |
| 16. | பாரமேசுரம் | ... | சீதேவி, உசனர். |
| 17. | கிரணம் | ... | தேவவிபு, சம்வர்த்தர். |
| 18. | வாதுளம் | ... | சிவர், மகாகாளர். |

உருத்திரபேதங்களுக்குச் சம்பந்தமும் ஐந்துவிதமாகும். அவை வருமாறு:—சதாசிவருக்கும் அநாதிருத்திரருக்கு முள்ள சம்பந்தம் பரம் எனவும், அநாதிருத்திரருக்கும் பரமேசுரருக்குமுள்ள சம்பந்தம் மகான் எனவும், பரமேசுரருக்கும் தேவருக்குமுள்ள சம்பந்தம் திவ்வியம் எனவும், தேவர்களுக்கும் இருடிகளுக்குமுள்ள சம்பந்தம் திவ்வியாதிவ்வியம் எனவும், இருடிகளுக்கும் மனுடருக்குமுள்ள சம்பந்தம் அதிவ்யம் எனவும் சொல்லப்படும்.

**சைவசமயநெறி**

இருபது மெட்டுமே மூலமுப **பேதம்**
இருநூறு மேழுமென வெண்.
அறுபத் தறுவர் பிரணவ ராதி
அறிவுறக்கேட் டாராக மம்.

ஸ்ரீகண்டரிடத்திலே தீக்ஷை அடைந்து ஆகமோபதேசம் பெற்றவராகிய துருவாசமுனிவர் கோதாவரி ஆற்றங்கரையிலே மந்தரகாளிபுரத்திலே, மந்தரகாளிவாசராகிய சிவபெருமானுடைய சந்நிதியிலே கதம்பவிருட்ச சமீபத்திலே ஆமர்த்தக மடமென்னும் பெயரையுடைய தபச்சாலையைத் தாபித்து வசித்தார். கௌசிகர், காசியபர், அகத்தியர், பாரத்துவாசர், கௌதமர் என்னும் சிவப்பிராமணமுனிவர் ஐவரும் அந்த ஆமர்த்தகமடத்தில் வசித்தார்கள். அவர்கள் தக்ஷிணாமூர்த்திரூப ஸ்ரீகண்டரை உபாசித்து ஆகமோபதேசம் பெற்றார்கள்.

சத்தியோஜாத முகத்தினின்றும் காமிதம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம் என்னும் ஐந்தாகமங்களும் கௌசிக இருடியின் பொருட்டுத் தோன்றின. இவற்றின்

படியே இவருக்குத் தீக்ஷை செய்யப்பட்டது. வாமதேவ முகத்தினின்றும் தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அம்சுமான், சுப்பிரபேதம் என்னும் ஐந்தாகமங்களும் காசிபரிஷியின் பொருட்டுத் தோன்றின. இவற்றின்படியே இவருக்குத் தீக்ஷை செய்யப்பட்டது. அகோர முகத்தினின்றும் விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம் என்னும் ஐந்தாகமங்களும் பாரத்துவாச இருடியின் பொருட்டுத் தோன்றின. இவற்றின்படியே இவருக்குத் தீக்ஷை செய்யப்பட்டது. தத்புருஷ முகத்தினின்றும் ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம் என்னும் ஐந்தாகமங்களும் கௌதம இருடியின் பொருட்டுத் தோன்றின. இவற்றின்படியே இவருக்குத் தீக்ஷை செய்யப்பட்டது. ஈசானமுகத்தினின்றும் புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம் என்னும் எட்டாகமங்களும் அகத்திய இருடியின் பொருட்டுத் தோன்றின. இவற்றின்படியே இவருக்குத் தீக்ஷை செய்யப்பட்டது.

அவர்களுடைய சீடர்களாகிய சனற்குமாரர், சனகர், சனாதனர், சனந்தரர்என்பவர்களும் அவ்வாறே ஸ்ரீகண்டரை உபாசித்து ஆகமோபதேசம் பெற்றனர். இவர்கள்பொருட்டு ஆமர்த்தகமடத்தினின்று இரணபத்திரம், கோளகி, புஷ்பகிரி என்னும் மூன்று மடங்கள் செய்யப்பட்டன.

ஆமர்த்தக முதலிய இந்நான்குமடங்களும் மந்தரகாளீசரைச் சூழ்ந்து இருந்தன. அவ்விடத்திற்றான் சிவாசாரியர்கள் விசேஷமாக இருந்தார்கள். இவற்றுள் ஆமர்த்தக மடத்துக்கு அதிபர் சனற்குமாரர். இவரது சந்தானத்துள்ளவர்கள் இம்மடாதிபதிகளாய் இருந்தார்கள். புஷ்பகிரி மடத்துக்கு அதிபர் சனகர். இவரது சந்தானத்துள்ளவர்கள் இம்மடாதிபதிகளாக இருந்தார்கள். கோளகி மடத்துக்கு அதிபர் சனாதனர். இவர் சந்தானத்துள்ளவர்கள் இம்மடாதிபதிகளாக இருந்தார்கள். இரணபத்திர மடத்துக்கு அதிபர் சனந்தனர். இவர் சந்தானத்தவர்கள் இம்மடாதிபதிகளாய் இருந்தார்கள்.

இனி, சிவசிருட்டியாலே தோன்றிய கௌசிகர் காசியபர் முதலானவரும், கேவலப்பிரமசிருட்டியாலே தோன்றிய

கௌசிகர், காசியபர் முதலிய சாமானியப் பிராமணரும் பெயரால் ஒப்பாராயினும் பொருண்மையால் வேறுவேறுவர். இங்கே கூறப்பட்ட கௌசிகர், காசியபர் முதலியோர் சிவசிருட்டியினுலே தோன்றியவராய்ச் சிவபெருமானது ஐந்து முகங்களிலே தீக்ஷிதரான ஆதிசைவர்களே.

ஆமர்த்தகமட சம்பிரதாயத்துத் தோன்றிய கௌசிகர் முதலிய முனிவர்கள் முதலாம் மனுவாகிய சுவாயம்பு மனுவின் எல்லைவரையும் இருந்தார்கள். இரண்டாம் மனுவின் காலத்தில் பிராசாபத்தியமுனி முதலியோர் அம்மடங்களின் சம்பிரதாய நாயகர்களாய் இருந்தார்கள். மற்றைய மனுக்கள் காலத்தினும் அச்சந்ததியார் இருந்தனர். இக்கலியுகத்தின் ஆரம்பத்திலே அந்த ஆதிசைவப் பிராமண காசிபாதி கோத்திர பாரம்பரியத்திலே வியாபகசம்பு முதலியோர் சம்பிரதாய பதிகளாய் இருந்தார்கள்.

ஒரு காலத்திலே இராஜேந்திர சோழன் என்னும் அரசன் வடக்கே சென்று கங்காஸ்நானம் செய்து திரும்பினுன். அப்பொழுது அங்குள்ள ஆதிசைவர்களைத் தரிசித்து உபசரித்து அழைத்துவந்து தென்னுட்டிலும் காஞ்சிபுரத்திலும் பிறவிடங்களிலும் இருத்தினுன். பிரமசிருட்டர்களாகிய நான்கு வருணத்தவர்களும் பிறரும் அந்த ஆதிசைவப் பிராமணரிடத்திலே தீக்ஷைபெற்று ஆகமோபதேசம் பெற்றுச் சைவர்களாயினர்.

---

# சைவசமய சாஸ்திரங்கள்

(முற்றொடர்)

இப்பதினன்கு நூல்களின் பெயரும் அவற்றை இயற்றியருளிய அருளாளர்களின் பெயரும் வருமாறு :—

| | |
|---|---|
| திருவுந்தியார் | .... உய்யவந்ததேவநாயனர் |
| திருக்களிற்றுப்படியார் | .... திருக்கடவூர்உய்யவந்ததேவநாயனர் |
| சிவஞானபோதம் | .... மெய்கண்டதேவர் |
| சிவஞானசித்தியார் | அருணந்திசிவாசாரியர் |
| இருபாவிருபஃது | |
| உண்மைவிளக்கம் | .... மனவாசகங்கடந்தார் |
| சிவப்பிரகாசம் | .... உமாபதிசிவாசாரியர் |
| திருவருட்பயன் | .... ,, |
| வினவெண்பா | .... ,, |
| போற்றிப்பஃறொடை | .... ,, |
| கொடிக்கவி | .... ,, |
| நெஞ்சுவிடுதூது | .... ,, |
| உண்மைநெறிவிளக்கம் | ,, |
| சங்கற்பநிராகரணம் | .... ,, |

இச் சாஸ்திரங்களுக்கு அச்சில் வந்தனவும் வாராதனவுமாகிய உரைகள் பல. சிவஞானபோதத்துக்குத் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து மாதவச்சிவஞான யோகிகளால் ஒரு சிற்றுரையும், சிவஞானபோதமாபாடியம் எனப் பெயரிய ஒரு பேருரையும் செய்தருளப்பட்டன. இப் பேருரை இச் சிவஞானபோதத்துக்கும் இதன் முதல்நூலாகிய வடமொழிச் சிவஞானபோதத்துக்கும் வழிநூல் சார்புநூல்களாகிய ஏனைச் சித்தாந்தசாத்திரங்களுக்குமுள்ள பொருளொருமையை இனிது விளக்கி இதற்குச் சிறந்த ஓர் அணிகலனுயுள்ளது. வடமொழிச் சிவஞானபோதத்துக்கு ஓர் இலகு வியாக்கியானமும் பாஷ்யமும் ஸ்ரீ சிவாக்கிரயோகிகளாற் செய்தருளப்பட்டன. சிவஞானசித்தியார்சுபக்கத்துக்கு முன்னுளில் உரை

இயற்றினோர் மறைஞானதேசிகர், சிவாக்கிரயோகிகள், ஞானப் பிரகாசமுனிவர், நிரம்பவழகியதேசிகர், சிவஞானயோகிகள், சுப்பிரமணியதேசிகர் என்னும் அறுவர். பரபக்கத்துக்கு உரை இயற்றினோர் தத்துவப்பிரகாசர் முதலாயினோர்.

பதினன்கு சித்தாந்தசாஸ்திரங்களையும் முதனூலாகக் கொண்டு அவற்றுட் கூறப்பட்ட நுண்ணிய உண்மைகளை விரித் துணர்த்துவான் றோன்றிய சைவநூல்கள் திருவாவடுதுறை ஆதீனத்துப் பண்டாரசாத்திரங்களும், தருமபுர ஆதீனத்துப் பண்டாரசாத்திரங்களும் பிறவுமாம். குமரகுருபரசுவாமிகள பிரபந்தம், சிவஞானயோகிகள் பிரபந்தம், தாயுமானவர்பாடல் முதலியனவும் சித்தாந்த நுண்பொருள் விளக்கும் தமிழ் நூல்களாம்.

சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய வேதசிவாகமங்களும், திருமுறைகளும், சித்தாந்தசாஸ்திரங்களும் இவற்றுக்கு மாறுபடாத ஏனைய நூல்களும் வைதிகசைவசமயிகளுக்குரிய பிரமாண சாஸ்திரங்களென்று சொல்லப்படும். விதிவிலக்குக்களை வரன்முறை செய்வதே பிரமாணமெனப்படுவது. பிரமாணம் தைவீகப் பிரமாணம் எனவும், அரசியற் பிரமாணம் எனவும், சனசமூகப் பிரமாணம் எனவும் மூவகைப்படும். வேதாகமங்களே தைவீகப் பிரமாணம். அரசியற் பிரமாணத்தை மீறினோர் தண்டிக்கப்படுதல் போலத் தைவீகப் பிரமாணத்தை மீறினோருந் தண்டிக்கப்படுவர்.

இனி, நம்மனோர் சமயசாஸ்திரங்களையும் தருக்கம் முதலிய கலைநூல்களையும் பிரீதியோடு கல்லாமையினாலும், பிறருக்குக் கற்பித்தலும், எல்லாரும் அறிந்துய்யப் பிரசங்கித்தலும் செய்யாமையாலும் நமது புராதன வைதிக சைவசமயம் இக்காலத்தில் வரவரக் குன்றுகின்றது. அங்ஙனம் நமது சமயவிளக்கம் குன்றாமல் நாம் அத்தியாவசியகம் செயற்பாலனவாகும் சமயஸ்தாபன கருமங்கள் சைவசமயசாஸ்திரங்களை நன்றாகக் கற்றல், கற்பித்தல், பிரசங்கித்தல், சமயஸ்தாபன கிரந்தங்கள் பரசமயகண்டன கிரந்தங்களை இக்காலத்துக் கேற்பச் செய்தல், பழைய வைதிக சைவசமய ஸ்தாபன சாஸ்திரங்களும் பிறவும் இறந்து போகாமற் பாதுகாத்தல் முதலியனவேயாம்.

---

# பரவித்தியா

[சேலம் ஸ்ரீ ஸ்வர்ணாம்பிகா சைவசித்தாந்தசபை
G. சிவசுப்பிரமணியக் குருக்கள் அவர்கள் எழுதியது]

**வதத்ஷூ-ஒஷ௱-ஓகம் ஜூ௱நம் காஶிகாஶிவாரு௦ ஹவெகூ ।**
**வெஷாஷத்ஷூ ஜவாரு௦ ஜூ௱நம் வ௱௱வா௱ாத்ஷூ-ஒஷ௱-ஓகூழ ॥**

வேதம் முதலியன பசுபாசங்களை விளக்குவன. அவை அபர வித்தை எனப்படும். பதிலக்ஷணத்தை விளக்குவது ஆகமம் (காமிகம் முதலியன). இதுவே பரவித்தையாகும் எனக் காமிகாகமம் கூறுகின்றது.

வாயு ஸம்ஹிதை

**௱ிவாமசெ௱க்தூ௦ யகூஜூ௱நம் தஷத்ரு ஜூ௱நஜ௱அூதெ ।**

சிவாகமத்தில் கூறப்பட்டதுவே ஞானம் எனவும்,

பரிவ்ராஜ உபநிஷத்

**ஸவ௱ா௱மஜயசூிவஃ ।**

எல்லா ஆகம வடிவினர் சிவபெருமான் எனவும்,

திருவாசகம்

**ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க.**

ஆகமவடிவாய் நின்று அருள்செய்பவனது திருவடிவாழ்க எனவும்,

மகுடாகமம்

**வெஷாஷாத்ஷூ-ஓதிதம் ஜூ௱நம் ஸிஷாஷம் வரு௦ ௱ஹூ ।**

வேதாந்தப் பொருளாக விளங்குவதும், மிக மேலானதும், மங்களத்தைச் செய்வதும் (ஆகம) ஸித்தாந்தமே எனவும் நவிலுகின்றன.

புறச்சமய நெறினின்று மகச்சமயம் புக்கும்
　　புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
　　மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச்
　　சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
　　செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்,

உலோகாயதம் முதலிய புறச்சமயங்களிலே சென்று சென்று அந்தந்த சாஸ்திரங்களிற் சொன்னபடி அநுட்டித்தும், தருமாதியான சதுர்வித புருஷார்த்தங்களையும் சொல்லும் வைதிகத்திலே பொருந்தி ருஷிகளாற் செய்யப்பட்ட ஸ்மிருதியுக்தாநுஷ்டான மார்க்கத்திலே நின்று வருந்தியும், மேலுமந்த ஸ்மிருதிலேயே சொல்லும் பிரமசரியாதி ஆச்சிரமங்களை அடைந்து அந்தந்த ஆச்சிரமங்களுக்கேற்ற தருமங்களை யநுஷ்டித்தும், வேதாந்தங்களாகிய வியாகரணுதி கலைஞானங்களை யுணர்ந்தும், வேதாத்தியயனத்தைக் குறைவறப் பண்ணியும், மகாபுராணங்களையுமறிந்தும், உபநிஷத் வித்தையை அப்பியஸித்தும் தேர்ச்சியுற்றால், அந்தப் புண்ணிய பலத்தினலே பின்பு சிவாகமம் பயின்று, சரியை கிரியை யோகவழி பற்றி, பின்பே சிவஞானம் பெறலாகும் என அருணந்திசிவாசாரியர் சிவஞானசித்தியாரிற் கூறியருளினர்.

சிவபிரான் தமது ஊர்த்துவமுகத்தினின்று சிவாகமங்களை அருளிச்செய்தனர். இது சமஸ்தமான சாஸ்திரக் கருத்துக்களையும் தன்னுளடக்கியுள்ளது. யாகம், தபஸ், தானம், தீர்த்தாடனம் இவைகளாற் பெறத்தகும் பயனைக் காட்டிலும் கோடிமடங்கு அதிகம்பயனைத் தரவல்லது சிவலிங்கார்ச்சனையேயாகும் எனக் காரணுகமம் முறையிடுகின்றது. இதனல்,

**ஸவ-ஜ்ஞ: ஸவிவ-ஹண-ஶ்வ ஶிவொ ஜ்ஞெய ஶிவாமெ ।**

ஸர்வஞ்ஞரும், எங்கும் நிறைந்தவருமாகிய சிவன் சிவாகமத்தால் அறியத்தக்கவர் எனச் சிவபுராணம் அறிவிக்கிறது. ஆதலால், எல்லா நூல்களைக் காட்டிலும் சிவாகமமே மேலானதெனப்படுகிறது. வேதத்துள் இந்திரன் முதலிய பல தேவர்களையும் யாகம் முதலிய பல கன்மங்களையும் கூறி, சிவோபாசனை சிறந்தது என விரித்துரைக்கப்பெற்றுள்ளது. ஆகமம் சிவனே பரம்பொருள் எனவும், சிவோபாசனையே சிறந்தது எனவும் சிவஞானமே பேரின்பம் எனவும் நிச்சயித்துக் கூறியதால் சிவாகமமே பரவித்தை எனப் பல சுருதிப் பிரமாணங்களும் உத்கோஷிக்கின்றன. ஆகமத்தில் சரியை முதலியன சிவஞானத்தை உணர்த்துவனவாயுள்ளன. சிவயாகம் ஞான

ஸ்வரூபம். ஆகமாந்தமே சித்தாந்தம் என்பது நிச்சயிக்கப் பட்டது. "தானான வேதாந்தம் தானென்னும் சித்தாந்தம்" எனத் திருமூலநாயனார் அருளியிருக்கிறார்.

சிவதீக்ஷை முதலிய கிரியை யோகங்களினாலும், சீவபோதத்தை நீக்கி, சிவபோதம் உண்டாக்கப்படுதலை "சீவபோதம் நீங்கிச் சிவனாவனாமே" என்பதனால் திருமூலர் விரித்துரைத் திருக்கின்றார். பஞ்சசுத்திக் கிரமத்தால் சரியை முதலிய நான்கு உபாசனைகளும் அநுஷ்டிக்கப்படுகின்றன. இல்வாழ் வான் ஏனைய ஆச்சிரமிக்கும் மேலானவன் எனப்படுவது போல், சற்புத்திரமார்க்கத்துள்ளவன் (சிவலிங்கார்ச்சனை புரிபவன்) சரியா யோக ஞான மார்க்கிகளைக் காட்டிலும் சிறந்தவனாவன். சிவலிங்கார்ச்சனையாகிய கிரியாமார்க்கமே சிறந்தது. இதனை,

> ஸவஹயஜ்ஞ தவொ தாந தீர்த்தஹெஸெஷு யகூ ஹலும் ।
> தகூ ஹலும் கொடி மாணிதம் ஶிவஹிம்மாஅநா ஹலும் ॥

என்னும் காரணாகம கிரந்தம் வலியுறுத்துகிறது.

> வஞாக்ஷாஜவொ ஹஸ்ஸநாநம் ஹிம்மாஅநா க்ரயம் ।
> க்ஷாவிஷவிந த்யாஜ்யம் யயா ஶக்தி ஸஊாஅஸெக ॥

பஞ்சாக்ஷரஜபம், விபூதிதாரணம், சிவலிங்கபூஜை இம்மூன்றையும் எக்காலத்திலும் விடக்கூடாது; சக்திக்குத் தக்கபடி யநுஷ்டித்தல்வேண்டும் எனக் கூர்மபுராணம் முறையிடுகின்றது.

> ஶிவஹிம்மணிஸ்ஸாக்ஷாகூ உறு வஞாக்ஷாஸ்தயா ।
> ஹூதிஸெவளஷயம் வாஸாம் த்ரவியம் உக்திகாரணம் ॥

ரஸமணியானது சிவலிங்கம்; மந்திரம் பஞ்சாக்ஷரமே; மருந்து விபூதியே எனச் சூதமுனிவரும் அருளினார்.

மேலே சொல்லிய விபூதி, பஞ்சாக்ஷரம், சிவலிங்கம் ஆகிய இம் மூன்றும் ஆகமங்களிலேயே சிறப்புறக் கூறப்பட்டிருக்கின்றன. இம்மூன்றைத் தவிர மோக்ஷமார்க்கம் வேறின்மையால் சிவஞானத்தைத் தரும் சிவாகமமே பரவித்தை என்பதில் ஐயமில்லை.

உபந்யாசகன் தனது முடிவுரையில் தனது சொற்பொழி வின் சாரமாகிய கருத்துக்களைத் தொகுத்துரைப்பது போல், சகல வேத வேதாங்க தர்ம இதிகாச புராணங்களைத் திருவாய் மலர்ந்தருளிய சிவபெருமான் முடிந்த முடிவாகிய (சித்தாந்த மாகிய) ஆகமத்தை அருளிச்செய்தனர். ஆகமநூல்களை அநுபவத்திற் கொண்டு விளக்குவது சிவாலயமே. இதனுள் சரியா கிரியா யோக ஞான உபாஸனைகள் புரிவதற்குப் பற்பல உயரிய சாதனங்கள் நிறைந்திருக்கின்றன. இதனாலே சிவால யத்தைச் சிவனெனவே வழிபடுக என ஞானசாஸ்திரங்கள் அறிவுறுத்துகின்றன.

ஆகவே, "சிவனோ டொக்குந் தெய்வம் தேடினுமில்லை" என்றவாறு சிவனே பரம்பொருள் எனவும், சிவாகமமே பர வித்தை எனவும் அறிந்து, ஆகம விதிமுறை நின்று, அண் ணலார் அடியார்தமை அடைந்து, அடிபணிந்து, ஆனந்த நன்னிலை அடைவோமாக.

---

# ஸ்ரீகுண்டல விகுண்டலர்

## (புராணகதைப் பகுதி)

**[வண்வண : ஆசிரியர்**
**பிரம்மஸ்ரீ க. வை. ஆத்மநாத சர்மா அவர்கள் எழுதியது.]**

கிருதயுகத்தில் நிடதநாட்டிலே ஏமகுண்டலன் எனப் பெயர்பெற்ற வணிகன் ஒருவன் இருந்தான். அவன் தனது குலத்தொழிலாகிய பயிர்ச்செய்கை, பசுக்காத்தல், வியா பாரம் என்பவற்றை நன்கு போற்றிவந்தான். அவற்றால் எட்டுக்கோடி பொன் வரையில் தேடிக்கொண்டான். அவன் ஒருநாள் பின்வருமாறு சிந்திப்பானாயினன்: "யான் தேடிய பொருள்களும், அவற்றால் நான் அனுபவிக்கும் இன்பமும் விரைவில் அழிவனவேயாம். சிவபெருமான் ஒருவரே அழி வற்றவர். அவருடைய திருவடியைத் தரிசித்தவர்கள் பிறவித் துன்பம் நீங்கப்பெறுவர். அதனால் அவரைக் காணும் வழி யாது? சிவபெருமானை அடைவதற்குச் சிறந்தவழி தான

தருமஞ் செய்தலேயென்று சைவ சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகவே, எனது பொருள்களில் ஆறில் ஒரு பங்கைக்கொண்டு தான தருமஞ் செய்வேன்" என்றிவ்வாறு நிச்சயஞ்செய்து கொண்டு சிவபெருமானுக்கும் விஷ்ணுவுக்கும் தனித்தனியாக ஒவ்வோர் ஆலயம் அமைத்தான். ஆல் அரசு மா வேம்பு நாகை முதலிய மரங்களை வைத்து நல்ல சோலைகளை ஆக்கினன். பூசைக்குரிய பூமரங்களை வளர்த்தான். பல தண்ணீர்ப்பந்தர்களை நிறுவினன். ஏழைகளுக்கு அன்னமிடுதல், திருக்கோவில்கள், பிராமணர் முதலாயினருக்குப் பாற்பசுக்களைக் கொடுத்தல், அநாதைகள் வசிப்பதற்கான குடியிருப்புக்களைக் கொடுத்தல், சுவர்ணதானஞ் செய்தல் என்பவற்றைக்கிரமமாக நடத்திவந்தான். தேவபூசையும், அதிதிபூசையும் முடித்தன்றி அவன் ஒருநாளும் உணவுகொள்வதில்லை.

நற்குண நற்செயல் வாய்ந்த அந்த வணிகனுக்கு ஸ்ரீகுண்டலன் விகுண்டலன் என இரு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்கள் கிரமமாக வளர்ந்து தகுந்த பருவம் எய்தினர். தந்தையானவன் குடும்பபாரத்தைத் தனயரிடம் ஒப்புவித்தான். ஏமகுண்டலன் இடைவிடாத சிவத்தியானத்தினல் உலக இச்சையை ஒருவினன். அநாயாசமாக உடலை விட்டான். எம்பெருமானுடைய திருவடிநீழலில் பேரானந்தப் பெருவாழ்வடைந்தான் பிதாவுக்குச் செய்ய வேண்டிய தீக்கடன் நீர்க்கடன்களைப் பிள்ளைகள் கிரமமாகச் செய்து நிறைவேற்றினர்.

இளவணிகர் இருவரும் சிரமமில்லாமலே பெருஞ் செல்வத்துக்கு அதிபதிகளானார்கள். நடுச்சமுத்திரத்திலே திசையறியாது ஓடுகின்ற ஒருகப்பலைப்போல அந்தவாலிபர் இருவரும் பெருஞ்செல்வத்தின் மத்தியில் இருந்து கொண்டு செய்வதின்னதென அறியாராயினர். தாம் செல்வவந்தர் என்ற இறுமாப்பு மெல்ல அவர்களிடம் வந்து சேர்ந்தது. தம்மைப் பெற்றவன் காட்டிவைத்த அறநெறியை அறவே மறந்தனர். மனஞ்சென்ற வழியெல்லாம் நடக்கத் தலைப்பட்டனர். தீயவர் கூட்டுறவு உண்டாயிற்று. மதுபானம்,

மாமிசபோசனம், விலைமாதர்முயக்கம் என்பன அவர்களின் பொருட்செலவுக்கு வாயில்களாயின. திருமடந்தையும் அவர்களை விட்டு நீங்கினள். மிக்க ஏழைகளாயினர். ஊண் உடைக்கே வகையின்றித் திகைத்தனர். அதனால் திருட்டுத் தொழிலை மேற்கொண்டனர். அரசதண்டனைக்கு அஞ்சி வனவாசிகளாயினர். அவ்வாறு வேடரைப்போல வசித்து வருங் காலத்திலே, வினைவயத்தால் ஒருவன் வேங்கைப்புலிக்கு இரையானான். மற்றவன் அரவந்தீண்டி யிறந்தான். யமதூதர்கள் இருவருடைய உயிர்களையும் யமதருமன் முன்னிலையிற் சேர்த்தனர். சித்திரகுப்தனை யமதருமராசா உசாவிக் கொண்டு, ஸ்ரீகுண்டலனை இரௌரவநரகத்துக்கும், விகுண்டலனைச் சுவர்க்கத்துக்கும் அனுப்பினான்.

அப்பொழுது விகுண்டலன் யமதருமராசாவைப் பார்த்து "பிரபுவே! ஒரு குலத்திலேயே பிறந்து, ஒரேதொழிலைச் செய்து ஒருநாளிலேயே இறக்க, அண்ணன் நரகத்துக்கும் அடியேன் சுவர்க்கத்துக்கும் செல்லும் காரணம் யாதெனக் கூறியருளவேண்டும்" என்றான். அதற்கு யமன், "அப்பா, விகுண்டலா! தாய் தந்தை மகன் தமையன் தம்பி முதலிய தொடர்பு, ஒரு மரத்தில் வந்து இருக்கும் பறவைகளின் கூட்டுறவுபோன்றது என்பதை அறிந்துகொள். அவரவர் செய்த வினைப்பயனை அவரவரே அனுபவித்தல் வேண்டும். ஆதலால், உனது முற்பிறவி வரலாற்றைக் கூறுவன் கேள். யமுனாநதிக் கரையிலே அரிமித்திரன் என்ற பெயருடைய ஓர் அந்தணன் ஓர் ஆச்சிரமத்தை அமைத்து அதில் வசித்துவந்தான். அவனுக்குச் சுவமித்திரன் என்னும் பெயருடைய ஒரு புத்திரன் இருந்தான். அவன் உனக்கு நண்பனாயிருந்தான். அது காரணமாக நீ ஒரு சமயம் இரண்டுமாத காலம் வரையில் அந்த ஆச்சிரமத்தில் வசிக்க நேர்ந்தது. அப்போது அந்த அறுபதுநாளும் தவறாமல் யமுனாநதியில் நீராடினாய். அப்புண்ணியமே உனக்கு நல்ல கதியை அளித்தது. முதலாம் மாதத்து ஸ்நானத்தினால் நீ அதுகாறுஞ் செய்த பாபமெல்லாம் அழிந்தன. இரண்டாம் மாதத்து ஸ்நானபலனால் உனக்குச் சுவர்க்கலோக வாழ்வு சித்தித்தது" என்றான். அவ்வரலாற்றைக் கேட்டு வியப்

படைந்தான் விகுண்டலன். "ஐயா, எந்தச் செயலால் நரகம் சம்பவிக்கும்? எதனைச் செய்வதால் நற்கதி கிடைக்கும்? என்பதை அடியேனுக்கு வகைப்படுத்திக் கூறியருளவேண்டும்" என்று பின்னும் இரந்து கேட்டான்.

தருமராசா கூறுவார்:—'மனமொழி மெய்களால் ஒருவருக்குத் துன்பஞ்செய்தலாகாது. கொலையைவிடக்கொடிய பாதகமில்லை. தம்முடைய உடலை வளர்ப்பதற்காக ஊனைப் பெற விரும்பிப் பிற உயிரைக் கொலை செய்பவர் காலசூத்திரமென்னும் நரகத்தையடையவர். அவர்களுக்கு நாயின் இறைச்சி உணவாகக் கொடுக்கப்படும். இரத்தமும் சீழும் பானமாகக் கொடுக்கப்படும். அவர் பின்னும் அங்கவீனராய்ப் பிறப்பர். ஐம்புலன்களை அடக்குதல், அக்கினியில் ஆகுதி செய்தல், கடவுட்பூசை அடியார்பூசை செய்தல், உறுப்பிழந்தவர்களுக்கு உதவிபுரிதல், சேற்றில் அகப்பட்ட பசுவைக் கரையேற்றல், புலரிக்காலையிற் புனலாடல், உண்மையுரைத்தல், எல்லாரோடும் எப்போதும் அமைதியாகவும் முகமலர்வோடும் பேசுதல் என்பன புண்ணியங்களாகும். அதிகாலையிற் குளித்தலின்றி உணவு கொள்ளுதல் மலத்தை உண்பதை ஒக்கும். பிராத ஸ்நானத்தினால் தீயகனுக் காண்டல் என்னுந் துன்பம் நீங்கும். எள்ளைத் தானஞ் செய்பவருக்கு நரகத் துன்பமில்லை. பிறர் வெறுப்பனவற்றையே பேசுபவர் மீளா நரகத்துக்காளாவர். கங்கையிற் புனல் மூழ்குதலுக்குச் சமமான புண்ணியம் வேறில்லை. ஒவ்வொருநாளும் பதினாறுமுறை பிராணாயாமஞ் செய்துவரின் பிரமகத்தி முதலாய பாவங்கள் நீங்கும். பிறர்பொருளைத் துரும்பாகவும் பிறர்மனைவியரைத் தாய்மாராகவும் நினைத்து நடப்பவனுக்கு ஒரு கேடும் வாராது. கோபத்தை அறிவென்னு முரனால் அடக்கி வெற்றிகொண்டவன் இம்மையிலேயே சுவர்க்க இன்பம் பெறுவான். தாய் தந்தையருக்குத் தொண்டு செய்தலைவிடச் சிறந்த செயல் பிறிதொன்றில்லை. சிவபெருமானைச் சாதாக்கியவடிவாகிய சிவலிங்க வடிவமைத்துப் பூசித்தலும், சாளக்கிராமத்தில் விஷ்ணுவை ஆவாகித்து வழிபடுதலும், சிவனடியாரை மெய்யன்போடு பூசித்தலும் சிறந்த புண்ணியங்களாகும். சிவபத்தன் விஷ்ணுவை இகழ்ந்தாலும் வைஷ்ணவன் சிவபெருமானை

நிந்தித்தாலும் இருவரும் தவருது நரகம் புகுவர். ஏகாதசி தினத்தில் உபவாசமிருப்பவர் நற்புத்திரரைப் பெறுவர். பாதரட்சை, குடை என்பவற்றைத் தானஞ் செய்பவருக்கு யமபயம் இராது. தானஞ் செய்யாத நாள் சூனிய தினமாகும். ஆதலால், நாடோறும் இயன்றதைப் பிறருக்குக் கொடுத்துவரல்வேண்டும். ஒரு புண்ணியச்செயலை நியதியாகச் செய்ய மனங்கொண்டுவிட்டால் அது பல புண்ணியத்தை வருவிக்கும்.

நீ இதற்குமுன் கொண்ட எட்டாவது பிறவியில் செய்த ஒரு புண்ணியத்தின் பயனுகச் செல்வம் படைத்த வணிகனுகப் பிறந்தாய். யமுனை நதியில் நீராடினுய். நீ அப்பிறவியிற் செய்த புண்ணியம் யாதெனச் சொல்லுவேம், கேள் :—மதுவனம் என்ற காட்டிலே சாகுனி என்னும் பெயருடைய பெரிய தவத்தர் ஒருவர் இருந்தார். அவருக்கு ஒன்பது பிள்ளைகள் பிறந்தார்கள். அவருள் நால்வர் துறவிகளாய் ஊர்கள்தோறும் திரிந்தனர். ஒருநாள் நீ அவர்களை அழைத்து உணவுகொடுத்தாய். அந்தச் சிறந்த புண்ணியமே உன்னை நல்வழிப்படுத்திற்று" என்முன் தென்புலத்தலைவன்.

அவ்வரலாறுகளைக் கேட்டுப் பெருமகிழ்ச்சிகொண்ட விகுண்டலன் தனது தமையன் நற்கதி பெறுவதற்கான வழியொன்று சொல்லுமாறு பின்னுங் கேட்டான். "ஒரு உண்மையான துறவிக்கு ஒருவேளை அன்னமிடுவதால் ஒருவன் பிறப்பு முதல் மரணம் வரையும் செய்த பாவம் முழுவதும் நீங்கும். ஆதலால், அந்தப் புண்ணியத்தை உன் சகோதரனுக்குத் தத்தஞ் செய்" என்முன் யமதருமன். உடனே விகுண்டலன் அவ்வாறு செய்தான். அதனுல் இருவரும் சுவர்க்கலோக வாழ்வு பெற்றனர்.

---

# சமய சுயாதீனம்

[சண்டிருப்பாய் ஸ்ரீமத். க. சோமசுந்தரம் அவர்கள் (B. A.) எழுதியது]

ஐரோப்பா முதலிய புறநாடுகளில் சீர்திருத்தமற்ற பழைய காலங்களில் ஒரு சமயத்தைக் கைக்கொள்ளுகிறவர்கள் தங்களுக்கு அரசாட்சியில் அதிகாரம் வந்துவிட்டால், மற்றைச் சமயத்தவர்கள் எல்லோரையும் சிறைப்படுத்தியும், அக்கினிக் கிரையாக்கியும் இன்னோரன்ன வேறுபல கொடிய முறைகளினாலும் தண்டித்து வருத்தி வந்தார்கள். இது காரணமாக எத்தனையோ பெரியோர் தங்கள் சமயப் பற்றினால் உயிர் துறக்க வேண்டி வந்தது. எமது நாடாகிய இலங்காபுரியிலும் பறங்கிக்காரர், ஒல்லாந்தர் ஆண்ட காலங்களில் கிறீஸ்தவர்களல்லாத சமயத்தவர்கள் பட்ட துயரம் விவரித்தெழுதும் தரத்ததன்று.

இந்தியாவிலோ எத்தனையோ சமயங்களிருந்த போதிலும் (சிலபுறனடைகளுண்டு) எல்லோரும் ஒற்றுமையாகவேவாழ்ந்து வந்தார்கள். அரசாட்சியர் ஒருபோதும் பலவந்தமாகச் சமய மாற்றம் செய்யவில்லை. இந்தியா புறச்சமயிகளைத் துன்புறுத்தாததினால்தான் பார்சியரும் சீரியன் கிறீஸ்தவர்களும் இந்தியாவில் வந்து குடியேறினார்கள். மகமதியர் ஆண்டகாலத்தும் அவர்கள் இந்தியருக்குச் சமயசுயாதீனம் கொடுத்து வந்தார்கள். அங்கிலேயரும் இதுவரையும் சமய விஷயத்தில் நடுவு நிலைமையையே கையாடிவந்தார்கள். விக்டோரியா இராணி இந்தியாவைக் கையேற்றபொழுது எல்லாச்சமயத்தவரையும் பாதுகாப்பேனென்று உறுதி செய்துகொண்டார். சமய விஷயத்தில் தலையிடாத காரணத்தினால்தான் அவர்களுடைய அரசு நீண்டகாலத்திற்கு நிலைபெற்றது.

இப்பொழுது இந்தியாவில் என்ன நடைபெறுகின்றது? அங்கிலேயருடைய அரசாட்சிதான் நடக்கின்றது. அவர்கள் காந்திசமயத்தவர்களாகிய இந்திய மகாநாட்டார் பொறுப்பில் சில மகாணங்களை விட்டார்கள். இவர்கள் தாங்கள் முன்கைக்கொண்டனவும் தங்கள் முன்னோர் கைக்கொண்டனவுமாகிய சைவ வைஷ்ணவ சமயங்களை நிர்மூலமாக அழிப்பதற்குக் கங்கணங்கட்டி நிற்கின்றனர். இவர்கள் செய்யும் கொடுமை பொறுத்

தற்கரிது. பழைய சமணர் உயிர்களை வருத்துவது பாவமென்றும், நடக்கும்பொழுது எறும்பு முதலிய சிறு பிராணிகள் காலில் பட்டு இறந்துவிடுமென்று, துடைப்பங்கொண்டு வழியைக் கூட்டிச் செல்வார்கள். இப்படியானவர்கள் திருஞானசம்பந்தரிருந்த திருமடத்துக்கு அவரைக் கொல்லும் நோக்கமாக நெருப்பு வைத்தார்கள். இவர்களைப்போன்று காந்திசமயத்தவர்களும் அஹிம்சா அஹிம்சா என்று சொல்லிக்கொண்டு தங்களுக்கு மாறான சமயத்தவர்களாகிய சைவ வைஷ்ணவ மதத்தினர், தங்கள் உயிரினும் மேலாக மதிக்கும் சமயத்திற்கு நெருப்பு வைக்கிறார்கள். சரீரத்தில் ஊறு செய்வதுதானா இம்சை? மனதிற்குத் துன்பம் செய்வது அதினும் பெரிய இம்சை யல்லவா? இவர்கள் அரசாட்சியில் சிறு அதிகாரம் பெற்று ஐந்து வருடமும் செல்லவில்லையே, இவர்களுக்கு முழுவதிகாரமும் வந்துவிட்டால் யாதுதான் செய்வாரோ நாமறியோம். இவர்கள் தங்கள் அதிகாரத்தை இடங்கண்டவர்களாகிய சைவவைஷ்ணவர்களிற்றான் செலுத்திப் பழகுகிறார்கள். முன்இருந்த சில அரசர்கள் கொடுங்கோன்மையினால் இராச்சியத்தைப் பறிகொடுத்தாரென்பதை மறந்துவிட்டார்கள் போலும்.

" அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை "

" அரசன் அன்றறுப்பான்; தெய்வம் நின்றறுக்கும். "

கொடுமை ஒருபோதும் நிலையாது. இவர்கள் செய்யும் கொடுமைகள் :—

(1) **சைவவைஷ்ணவ சமயங்களுக்கு முழுமாறானகொள்கைகளுடையவராயிருந்தும் அச்சமயங்களினின்றும் விலகாதிருத்தல்.** ஒருவன் தான் கைக்கொண்டுவந்த சமயத்தில் தனக்கு நம்பிக்கை கெடுமாயின் அவன் அதனினின்றும் விலகிகொள்வதே மேன்மை. சைவாகமங்களில் நம்பிக்கையுடையவர்கள் சைவர்கள். வைஷ்ணவ ஆகமங்களில் நம்பிக்கையுடையவர்கள் வைஷ்ணவர்கள். காந்திசமயத்தவர்கள் இரண்டிலும் நம்பிக்கை யில்லாதவர்கள். கிறீஸ்தவ மகமதிய சமயங்களில் இவ்விதமானவர்கள் இருப்பார்களாயின் அவர்கள் அச்சமயங்களினின்றும் விலக்கப்படுவார்கள். அதன்பின் அவர்கள் தாங்கள் அச்சமயத்திற் சேர்ந்தவர்களென்று சொல்ல முடியாது. மாட்டின் லூதர் கத்தோலிக்க சமயத்துக்கு மாறான கொள்கை கொண்டதினால் அவர் அச்சமயத்தினின்றும் விலக்கப்பட்டார். அவரதனின்றும் விலகி

புறட்டெஸ்றன் மதத்தை உண்டாக்கினர். இம்மதத்தவர்கள் தாங்கள்தான் கத்தோலிக்கரென்று சொல்ல முடியாது. முடிவதாயிருந்தாலும் பெருந்தன்மை உடையவராகையினல் அப்படிப் பாசாங்கு செய்யார்கள். இந்தியாவிலும் புத்தர் முதலியோர் தாங்களாகவே இந்துசமயத்தினின்றும் விலகிவிட்டார்கள். இந்தியாவிலுள்ள எச்சமயத்திற்கும் பாப்பாண்டவரைப் போல் அதிகாரமுடையவர்கள் ஒருவருமில்லை. நூல்களே அதிகாரமுடையன. அந்தந்த நூலுக்கு மாறுன கொள்கையுடையவர்கள் தாமாகவே அவ்வச் சமயங்களினின்றும் விலகிக்கொள்வது வழக்கம். அப்படி விலகுவதினல் உள்ளிருந்து சமயத்துக்கு இடர் செய்யமாட்டார்கள். ஒரு ஜேர்மனியன் இங்கிலாந்திலிருந்துகொண்டு தான் அங்கிலேயனென்று பாசாங்கு பண்ணினல் அவன் பாசாங்கில்லாதிருக்கும் ஜேர்மனியரிலும் பார்க்க அங்கிலேயருக்குப் அதிகதீங்கு செய்யமுடியும். காந்தி சமயத்தினருடைய கொள்கைகள் கிறீஸ்தவ மகமதியருடைய கொள்கைகளிலும் பார்க்கச்சைவ வைஷ்ணவர்களுக்கு முழு மாறுனவை. இவர்களிவ்வளவு மாறுனவர்களென்பதை உலகமறியாது. பத்திரிகைகளெல்லாம் இவர்கள் சமயத்துக்குச்சார்பானவை. அதிகாரமும் இவர்களுக்கிருக்கின்றது. அரசாட்சி முறையில் தீரர்களாயுள்ளவர்களெல்லோரும் இச்சமயத்தினரே. இக்காரணங்களினுலும், உண்மையை மறைத்துத் தாங்களும் இச்சமயங்களுக்குச் சேர்ந்தவர்களென்று நடித்தலினுலும், இவர்களைச் சமயத்தினின்றும் விலகச்செய்வதற்கு இச்சமயிகளுக்கு அதிகாரமின்மையாலும், இவர்கள் செய்யும் கொடுமைகளைப் பிறரறியார். அங்கிலேய அரசாட்சியாரும் நன்கறியார். அறிந்திருந்தால் பிரித்தானிய நீதிக்கும் பங்கம் வர விடுவார்களா? பசுத்தோல் போர்த்தபுலி எக்காலத்தும் பசுவென மதிக்கப்பட மாட்டாது. இவர்கள் எச்சமயத்தினரென்பது வெளிப்படாமற் போகாது. ஓ! காந்தி சமயத்தவர்களே! நீங்கள் உண்மையான மேன்மக்களாயின், வஞ்சகமில்லாத கரிசனங்களாயின், உங்கள் பாசாங்கை ஒழித்து உண்மையை வெளிப்படுத்திப் பிறரை ஏமாற்ருதிருங்கள்.

(2) **சைவ வைஷ்ணவக் கோயில்களை அபகரித்தல்.** சைவ வைஷ்ணவக் கோயில்களெல்லாம் சைவ வைஷ்ணவர்களால் அவர்களுடைய ஆகமங்களிற் சொல்லப்பட்ட விதிக்கிணங்கக் கட்டப்பட்டன. அவை யெப்படி நடத்தப்பட வேண்டுமென்பதும் அவ்வாகமங்களிலே விதிக்கப்பட்டிருக்கிறது. பொருளுதவி செய்து கட்டுவித்தவர்களும் அவை யெப்போதும் நடைபெறுவற்காக முதல் கட்டினவர்களும் சைவ

வைஷ்ணவர்களே; காந்திசமயத்தினரல்லர். ஆகையால், இக்கோயில்களெல்லாம் சைவ வைஷ்ணவ சமயத்தினருக்கே யுரியன. எல்லோரும் காந்திசமயத்தினராய் மாறிவிட்டாலும் எஞ்சி ஒரு சைவனிருப்பின் அவனுக்கே சைவக் கோயில்களெல்லா முரியன. ஒரு வைஷ்ணவனிருப்பின் அவனுக்கே வைஷ்ணவக் கோயில்களெல்லா முரியன. ஒரு ஊரிலுள்ள கத்தோலிக்கக் கோயில், அவ்வூரிலுள்ள கிறிஸ்தவர்களெல்லோரும் புறட்டெஸ்றன் மதத்தினராய் மாறிவிட்டாலும் ஒரு கத்தோலிக்கனுவது அவ்விடத்திலிருந்தால் அக்கோயில் அவனுக்கே யுரியது; கூடின தொகையினராகிய புறட்டெஸ்றன் மதத்தினருக்குப் போகாது. குறைந்த தொகையினருடைய கோயில் கூடின தொகையினருக்குப் போகவேண்டுமென்பது அநியாயம். அது தங்களுக்கில்லாத பொருளை வலாற்காரமாய் அபகரித்தலாகும். இப்படி யபகரித்தல் பெரும் பாதகமல்லவா? கட்டி முதலிட்டவர்களுடைய விருப்பத்துக்கு மாறாக நடத்துதல் நம்பிக்கைத் துரோகமல்லவா? தர்மசாதனங்களைக் கொடையாளியினுடைய விருப்பத்தின்படி நடாத்துவது அரசாட்சியின் கடமையல்லவா? கோயில்களைத் தங்கள் அதிகாரத்தினால் வலாற்காரமாய் அபகரிக்கின்ற காந்திசமயத்தினரா நீதியுடையவர்கள்? இச் செய்கை எவராலும் வெறுக்கப் படத்தக்கதே. ஆரியசமாசத்தவர்கள் பிரமசமாசத்தவர்கள் தங்களுக்கென வேறு கோயில் கட்டவில்லையா? அவர்களைப் போல் இவர்களும் செய்யலாமே. அப்படிச் செய்வதற்கு விதி வேண்டுமாயின், தங்கள் தலைவரை ஒரு ஆகமம் சிருட்டித்துத் தரும்படி கேட்கலாமே. வேண்டுமாயின்; அதைப் பொதுசன விருப்பத்தின்படி ஐந்து வருஷத்துக்கொருமுறை மாற்றியுங் கொள்ளலாமே!

(3) **போதுசன விருப்பந்தான் சமய உண்மைகளென நாட்டுதல்.** சமய உண்மை பொதுசன விருப்பத்தினால் அறியப்படவேண்டுமென்னும் கொள்கையை நாமொருபோதும் கேட்டதில்லை. உலகத்தில் எத்தனையோ சமயங்களிருக்கின்றன. அவைகளுக்கெல்லாம் ஆதாரம் கடவுளால் அல்லது ஞானிகளால் ஏற்படுத்தப்பட்ட நூல்களே. அரசாங்க விஷயத்திற்றான் பொதுசன விருப்பத்தின்படி அரசாட்சி நடத்தப்படவேண்டுமென்ற கொள்கை சிலகாலமாக அங்கீகரிக்கப்பட்டு வருகிறது. அதுவும் சரியல்லவென்று இக்காலத்துள்ள சீர்திருந்திய சிலசாதியார் அதைக் கைக்கொள்ளாது விடுகிறார்கள். சமய விஷயத்தில் இக்கொள்கையைக் காந்திசமயத்த

வரைவிடவேறொரு சமயத்தாரும் ஒத்துக்கொள்ளமாட்டார்கள். பூத பௌதீக சாஸ்திரத்திற்றானும் அதிகமேலான விஷயங்களை உலகத்தில் சிலரினும் சிலரே அறியுமாற்றலுடையவர்களென்று சொல்லப்படுகிறது. உதாரணமாக, ஈன்ஸ்றின் கண்டுபிடித்த சில விஷயங்களை உலகத்தில் இரண்டு மூன்று சாஸ்திரிகளினால்தான் விளங்கமுடியுமாம். பூத பௌதீக சாஸ்திரத்திலும் அதிக நுட்பமான சமய விஷயங்களைப் பொது சனங்கள் அறிவார்களென்பது எவ்வளவு மடமை. இது தங்கள் காரியத்தை நிறைவேற்றுவதற்கான ஒரு கள்ளத் தந்திரமே.

(4) **சட்டமேற்படுத்துதல்.** இந்தியாவை இந்தியவரசர் ஆண்ட காலங்களிலும், அதன் பின்னர் மகமதியர், ஆங்கிலேயர் காலங்களிலும் சைவ வைஷ்ணவ சமயங்களைப் பாதுகாக்கும் நோக்கமாகச் சட்டங்களேற்படுத்தப்பட்டன. அச்சட்டங்கள் சனங்களுக்கிடையில் எத்தனையோ புரட்சிகள் வந்தபோதிலும் இச்சமயங்களைப் பாதுகாத்தே வந்தன. இச்சட்டங்கள் புறச் சமயத்தவர்களொருவரையும் ஹிம்சைப்படுத்தவில்லை. அப்படி ஹிம்சைப்படுத்துமாயின் புறச்சமயத்தவர்களாகிய மகமதியர் கிறீஸ்தவர்கள் ஒப்புக்கொள்ளுவார்களா? சைவ வைஷ்ணவ சமயங்களிலிருப்பவர்கள் அச்சமயங்களிற்றான் இருக்க வேண்டுமென்று ஒரு சட்டமும் ஏற்படுத்தவில்லையே. சமயக் கொள்கைகளிலேதாவது தங்களுக்குத் துன்பம் செய்வதென்று எவர் நினைத்தாலும் அவர் அச்சமயத்தினின்றும் விலகிக் கொள்ளலாம். அப்படிச் செய்யும்பொழுது யார்தாம் தடை சொல்லுவார்? இச்சட்டங்கள் ஒருவருடைய சுயாதீனத்துக்கும் தடையாயிருக்கவில்லையே. பழைய சட்டங்களை நிற்பாட்டிப் புதிய சட்டங்களை ஏற்படுத்தியது பலவந்தமாகத் தங்களுடைய சமயத்தைப் பரப்பும் நோக்கமே. இச்சட்டங்களினால் சைவ வைஷ்ணவ சமயங்களிரண்டும் அழிந்துபோமென்பதே. சிறுதொகையினராகிய சைவ வைஷ்ணவர்களுக்குச் சுயாதீனம் கொடாது, அவர்களுக்கிருந்த சுயாதீனத்தையும் அழித்தவர்கள் அங்கிலேயரிடம் அரசாங்க சுயாதீனம் வேண்டுமென்று கேட்பதெப்படி? தங்களுக்குக் கீழுள்ளவர்களுக்குச் சுயாதீனம் கொடுத்தல்லவோ தங்களுக்கு மேலுள்ளவர்களிடம் சுயாதீனம் கேட்கவேண்டும்?

மேலே காட்டப்பட்ட நியாயங்களினால் இவர்கள் செய்வது அநியாயமென்பது வெளிப்படை. சைவ வைஷ்ணவ சமயத்தவர்களே! நீங்கள் ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். உண்மை அழியாது. திருமூலர் வாக்குப் பிழைக்காது.

# சைவாலய தருமகருத்தர்

[உத்தரமேரூர்
தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை அவர்கள் எழுதியது]

பரதகண்டமெங்குஞ் சைவாலயங்கள் பல. அவற்றைப் பரிபாலிப்பவர் தருமகருத்தர். அவரை நியமிப்பவர் சர்க்கார். தருமகருத்தராய் வருவோர் பலதரத்தினராவர்:—சிலர் பணக்காரர், சிலர் வக்கீல்கள், சிலர் சர்க்கார் உத்தியோகத்திலிருந்து பென்ஷன் பெற்று விலகியவர்; சிலர் கோயில்களுக்கே சொந்தக்காரர். அத்தரங்களுள் ஒன்றாவது ஆலயபரிபாலனத்துக்கு யோக்கியமானதன்று. அதற்கு யோக்கியமான தரங்கள் வேறு. சிலவருமாறு:-

1. தருமகருத்தராய் வருவோர் வைதிகசைவசமயத்தைச் சார்ந்தவரா யிருக்கவேண்டும். அவர் அச்சமயப் பெற்றோர்க்குப் பிறந்தவரா யிருப்பது மட்டிற் போதாது. தம்மளவினும் சைவசீலாபிமானமுடையரா யிருத்தல் வேண்டும். அப்பொருட்டுக் குறைந்தபக்ஷம் அவர் சமய விசேஷ தீக்ஷைகளையாவது கோடல் அவசியம்.

2. தாம் தருமகருத்தராயிருக்குங் கோயிலிற் பூசை முதலியன எந்த ஆகமரீதியாய் நடந்து வருகின்றனவோ, அந்த ஆகமத்தையாவது தருமகருத்தராய் வந்த பிறகேனும் சில மாதங்களுக்குள் கூடியவரை அவர் படித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

3. கோயில்களிற் பல விழாக்கள் நடக்கும். அவற்றின் செலவுகளும் அதிகமாகும். அவர் அச் செலவுப்பணத்தில் ஒரு பகுதியை எடுத்து அவ்விழாக்களின் தாற்பரியத்தைச் சிவாகமப் பிரமாணங்களுடனாவது, அதனைத் தழுவிய சாத்திரப் பிரமாணங்களுடனாவது துண்டுப் பிரசுரங்களாய் அச்சிட்டு அவ்விழாக் காலங்களில் பக்தகோடிகளுக்கு வழங்கவேண்டும். அப்பணியை ஆண்டுதோறுஞ் செய்தல் அவசியம். நாடோடிகள் எழுதிவைத்த புத்தகங்களையும், அசைவப் புத்தகங்களையும் பிரமாணமாகக் கொண்டு, எந்த விழாவையும் வியாக்கியானஞ் செய்தல் அவர்களுக்குச் சிறிதும் அடாது.

4. கோயில்களில் ஒரு விழா நடைபெறவேண்டுமாயின் அது நடைபெறுவதற்கு ஆகமாதி சைவசாத்திர விதி உண்டாவென்று அவர் ஆராயவேண்டும். அவ்விதி யில்லாவிட்டாலும் அச்சாத்திரங்களுக்கு விரோதமில்லாமலாவது அஃதிருக்கிறதா

வென்று தெரிதல் அவசியம். அது அவ்விதிக்கியைந்தோ விரோதியாமலோ இருந்தால் அதை நடத்திவைத்தல் அவர்க்குத் தகும். இன்றேல், அதை அவர் விலக்கவேண்டும். கோயில் நித்தியக் கிரியைகள் விஷயத்திலும் அவர் செய்யத்தக்கது அதுவே.

5. ஆகமாதி சைவசாத்திரங்களை யொட்டி நடைபெறுங் கிரியையாதிகளுக்கு வெளியிடங்களிலிருந்து தடைகள் வருமாயின், அச்சைவசாத்திர பலத்தைக்கொண்டு அவர் அத்தடைகளைக் களைதல் வேண்டும்.

6. அவர் கோயில்களிலுள்ள சிவலிங்கமூர்த்தி, நடராஜமூர்த்தி, தக்ஷிணமூர்த்தி, பார்வதிதேவியார் முதலிய மூர்த்திகளின் தாற்பரியங்களையும், திருக்கலியாணம், பள்ளியறை புகல், தூபதீப நிவேதன முதலிய கிரியைகளின் அர்த்தவைபவங்களையும் நன்குணர்ந்து, அவற்றின்மாட்டுப் பயமும் பக்தியும் ஒருங்கு கொள்ளவேண்டும்.

7. அவர் ஆதிசைவரிடங் கௌரவபுத்தி யுடையராயும், அவ்வாதிசைவர் கோயில்களில் மந்திரம் கிரியையாதிகளை லோபமின்றி ஆகமோக்தமாகச் செய்துவருகிறார்களாவென்று பார்த்துக்கொள்ளக்கூடியவராயும் இருத்தல்வேண்டும்.

8. அவர் கோயிலிலுள்ள கீழுத்தியோகஸ்தருக்கெல்லாம் முன்மாதிரியாய் இருத்தல் வேண்டும். கோயிற்சொத்து எல்லார்க்கும் பொது. அதைத் திருடுவதனால் நஷ்டப்படுவார் யாருமில்லையென்ற தைரியம் அவ்வுத்தியோகஸ்தருக்கு வராதபடி அவர் பலவகையாலுந் தடுக்கவேண்டும்.

9. பரமசிவனே பரம்பொருளென்ற உண்மையை அவர் சலியாமற் கடைப்பிடிக்கவேண்டும். அப்பரத்துவப் பிரசங்கமே கோயிலிலுள்ள வெற்றிடங்களில் வைதிக சைவசித்தாந்திகள் சிலர் பலரால் நடைபெறுமாறும் அவர் செய்யவேண்டும்.

10. தமிழர் ஆரியர் சண்டை, தமிழ் வடமொழிச் சண்டை, பாப்பனர் அல்லாதார் சண்டை, காங்கிரஸ் ஜஸ்டிஸ் சண்டை முதலிய லௌகிகச் சண்டைகளில் தாம் பிரவேசித்து, ஏதாவது ஒரு கட்சியிற் சேர்ந்துகொண்டு, அக்கட்சிப் பார்வையில் சைவசமயத்துக்கு வியாக்கியானம்பண்ணிக் கோயில் வழிபாட்டுமுறை முதலியவற்றைப் பாழ்படுத்தப் பார்ப்பது சுத்த அயோக்கியத்தனம் என்பதை அவர் உணரவேண்டும்.

11. கோயிலில் நடக்குங் கிரியைகளை மாமூலென்றும் பழக்கவழக்கமென்றும் அவர் சொல்லிப் பழகக்கூடாது. கோயில் ஒரு பெரிய சமயநிலையம். அது ஆகமமாகிய சாத்திரத்துக்குக் கட்டுப்பட்டது. ஆகமங்களின்றேல் ஆலயங்களில்லை. கோயிலுட் பழமையை விலக்குவதாயிருந்தாலும் புதுமையைப் புகுத்துவதாயிருந்தாலும் ஆகமத்தின் அனுமதி பெற்றே அவர் அவற்றைச் செய்யவேண்டும். கோயிலுக்கும் ஆகமத்துக்குமுள்ள தொடர்பை மாமூல், பழக்கவழக்கமென்ற சொற்களால் அறுக்கப்பார்க்கும் ஆகமவிரோதிகளுக்கு அவர் இடங்கொடுத்தல் கூடாது.

12. அவர் வைதிகசைவ சமூகத்தினரிடம் நம்பிக்கையும் பெருமதிப்பும் பெற்றவராய், அதிகார வர்த்தகத்தினரிடம் செல்வாக்குள்ளவராய், பரிசுத்தராய் இருத்தல்வேண்டும்.

13. ஆலயநிந்தகரும் அந்நிய சமயிகளும் ஆலயத்துள், வெளியெல்லையிற்றானும் பிரவேசியாதிருக்கும்படி அவர் தடை செய்யவேண்டும்.

14. கோயிலில் நித்திய நைமித்திகாதிகளுக்குச் செலவானது போக மிச்சப்பணமிருக்குமானால், அவர் அதில் ஒரு பகுதியைச் சேமித்தும், இன்னொரு பகுதியை வைதிகசைவ சமயாபிவிருத்திக்கான வழியிற் செலவிட்டும் வரவேண்டும். மாயாவாதம் முதலிய அந்நிய சமயாபிவிருத்திக்குக் கோயிற் பணத்தில் இம்மியும் அவர் கொடுத்தல் கூடாது.

15. சைவசமயங் கலக்கவில்லையானால் தமிழ் வடமொழிகளைத் தானும் கோயிற் பணத்தில் அவர் வளர்த்தல் கூடாது.

16. 'பெண்டைக் கொடுத்தாலும் பேருலகில் நிந்தையில்லை, தொன்றுதொட்டு வந்தசைவந் தோற்கில்நிந்தை—பெண்டைவிற்றும், பெற்றான் சிவ கதியைப் பேரிச் சந்திரனு, முற்றான் பழியிந் திரன்' என்பது ஒரு பழம்பாட்டு. அவர் அப்பாட்டை மனதிலிருத்த வேண்டும். தம்மை நியமித்த அதிகாரிகளையும் தாம் விரும்பும் அரசியற் கட்சிக்காரர்களையும் திருப்திசெய்வித்தற் பொருட்டோ, தமது இலாபத்தின் பொருட்டோ, ஆகம விரோதமான காரியங்களை ஆலயத்துட் புகுத்துவதினும் அவர் தம் பெண்டைக் கொடுக்கலாம். அப்பெண்டைக் கொடுத்தாயினுஞ் செய்யத்தக்கது ஆலயபரிபாலனமொன்றே. ஆலயபரிபாலனமாவது ஆலயத்தை ஆகமவழி நடைபெறுவித்தலாம். அஃதறிந்து தம் பௌருஷத்தைக் கடைசிவரை அவர் கடைப்பிடிக்க வேண்டும்.

# சாஸ்திரோபதேசக் கிரமம்

*பிடியத னுருவுமை கொளமிகு கரியது*
*வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்*
*கடிகண பதிவர வருளினன் மிகுகொடை*
*வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.*

ஞானமிர்தப் பதிப்பாசிரியராகிய சேற்றூர் ஸ்ரீசுப்பிர மணியக் கவிராயர் அந்நூலாசிரியர் வரலாறு கூறுமிடத்தில் தருமபுர ஆதீன முதல்வராகிய ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக சுவாமிகள் அருளிய முத்திநிச்சயத்துக்கு வெள்ளியம்பலத் தம் பிரான் இயற்றிய பேருரையிற் சைவசந்தானத்தை விளக் கியதை எடுத்துக்காட்டினர். அப்பேருரைகாரர் திருமந்திரத் திலே

*நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடி*
*னந்திக ணால்வர் சிவயோக மாமுனி*
*மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிர*
*ரென்றிவ ரென்னோ டெண்மரு மாமே*

என்று குறித்த எட்டுச் சந்தானங்கள் விரிந்தவாற்றினை விளக்கியுள்ளார்.

இவருள் நந்திகள் நால்வராவார் சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனாதனர் என்பவராம். திருமூலதேவருக்குச் சதாசிவமுனிகளென்றும் பெயருண்டு.

**இவர்கள் சந்தானம் விரிந்தவாறு:—**

ஆதியிற் சனகராற் சம்புசந்தானமும், மலையமான் சந் தானமும் என இரண்டாய்ப் பின் பலவாயின.

சனற்குமாரரால் விஞ்ஞானதேவர் சந்தானமும், மெய் கண்டதேவர் சந்தானமும் என இரண்டாய்ப் பின் பலவாயின.

சனந்தனரால் சிவமண்ணியதேவர் சந்தானமும், பரம தேவர் சந்தானமும், சிவானந்தபோதர் சந்தானமும் என மூன்றாய்ப் பின் பலவாயின.

சனுதனராற் பிரமதேவர் சந்தானமும், சிங்கநாதேவர் சந்தானமும் என இரண்டாய்ப் பின் பலவாயின.

சிவயோகமாமுனிவரால் வாமதேவர் சந்தான மொன்ருய்ப் பின் பலவாயின.

பதஞ்சலிமுனிவரால் நிறைந்தநாயஞர் சந்தான மொன்ருய்ப் பின் பலவாயின.

வியாக்கிரபாதமுனிவரால் சத்தியோஜாதமேதவர் சந்தான மொன்ருய்ப் பின் பலவாயின.

திருமூலதேவராற் பிரமதேவர், இந்திரதேவர், விஷ்ணு தேவர், உருத்திரதேவர், கந்துருமகாவிருடிகள், காலாக்கினி யுருத்திரர், கஞ்சனுர் மலையமான் என எழுவகைச் சந்தான மாய்ப் பின் பலவாயின. இன்னும் விரிக்கிற் பெருகும். இவர்கள் யாவரும் ஞானசித்தாந்த குரவர்கள். இவர்கள் வரலாற்றின் விரிவைச் சந்தானவரலாற்ருனுஞ் சந்தானவகவலானுங் கண்டு உணர்க.

இனி, ஆகமங்களுக்குக் கிரந்த சங்கியையும், அவற்றின் வழித்தோன்றிய உபாகமத்தொகையும் கூறுவாம்:—

1. காமிகத்துக்குக் கிரந்தசங்கியை பரார்த்தம். இதன் வழித்தோன்றிய உபாகமம் மூன்று. 2. யோகஜத்துக்குக் கிரந்தசங்கியை இலக்ஷம். இதன் வழித்தோன்றிய உபாகமம் ஐந்து. 3. சிந்தியத்துக்குக் கிரந்தசங்கியை இலக்ஷம். இதன் வழித்தோன்றிய உபாகமம் ஆறு. 4. காரணத்துக்குக் கோடி. இதன் வழித்தோன்றிய உபபேதம் ஏழு. 5. அசிதத்துக்கு நியுதம். அதன் உபபேதம் நான்கு. 6. தீப்தத்துக்கு நியுதம். இதன் உபபேதம் ஒன்பது. 7. சூக்குமத்துக்குப் பதுமம். இதன் உபபேதம் ஒன்று. 8. சகஸ்ரத்துக்குச் சங்கம். உபபேதம் பத்து. 9. அம்சுமானுக்கு ஐந்துலக்ஷம் கிரந்தசங்கியை. உபபேதம் பன்னிரண்டு. 10. சுப்பிரபேதத்துக்கு மூன்று கோடி. உபபேதம் ஒன்று. 11. விஜயத்துக்கு மூன்றுகோடி. உபபேதம் எட்டு. 12. நிச்சுவாசத்துக்கு கோடி. உபபேதம் எட்டு. 13. சுவாயம்புவத்துக்கு ஒன்றரைக்கோடி. உபபேதம் மூன்று. 14. ஆக்கினேயத்துக்கு முப்பதினுயிரம். உபபேதம்

ஒன்று. 15. வீரத்துக்கு நியுதம். உபபேதம் பதின்மூன்று. 16. ரௌரவத்துக்கு எட்டற்புதம். உபபேதம் ஆறு. 17. மகுடத்துக்கு இலக்ஷம். உபபேதம் இரண்டு. 18. விமலத்துக்கு மூன்றிலக்ஷம். உபபேதம் பதினாறு. 19. சந்தானம் மூன்றுகோடி. உபபேதம் பதினான்கு. 20. முகவிம்பத்துக்கு இலக்ஷம். உபாகமம் பதினைந்து. 21. புரோற்கீதத்துக்கு மூன்று இலக்ஷம். உபாகமம் பதினாறு. 22. இலளிதத்துக்கு எண்ணாயிரம். உபபேதம் மூன்று. 23. சித்தத்துக்கு ஒன்றரைக் கோடி. உபபேதம் நான்கு. 24. சந்தானத்துக்கு ஆறாயிரம். உபபேதம் ஏழு. 25. சர்வோக்தத்துக்கு இரண்டிலக்ஷம். உபபேதம் ஐந்து. 26. பாரமேசுரத்துக்குப் பன்னிரண்டிலக்ஷம். உபபேதம் ஏழு. 27. கிரணத்துக்கு ஐந்துகோடி. உபபேதம் ஒன்று. 28. வாதுளத்துக்கு இலக்ஷம். உபபேதம் பன்னிரண்டு.

இப்படிப் பலகோடி கிரந்தங்களாய் விரிந்த இருபத்தெட்டாகமங்களையும் பரமசிவனிடம் பெற்ற அநந்ததேவர் அவற்றை ஸ்ரீகண்டருத்திரருக்கு அருளிச்செய்தார். அவற்றை ஸ்ரீகண்டருத்திரர் கணங்கட்கும் தேவர்க்கும் முனிவர்க்கும் அளித்தற் பொருட்டு முதற்கண் நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார். அங்ஙனம் ஆகமங்களையெல்லாம் கேட்ட நந்திபெருமான் ஸ்ரீகண்டமுதல்வரை வணங்கி நின்று, "சிவாகமந்தோறும் சரியை முதலிய நாற்பாதப் பொருளும் சிறுபான்மை வேறுவேறாகக் கூறப்பட்டன. அவற்றுள் உண்மையாவது இதுவென்று அருளிச்செய்யவேண்டும்" என இரந்து விண்ணப்பஞ்செய்தார். ஸ்ரீகண்டமுதல்வர் கருணைகூர்ந்து, "கற்பந்தோறும் படைப்பு வேறுபாடும் கருத்து வேறுபாடும் பற்றி அவற்றிற்கு இயையச் சரியை முதலிய மூன்று பாதங்களும் ஆகமங்களில் வெவ்வேறாகக் கூறப்பட்டன. ஆகலான் அவற்றுள் எவ்வாகமத்தின்வழி யார் தீக்ஷைபெற்றார், அவ்வாகமத்தின்வழி அவர் ஒழுகற்பாலர். இனி, ஞானபாதமாவது பொருட்டன்மை உணர்த்துவதாகலான் அது பலதிறப்படுதல் பொருந்தாமையின், அவையெல்லாந் தூலாருந்ததி முறைபற்றிக் கூறப்பட்டனவன்றி, மாறுகோளல்ல வென்பது வகுத்துணர்த்துதற் பொருட்டு, இரௌரவாகமத்துட் பன்னிரு சூத்திரத்தாற் கூறப்பட்டது சிவஞானபோதம் என்ப

தோர் படலம். அது கேட்டோர்க்கு எல்லாவாகமப் பொருள்களும் மாறுகோளின்றி இனிது விளங்கும்" எனக் கூறி, அச்சிவஞானபோதத்தை நந்திபெருமானுக்கு உபதேசித்தருளினார். அதனைத் திருநந்திதேவர் சனற்குமாரமகாமுனிவருக்கு அருளிச்செய்ய, அவர் சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச்செய்ய, அவர் பரஞ்சோதிமகாமுனிவருக்கு அருளிச்செய்தார். பரஞ்சோதிமுனிவர் திருக்கைலாசமலையினின்று நீங்கித் தமிழ் நாட்டிற்கு எழுந்தருளிவந்து, திருப்பெண்ணுகடத்திலே வேளாள குலத்திலே* ஸாம்ஸித்தராய்த் திருவவதாரஞ்செய்து, திருவெண்ணெய்நல்லூரில் நன்மாமனார் வீட்டில் எழுந்தளியிருந்த இரண்டு பிராயத்தையுடைய சுவேதவனப் பெருமாளுக்குச் சிவதீக்ஷைசெய்து, மெய்கண்டதேவர் என்னுந் திருநாமத்தைக் கொடுத்து, அச்சிவஞானபோதத்தை உபதேசித்தருளினார்.

மெய்கண்டதேவர் அச்சிவஞானபோதத்தைத் தமிழில் மொழிபெயர்த்து வார்த்திகம் என்னும் பொழிப்புரைசெய்து தம்முடைய மாணாக்கர்கள் நாற்பத்தொன்பதின்மர்களுக்கும் உபதேசித்தருளினார். அம்மாணாக்கர்களுள்ளே தலைமாணாக்கரும், திருத்துறையூரிலே திருவவதாரஞ்செய்தருளிய ஆதிசைவரும், சகலாகமபண்டிதர் என்னும் காரணப்பெயரையுடையவருமாகிய அருணந்திசிவாசாரியர் சிவஞானசித்தியார், இருபாவிருபது என்னும் சைவசித்தாந்த சாத்திரங்களைச் செய்து, அவைகளையும் சிவஞானபோதத்தையும் திருப்பெண்ணுகடத்திலே பிராமணகுலத்திலே திருவவதாரஞ்செய்த மறைஞானசம்பந்த சிவாசாரியருக்கு உபதேசித்தருளினார். மறைஞானசம்பந்த சிவாசாரியர் தில்லைவாழந்தணராகிய உமாபதி சிவாசாரியருக்கு உபதேசித்தருளினார். உமாபதிசிவாசாரியர் கொற்றவன்குடியில் எழுந்தருளியிருந்துகொண்டு வடமொழியில் பௌஷ்கராகமத்துக்கு வியாக்கியானத்தையும், தமிழிலே சிவப்பிரகாசம் முதலிய எட்டுச் சித்தாந்த சாஸ்திரங்களையும், கோயிற்புராணம் திருத்தொண்டர்புராணசாரம்

* ஸாம்ஸித்தராவார் முற்பிறப்பிலே சரியை கிரியை யோகங்களைச் செய்து, நிருமலாந்தக்கரணராகி, மீளப் பிறக்கும்பொழுதே அந்த ஞானத்தோடு பிறந்து சிவபாவனைபண்ணுவோர்.

முதலிய நூல்களையும் செய்து, அருணமச்சிவாய தேசிகர் முதலிய மாணுக்கர்களுக்கு உபதேசித்தருளினர். உமாபதிசிவாசாரியரிடத்திலே அநுக்கிரகம் பெற்ற அருணமச்சிவாய தேசிகர் திருவாவடுதுறையில் சித்தர் சிவப்பிரகாச தேசிகர் பஞ்சாக்ஷர தேசிகர் எனப்படும் நமச்சிவாயமூர்த்திகளுக்கு உபதேசித்தருளினர். இந்தப் பஞ்சாக்ஷரதேசிகசுவாமிகளே திருவாவடுதுறையாதீனத்துப் பிரதம ஞானசாரிய சுவாமிகள், தருமபுர ஆதீன நிலையத்தை ஆதிக்கண் நிறுவியருளிய ஞானசாரியர், கமலை ஞானப்பிரகாசதேசிகரிடம் ஞானோபதேசம் பெற்ற ஞானசம்பந்ததேசிக சுவாமிகளாவர். திருவாவடுதுறை, தருமபுரம் முதலிய சைவமடாலயங்கள் திருக்கைலாச பரம்பரை என்று சொல்லப்படுவது அவற்றின் முதல்வர் ஸ்ரீகண்டபரமசிவனர் என்னும் காரணம் பற்றியேயாம்.

வாமதேவமுனிவர் ஸ்ரீகண்டபரமசிவனிடத்தில் உபதேசம்பெற்ற ஸ்கந்தபரமாசாரியர் சந்நிதியை அடைந்து, "சுவாமீ! அடியேனுக்குச் சுத்தாத்துவிதநிலையின் உண்மையையும் பிரணவார்த்தத்தையும் உபதேசித்தருளவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தனர். கந்தமூர்த்தி கருணைகூர்ந்து, சர்வ ஞானோத்தரத்தையும், பிரணவ பஞ்சாக்ஷரங்களின் உண்மையையும், மற்றும் கந்தகாலோத்தரம் முதலிய சிவாகமங்களையும் உபதேசித்து, ஆசாரியத்தலைமையுங் கொடுத்தருளினர். வாமதேவமுனிவர் நீலகண்ட சிவாசாரியருக்கும், அவர் விசுவேசுர சிவாசாரியருக்கும், அவர் சதாசிவ சிவாசாரியருக்கும், அவர் சிவமார்க்கப்பிரகாசதேசிகருக்கும், அவர் சிவாக்கிரயோகிகள் என்னும் சிவக்கொழுந்து தேசிகருக்கும், உபதேசித்தனர். சிவக்கொழுந்து சிவாசாரியர் சூரியனர்கோயில் தெற்குவீதியிலே ஆதீனஸ்தாபனம் செய்து, தம்மைச் சரணடைந்தோருக்கு உபதேசம் செய்துகொண்டிருந்தனர். இவர் மாணுக்கர் வடமொழிச் சிவஞானபோதத்துக்குப் பாடியமும், சிவஞானசித்தியாருக்கு உரையும், வேறு பல கிரந்தங்களும் செய்தருளிய அதிவருணச்சிரம சிவாக்கிரயோகிகள். இருமொழியையும் வைதிகசைவத்தையும் பரிபாலிக்கும் நிலையங்களாகிய திருவாவடுதுறையாதீனம், தருமபுரம், சூரியனர் கோயில் என்னும் மூன்று ஆதினங்களுமே யன்றித் திருவண்ணமலை

ஆதீனம் முதலிய சைவநிலையங்களும் விளக்கமுற்றிருக்கின்றன.

சதாசிவமூர்த்தி நான்கு வேதங்களையும் அநந்தேசுரருக்கு உபதேசித்து, அவர் வழியானே பிரமாவுக்கு உபதேசித்தருளினார். பிரமாவால் தேவர்களுக்கும், தேவர்களால் இருடிகளுக்கும், இருடிகளால் மனிதர்களுக்கும் உபதேசிக்கப்பட்டன.

ஆதிகற்பத் துவாபரயுகத்திலே ஆன்மாக்கள் செய்த தீவினையினாலேயே வேதங்களெல்லாம் அடிதலை தடுமாறின. அதனாலே தேவர்களும் முனிவர்களும் மனிதர்களும் மதிமயங்கி, மெய்யுணர்வு சிறிதுமில்லாதவர்களாகி, வேதநெறியை விடுத்து, பல புறச்சமயங்களைக் கற்பித்துக்கொண்டு, அவற்றின் வழி ஒழுகுவாராயினர். விஷ்ணுவும் பிரமாவும் அது கண்டிரங்கிச் சிவபெருமானுடைய திருவருளாலன்றி இம்மயக்கம் நீங்காதென்று துணிந்தார்கள். அவர்கள் இந்திரன் முதலிய தேவர்களோடும் திருக்கைலாசமலையை அடைந்தார்கள். சென்றவர்களைத் திருநந்திதேவர் சிவபெருமானுடைய ஆஞ்ஞைப்படி திருச்சந்நிதியிற் கொண்டுபோய் விட்டார். அவர்கள் நமஸ்கரித்துப்பூசித்து நின்றார்கள். விட்டுணு வணங்கிநின்று "உலகத்துள்ள ஆன்மாக்கள் மெய்ந்நூலாகிய வேதத்தின் உண்மைப் பொருளாயுள்ளவர் தேவரீரே என்பதைச் சிறிதுமுணராது மயங்கி, உலோகாயதம், ஆருகதம், பௌத்தம், மீமாஞ்சை முதலிய சமயங்களின் வழி ஒழுகுகின்றார்கள். ஆகையால், அவர்கள் இம்மயக்கத்தினின்று நீங்குமாறு சிறிது திருவருள் செய்தல் வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்தார். வேண்டுவார் வேண்டுவதே யீயும் பரமகருணாநிதியாகிய சிவபெருமான் விட்டுணுவை நோக்கி, "நீ உன்கலைகளுள் ஒன்று கொண்டு பூமியின்கண்ணே வியாதன் என்னும் பெயருடைய இருடியாய்ப் பிறந்து வேதங்களெல்லாவற்றையும் ஓதாதுணர்ந்து, அவற்றை நான்காக வகுத்து, நன்மாணாக்கர்கட்கு உபதேசிக்கக்கடவாய்" என்று திருவாய்மலர்ந்தருளினார். விட்டுணு அதற்கிசைந்து சிவபெருமானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, தம்முடைய கலைகளுள் ஒரு கலை கொண்டு, பூமியிலே பராசர முனிவருக்குப் புத்திரராகத் திருவவதாரம் செய்தருளினார். சிவபெருமானுடைய திருவருளால் வேதங்களை ஓதாதுணர்ந்து

அவற்றை நான்காக வகுத்து, உலகத்தார் உய்யும் வண்ணம் திருவியருளினர்.

வியாசமுனிவர் இருக்குவேதத்தைப் பைலமுனிவருக்கு உபதேசிக்க, அவர் வழியால் இந்திரபிரமிதி முதலியோருக்கு உபதேசிக்கப்பட்டது. அது இருபத்தொரு சாகைகளையுடையது. யசுர்வேதத்தை வைசம்பாயனமுனிவருக்கு உபதேசிக்க, அவர் வழியாக யாக்கியவற்கியர் முதலியோருக்கு உபதேசிக்கப்பட்டது. இது நூற்றொன்பது சாகைகளையுடையது. சாமவேதத்தைச் சைமினிமுனிவருக்கு உபதேசிக்க, அவர் வழியாக இரணியநாபர் முதலியவர்களுக்கு உபதேசிக்கப்பட்டது. அது ஆயிரம் சாகைகளையுடையது. அதர்வணவேதத்தைச் சுமந்து முனிவருக்கு உபதேசிக்க, அவர் வழியாகக் கபந்தர் முதலாயினோருக்கு உபதேசிக்கப்பட்டது. இது ஐம்பது சாகைகளையுடையது.

வேதத்தை ஓதியுணர்ந்தும் மெய்ப்பொருட்டுணிவு பிறவாதவருக்கும், வேதத்திற்கு அருகரல்லாதவருக்கும் பயன்படும் பொருட்டுச் சிவபெருமான் முன்னே பதினெண் புராணங்களைத் திருநந்திதேவருக்கு உபதேசித்தருளினர். திருநந்திதேவர் அவைகளைச் சனற்குமாரமுனிவருக்கு உபதேசித்தருளினர். சனற்குமாரமுனிவர் வியாசமுனிவருக்கு உபதேசித்தருளினர். வியாசர் சூதமுனிவருக்கு உபதேசித்தருளினர். சூதமுனிவர் நைமிசாரணியமுனிவர்கட்கு உபதேசித்தருளினர். வியாசமுனிவருடைய அருளால் வேதங்களும் புராணங்களும் உலகிற் பரந்தன.

சைவப்பெருமக்கட்கெல்லாம் இம்மை மறுமை மோக்ஷங்கட்குச் சாதனமாய் என்றுமழியாத பொக்கிஷங்களாகிய வேதசிவாகம புராணங்களின் உபதேசக் கிரமம் ஒருவாறு சுருக்கிக் கூறப்பட்டது.

---

# மார்கழி மாதம்

**மார்கழிமாதம் :—** மார்க்கசீர்ஷத்தினின்றும் வந்தது. இது சாந்த்ரமானப் பெயர். சந்திரன் மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தில் கலைகள் பூர்த்திசெய்து பௌர்ணமியாவதால் வந்த பெயர்.

**தநுர்மாதம் :—** இது ஸௌரமானப் பெயர். இது சூரியன் தநுர் ராசியில் பிரவேசிப்பதால் வந்த பெயர். மானம் என்பது அளவை.

**சாந்த்ரமானம் :—** சந்திரன் அளவால் அறிவது சாந்திரமானம்.

**ஸௌரமானம் :—** சூரியன் அளவால் அறிவது ஸௌரமானம்.

இவையிரண்டும் ஜ்யோதிர்பாவ முணர்ந்தவர்களால் வைக்கப்பட்ட பெயர்.

இதில் (க) தநுர்மாஸ முழுமையும் உதயத்தில் தெய்வத்தை வழிபடுதல். (உ) தநுர்மாஸத்தில் திருவாதிரை நக்ஷத்திரத்தில் சிவத்தை வழிபடுதல். (ங) தநுர்மாஸ பௌர்ணமியில் (டோளோத்ஸவம்) அதாவது சிவத்திற்கு ஊஞ்சல் போடுதல்.

வைஷ்ணவர்கள், தநுர்மாஸ வளர்பிறை ஏகாதசி திதியில் விஷ்ணுவை வழிபடுகிறார்கள்.

**தைமுதல் ஆனிவரை :—** உத்தராயணம். இது சூரியன் உத்தரமாகிய வடக்குத்திக்கில் ஒதுங்குவது. இது தேவர்கட்குப் பகற்காலம்.

**ஆடிமுதல் மார்கழிவரை :—** தக்ஷிணயனம். இது சூரியன் தக்ஷிணமாகிய தெற்குத்திக்கில் ஒதுங்குவது. இது தேவர்கட்கு இராக்காலம்.

ஆதலால், இராக்காலத்திற்கு முடிவாகிய மார்கழிமாத விடியற்காலத்தில் மானுடர்கள் காத்திருந்து "தேவதா ப்ரார்த்தனை" உதவியால் ஸகலகாரியமும் இடையூறின்றி முடிவெய்தப் பிரார்த்தித்து வருகிறார்கள்.

## மாணிக்கவாசகர் புறப்பாடு

இந்த வழக்கம் நடந்தேறிவருவதை திருவண்ணாமலையிலுள்ள பெண்குழந்தைகள் கொண்டாட, அதனை அவ்விடத்திற்குப் போயிருந்த மாணிக்கவாசகர் கண்ணுற்று, இதை எத்தேசத்திலும் பரவிக் கொண்டாட "**திருவெம்பாவை**" என்னும் உ0 பாட்டிற் பாடினர்.

அதுமுதல், தமிழ் வழங்கும் நாடுகளில் மாணிக்கவாசகரைப் புறப்பாடு செய்வித்துச் 'சைவரால் அந்தத் திருவெம்பாவையை (மார்கழிமாத வளர்பிறையில்) திருவாதிரை வருவதற்குமுன் ஓதுவித்து, மார்கழித் திருவாதிரை நக்ஷத்திரத்தில் சபாநாயகராதி தெய்வங்களைப் புறப்பாடு செய்விக்கிறார்கள்.

திருவெம்பாவை என்பதை திரு—எம்—பாவை எனப் பிரித்து, தெய்வத்தை வழிபடும் எமது பெண்குழந்தைகள் எனப் பொருள் கொள்க.

இது "வைகறைத்துயிலெழு" என்பதை நாடி, குழந்தைகள் விடியற்காலமெழுந்து தமது முதலாகிய கடவுளை வழிபட, ஒருவரையொருவர் எழுப்பி, நித்திய கருமங்களை முடிக்க நீராடப் போவதாகும்.

**இதனை மாணிக்கவாசகர் திருவாசகம், திருவெம்பாவையில்,**

பாட்டு கருத்து

க. போதா ரமளியின் மேனின்றும் புரண்டு
உ. இப்போதா ரமளிக்கே நேசமும் வைத்தனையோ
ங. முன்வந் தெதிர் எழுந்து....உன் கடைதிறவாய்
ச. இன்னம்புலர்ந்தின்றோ........துயின்று அவமேகாலத்தைப் போக்காதே
ரு. படிறீ கடைதிறவாய்....ஓலமிடினு முணராய்
சு. இன்னம் புலர்ந்தின்றோ
எ. என்னே துயிலின் பரிசு
அ. கோழி சிலம்ப....ஈதென்ன வுறக்கமோ
கூ. இன்னவகையே யெமக்கெங்கோ னல்குதி
கo. வேதமுதல்.......ஏதவனைப்பாடும் பரிசு (என்று தெய்வம் பரவுதற்கும்)
கக. மொய்யார் தடம்பொய்கை
கஉ. பூத்திகழும் பொய்கை குடைந்து
கங. பொங்குமடுவிற் புகப்பாய்ந்து
கச. சீதப் புனலாடி
கரு. ஏருருவப் பூம்புனல் பாய்ந்து
கசு. பொழியாய் மழை
கஎ. பங்கயப் பூம்புனல் பாய்ந்து
கஅ. கண்ணாரிரவி கதிர்வந்து கார்கரப்பத், தண்ணாரொளி மழுங்கித் தாரகைகள் டாமகல....இப்பூம்புனல் பாய்ந்தாடேலோ
கக. இங்கிப்பரிசே யெமக் கெங்கோ னல்குதி
உo. மார்கழிநீராடு.

என்று உதயம் நீராடுவதற்குக் கூறியிருப்பதை யாவரும் உணர்வதன் பொருட்டு, மார்கழிமாதம் விடியற்காலத்தில் மாணிக்கவாசகரைப் புறப்பாடுசெய்வித்துத் திருவெம்பாவை ஓதிவருகிருர்கள்.

இது மாணிக்கவாசகரால் உலகத்தில் வெளிப்பட்ட தென்று அறிவுறுத்தும்பொருட்டு அவரைப் புறப்பாடுசெய்யப் படுகிறது.

இது ஊரில் வசிப்பவர் யாவரும் உணர்ந்து நடப்பதன் பொருட்டு, நாற்சந்தி, தெருக்கள்தோறும் சொல்லப்படுகிறது.

இனி, திருப்பள்ளியெழுச்சியாவது, ஆறுகாலம் பூஜை நியமித்திருக்கும் கோயில்களில் உதயம் திருவனந்தல் எழுப்புவதற்குக் கடவுளுக்குச் சொல்லப்படுவது.

அது திருவாசகத்தில் முதற்பாட்டில் "புலர்ந்தது,"

இரண்டாம்பாட்டில் "அருண னிந்திரன்றிசை யணுகினன்" என்பவை முதலியன.

அக்காலத்தில் (டோளம்) ஊஞ்சலாட்டி, திருப்பள்ளியெழுச்சி சொல்வது. இதை இராத்திரிப் பள்ளியறையில் சுவாமியை வைக்கும்போது (டோளம்) ஊஞ்சலாட்டி, ஊஞ்சல் பாட்டுச் சொல்லி, உதயம் திருவனந்தலிலெழுப்பத் திருப்பள்ளி யெழுச்சி சொல்வது.

இதை (டோளோத்ஸவம்) ஊஞ்சல் உத்ஸவமாக நடத்தப் படுகிறது.

இன்னும் சிலவிடங்களில் அரைக்கட்டி, அரைக்கட்டு உத்ஸவம் நடத்தப்படுகிறது.

## நாச்சியார் நீராட்டல் முதலியன :—

வைணவர்களும் இக்கருத்தைக்கொண்டு திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி சொல்லியிருக்கிறார்கள்.

**திருவாய்மொழி முதலாயிரத்தில் நாச்சியார் திருப்பாவை**

பாட்டு கருத்து

க. மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாளில் நீராடப் போதுவீர்

௬. புள்ளுஞ்சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில் வெள்ளை விளிசங்கின் பேரரவங்கேட்டிலையோ பிள்ளா யெழுந்திராய்

எ. வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினல் ஓசைப்படுத்த தயிரரவங் கேட்டிலையோ

அ. கீழ்வானம் வெள்ளென்று....பாவா யெழுந்திராய்

க0. கும்பகர்ணனும்தோற்று முனக்கே பெருந்துயிருன் தந்தானே

கஉ. இனித்தா னெழுந்திரா யீதென்ன பேருறக்கம்

கங. வெள்ளியெழுந்து வியாழ மிறங்கிற்று, புள்ளுஞ் சிலம்பினகாண் போதரிக் கண்ணிணய், குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே, பள்ளிக்கிடத்தியோ

கச. நங்கா யெழுந்திராய்

கரு. இன்ன முறங்குதியோ

கசு. துயிலணைபாடுவான் என்பது முதலியனவும்

**தொண்டரடிப்பொடியாழ்வார் திருப்பள்ளியெழுச்சி**

க. கதிரவன் குணதிசைச் சிகரம்வந்தணைந்தான்; கனை யிருளகன்றது என்பது முதலாகவும் சிந்தித்துத் தெளிக.

மேற்கூறிய நியாய அளவைகளால், மாணிக்கவாசகர் புறப்பாடு திருவெம்பாவை, ஊரிலுள்ளவர்கட்குத் தெரிவிக்க விடியற்காலத்திற் செய்வதும், திருப்பள்ளியெழுச்சி கோயி லில் விடியற்காலம் பள்ளியறையில் சொல்லவேண்டு மென் பதும் உபசார நியாயம்; அவ்விடியற்காலம் கடந்து செய்வது அபசார அந்யாயம்.

வைணவர்களும் நாச்சியார் நீராட்டு முதலிய விடியற்கா லம் செய்யவேண்டுவது சாஸ்திர நியாயம்; விடியற்காலம் கடந்து செய்வது அசாஸ்த்ர அந்யாயம்.

இதைக் கோயில் அதிகாரிகளும், கோயிற் பக்திஸ்ரத்தை யுடையவர்களும், சந்தேகவிபரீதம் நீங்கிச் சாஸ்த்ர அவிரோத மாய காலத்தில் உபசாரஞ் செய்யவேண்டுமென வெளியிடப் பட்டது.

இன்னும் சந்தேகமுள்ளவற்றை "கேள்விமுயல்" என்ற படி கேட்டும் சிந்தித்தும் தெளிக.

இது ஸ்ரீலஸ்ரீ கொ. ஷண்முகசுந்தர முதலியார் அவர்களால் சோபகிருதுஸு கார்த்திகைமீ அஉ வெளியிடப்பட்ட பத்திரத்தி லிருந்து எடுக்கப்பட்டது.

# தனுர்மாஸ உஷக்கால பூஜாவிளக்கம்

[சேலம் சிவஸ்ரீ கி. சிவசுப்ரம்மணியக் குருக்கள் எழுதியது.]

சிவபெருமானுக்குச் செய்யப்படும் பூஜைகள் நித்தியம், நைமித்தியம், காமியம் என மூவகைப்படும். அவற்றுள் நைமித்தியபூஜையாகிய தனுர்மாஸபூஜை மிகச் சிறந்ததாகும். ஏனெனில், மனிதர்களுக்கு 365 நாட்கள் கொண்ட ஒரு வருஷம் தேவர்களுக்கு ஓர் நாள் ஆகும். தைமீ முதல் பகற்காலம் எனவும், ஆடிமீ முதல் இராத்திரிக்காலம் எனவும் வழங்கப்படுகின்றன. மாதம் ஒன்றிற்கு 5 நாழிகையாக 12 மாதங்களுக்கும், 60 நாழிகையாகிறது. ஆகவே ஒரு வருஷம் தேவர்களுக்கு ஓர் நாள்.

ப்ரமாணம்

மநுஷ்யாணாம் ஏகம் வர்ஷம் ஷஷ்டி ஸம்வத்ஸரா ।
உத்தராயணம் து ஷாண்மாஸம் தேவானாம் திவாஸ்ம்ருத: ॥
தக்ஷிணாயனம் து ஷாண்மாஸம் தேவானாம் ராத்ரிரிதி ஸ்ம்ருத: ॥

சிவபெருமானை அர்ச்சித்தற்குரிய முக்கிய காலங்கள் உஷக்காலம், பிராதக்காலம், மத்தியான்னம், சாயான்னம், அர்த்தயாமம் என ஐந்தாம்.

மார்கழிமாதம் உஷக்காலம், தைமாதம் பிராதக்காலம், சித்திரைமாதம் உச்சிக்காலம், ஆடிமாதம் சாயங்காலம், ஐப்பசிமாதம் அர்த்தயாமம் எனவும் ஆகமங்கள் கூறுகின்றன.

ப்ரமாணம்

மார்கசீர்ஷே து மாஸே து உஷ: காலம் ப்ரசஸ்யதே ।
உத்தரஸ்ய திவாராத்ரே ப்ரத்யூஷே திவஸே ததா ॥
ப்ராத: காலம் ப்ரகுர்வீத தைஷ்ய ப்ரத்யூஷே ஹநி ।
ஸம்க்ராந்தே மத்யமம் சைவ மேஷே ஸூர்ய உதீயதே ॥
ஸாயம் கர்கடகே ப்ராப்தே ததைவ மத்யமம் ததா ।
துலா ராசிகதே ஸாயம் ததைவ அர்த்தயாமகம் ॥

ஆகவே, மார்கழிமாதம் 30 நாட்களிலும் உஷக்காலத்திலும், தைமாதம் 30 நாட்களிலும் பிராதக்காலத்திலும், சித்திரைமாதம் 30 நாட்களிலும் உச்சிக்காலத்திலும், ஆடிமாதம் 30 நாட்களிலும் சாயங்காலத்திலும், ஐப்பசிமாதம் 30 நாட்களிலும் அர்த்தயாமத்திலும் சிவபிரானை விசேஷமாகப் பூசிப்பது மிக உத்தமம்.

விடியற்காலம் ஸத்வகாலம் எனவும், பகல் ரஜோகாலம் எனவும், இரவு தமோகாலம் எனவும் மூன்றாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இதனாலேயே,

"வைகறைத் துயிலெழு" என ஔவையாரும்,

"எழுக வருண னெழுமுன் கடிகையைந்திற்
றெழுக சிவன்றனைத் துதித்து"

எனச் சைவசமயநெறி யாசிரியரும் உரைத்தருளினர்.

இராத்திரியின் முடிவில் $3\frac{3}{4}$ நாழிகை பிராம்மீமுகூர்த்தம் எனப் படும். அறிஞர்கள் ஷை பிராம்மீமுகூர்த்தத்தில் நித்திரைவிட் டெழுந்து, சிவபெருமானைச் சிந்திக்கவேண்டும்.

தபஸ், தியானம், யோகம், ஸமாதி முதலியவைகளுக்குப் பிராம்மீ காலமே மிகச் சிறந்தது. முதல்நாள் மனம் பலவழிகளிலும் பற்றி அலைந்து களைப்புற்று இரவில் நித்திரையில் ஒடுங்குகிறது. அவ்வாறு நித்திரையில் ஒடுங்கிய மனம் விரிந்து மறுபடியும் அலைவதற்கு முன்பு நித்திரைவிட்டெழுந்ததும் ரஜோதமோ குணங்களில் பிரவேசிக்க வொட்டாமல் தடுத்து, சத்வகுணத்தால் இறைவனை வழிபடச்செய்தல் அவசியம். மனம் விரிந்து அலைந்துகொண்டிருக்கும் பகற்காலத்திலோ இராத்திரியிலோ அதனை (மனதை)த் திருப்புதல் மிகக் கடினமாகும். நமது பெரியோர்கள் "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்", "இடம் பொருள் காலம் ஆகிய மூன்றும் ஒன்றுபடவேண்டும்" எனக் கூறுவர். மனம் விரிவதற்கு முன்னமே "இளமையிற் கல்" இளமையிலே வித்தைகளை அப்பியசிக்க வேண்டும் என்பர்.

வேதம், ஸங்கீதம், யோகவித்தை முதலிய பல கலை ஆராய்ச்சிகளை யும் விடியற்காலத்திலேயே அப்பியாசம் செய்கின்றனர். ஸத்வகால மாகிய விடியற்காலையில், ஸத்வக்ஷேத்திரமாகிய சிவாலயத்தில், ஸத் வப் பொருளாகிய இறைவனை, ஸத்வகுணத்திற் றோய்ந்த மனத்தால், ஸத்வ திரவியம் ஸத்வபுஷ்பம் முதலியவைகளைக் கொண்டு, ஸத்வ பூஜை செய்தலே உத்தமோத்தமமான பலனைத் தரும்.

[illegible]

[illegible] ।
[illegible] ।
[illegible] ॥

"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளா"னாகிய மனோ மயா தீதமணாளனை மார்கழிமாதம் 30 நாட்களிலும் விடியற்காலத்தில் சிவாகமவிதிப்படி யருச்சிப்பவர்கள் இம்மை மறுமைப் பயன்களை யடைவர். மார்கழிமாதம் விடியற்காலத்தில் ஒருவேளையிற் செய்யும் பூஜையானது, ஆயிரம் நாட்களில் செய்த சிவபூஜைக்குச் சமான மாகும். ஆயிரம் வருஷம் பூஜித்த பலன் ஒருநாள் பூஜையால் கிடைக்கும்.

காரணே

ஸஹஸ்ர ஶிரவந்த்³யாங்க்⁴ரி ஸம்ஸேவ்ய ஸம்விதே³ |
ஸஹஸ்ர வக்ஷஸ்கீ வந்த்³யா ஶிரஸ்ஸ்யாத் ஸ்ருஷ்டிதே ||

விண்டு முதலிய பல உலகங்களிலும் உள்ளவர்கள் வணங்கும் பொருட்டுத் தமது திருவடிச்சிலம்பைத் தந்தருளும் சிற்றம்பலத்து ஈசனுர்க்கு நாமெல்லோரும் அன்பர்களல்லவா?

"கண்ணைத்துயின்றவமே காலத்தைப் போக்காதே" "கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்" "வெண்சங்கு எங்கும் இயம்பும்" "ஈதென்ன உறக்கமோ வாய்திற" "ஊழிமுதல்வனுய் நின்ற ஒரு வனை ஏழை பங்காளனையே பாடு" என்று வற்புறுத்தி எழுப்பிக் கூறுகின்றார் மணிவாசகனுர்.

அன்பர்களே! பெறுதற்கரிய மானுடப்பிறவியைப் பெற்றுக் காலத்தை அவமே போக்காதீர்கள். மணிவாசகனுர் மனமுருகிச் சொல்லும் அழகிய வாசகங்களைக் கேட்ட பின்னும் தூங்கலாமோ? மார்கழிமாஸம் விடியற்காலம் வரப்போகிறது. விடியற்காலத்தில் எழுந்திருங்கள். இச் சரீரமும் பொருளும் என்றும் நிலையுரு. நாம் நித்தியமாய் வாழவேண்டுமானுல், "நிலைபெறுமாறு எண்ணுதியேல்! நெஞ்சே! நீ வா. நித்தமும் எம்பெருமானுடைய கோயில் புகுந்து, புலர்வதன்முன் அலகிட்டு, மெழுக்கும் இட்டு, பூமாலை புனைந்து ஏத்திப் புகழ்ந்து பாடி, தலையிறை (எட்டு உறுப்பும் நிலந்தோயக் கும்பிட்டு, கூத்துமாடி, சங்கரா! ஜய! ஜய! போற்றி! போற்றி, என்றும், அலைபுனல் சேர் செஞ்சடையெம் ஆதி! என்றும், ஆரூரா! என்றும் நெஞ்சமுருகிக் கதறிப் போற்று" என்று வாகீசப்பெருந்தகை யாரும் அருள்சுரந்தவாறு, வரப்போகும் மார்கழிமாதத்தில் சைவ சமயிகள் யாவரும் (உதயத்திற்குமுன்) விடியற்காலம் நான்கு மணிக்கு எழுந்து (சமயதீக்ஷைபெற்றவர்கள்) ஸ்நானஞ்செய்து, விபூதிருத் திராக்கம் தரித்து, விதிப்படி பஞ்சாக்ஷரத்தை இயன்ற உரு ஜபித்து, சிவாலயதரிசனஞ்செய்து, தன்னுல் இயன்றவளவு அலகிடுதல், மெழு கிடுதல், புஷ்பந் தொடுத்தல், தூபதீபம் வைத்தல், சக்திக்கேற்றவாறு பூஜாதிரவியங்களைச் சேகரித்துத் தருதல் முதலிய சிவபுண்ணியங் களைச் செய்யவேண்டும்.

விசேஷதீக்ஷைபெற்றவர்கள் விதிப்படி ஆன்மார்த்தபூஜையைச் செய்து சிவதரிசனஞ் செய்யவேண்டும்.

நிர்வாணதீக்ஷை யடைந்த உத்தமர்கள் சிவயோகத்தமர்ந்து பூஜை செய்யவேண்டும்.

பரார்த்தபூஜை செய்தற்குரிய ஆதிசைவர்கள் விதிப்படி சிவாலயங் களில் பூசித்தல்வேண்டும்.

## உஷக்கால நிர்ணயம்

1. மார்கழிமீ 29 தினம் நிறைந்ததாக, கார்த்திகைமீ 30வ இராத்திரி தனுர்மாதப்பிறப்பும், மார்கழிமீ 29வ இராத்திரியே மகர ஸங்கிரமணமும் ஏற்பட்டால்,

கார்த்திகைமீ 30வ உதயாத்பூர்வம் சேர்த்து 30 நாட்கள் பூஜிக்க.

ப்ரமாணம்

ஏகோநத்ரிம்ஶத்திவஸை: க்ஷயம்ஸம்ஹோ விஶேஷத: |
பூர்வோத்தரே விதிஸ்யாத் த்ருதீயேகம் ஶிவார்ச்சநம் ||

2. மார்கழிமீ 29 தினம் நிறைந்ததாக, கார்த்திகைமீ 30வ இராத்திரி மார்கழிப்பிறப்பும், தைமீ 1வ உதயாத்பரம் மகரஸங்கிரமணமும் ஏற்பட்டால்,

மார்கழிமீ 1வ உதயாத்பூர்வந்தொடங்கி, மார்கழிமீ 29வ இராத்திரி அதாவது, தைமீ 1வ உதயாத்பூர்வம் சேர்த்து 30 நாட்கள் பூஜிக்க.

ப்ரமாணம்

ஆபம் ப்ராப்தே ஸவிதரி ப்ரத்யூஷே ஶிவார்ச்சநம்
ரவிஸங்க்ரமணம் ராத்ராவபரே ஸம்ப்ரபூஜயேத் |
ஏகோநத்ரிம்ஶ ராத்ர்யாம் விதிஸ்யா த்ருதீயேவ ச |
த்ரிம்ஶத்திநம் ப்ரகல்பித பூஜயேத் ஸாயகோத்தம: |

3. மார்கழிமீ 29 தினம் நிறைந்ததாக, மார்கழி 1வ உதயாத்பரம் தனுர்மாதப்பிறப்பும், தைமீ 1வ உதயாத்பரம் மகரஸங்கிரமணமும் ஏற்பட்டால்,

மார்கழிமீ 1வ உதயாத்பூர்வம் தொடங்கி, மார்கழிமீ 29வ இராத்திரி அதாவது, தைமீ 1வ உதயாத்பூர்வமும் சேர்த்து 30 நாட்கள் பூஜிக்க.

ப்ரமாணம்

ஏகோநத்ரிம்ஶராத்ர்யாம் விதிஸ்யா த்ருதீயேவ ச |
த்ரிம்ஶத் திநம் ப்ரகல்பித பூஜயேத் ஸாதகோத்தம: ||

4. மார்கழிமீ 29 தினம் நிறைந்ததாக, கார்த்திகைமீ 30வ உதயாத்பரம் (பகலில்) தனுர்மாதப்பிறப்பும், மார்கழிமீ 29வ இராத்திரி மகரசங்கிரமணமும் ஏற்பட்டால்,

கார்த்திகைமீ 30வ உதயாத்பூர்வம் தொடங்கி, 30 நாட்கள் பூஜிக்க.

காரணே

வ்ராத: காலெ ச உஸ்ராலெ ஹ்ர வ்ருஷொஷெ ஸம்க்ரமெ யதி।
வூஜா காலெ ஸகாலெவா உஷ: காலாவஸ்ய வூஜநம்॥

5. மார்கழிமீ 30 தினம் நிறைந்திருக்க, மார்கழிமீ 1வ உதயாத்பரம் தனுர்மாதப்பிறப்பும் ஏற்பட்டால்,

மார்கழிமீ 1வ உதயாத்பூர்வம் தொடங்கி, 30 நாட்கள் பூஜிக்க.

காரணே

வ்ராத:காலெஅஉஸ்ராலெ ஹ்ர வ்ருஷொஷெ ஸம்க்ரமம் யதி।
வூஜாகாலெ ஸகாலெவா உஷ:காலாவஸ்யவூஜநம்॥

6. மார்கழிமீ 30 தினம் நிறைந்திருக்க, கார்த்திகைமீ 30வ இராத்திரி தனுர்மாதப்பிறப்பு ஏற்பட்டால்,

மார்கழிமீ 1வ உதயாத்பூர்வம் தொடங்கி, 30 நாட்கள் பூஜிக்க. இது மிகவும் உத்தமமானது.

காரணே

ராத்ரௌ சைவ உஷெ ஹாநௌ உத்தமம் வரிகீர்த்திதம்।

7. மார்கழிமீ 31 தினம் நிறைந்திருக்க, மார்கழிமீ 1வ உதயாத்பரமோ, இராத்திரியோ தனுர்மாதப்பிறப்பு ஏற்பட்டால் ஷ தேதியை விடுத்து,

மார்கழிமீ 2வ உதயாத்பூர்வம் முதல் 30 நாட்களும்பூஜிக்க.

காரண:-ஸஉராத்ரஸ்வரகாலெ ஜயஸம்ப்ரஹணம் உதம்

இராத்திரி 25 நாழிகை முதல் 30 நாழிகை வரை உத்தம உஷக் காலம் எனவும்,

இராத்திரி 27 நாழிகை முதல் 30 நாழிகை வரை கூடிய உஷக் காலம் அதமம் எனவும் ஏற்படுகிறது.

காரணே

வஞ்சவிம்ஶத்யுஷ:காலமுத்தமம்த விஸீயதெ।
ஸப்தவிம்ஶத்யுஷ:காலமதமம்த விஸீயதெ॥

மேற்கூறியவாறு 25 நாழிகைக்குப் பிறகு கோயில் திறக்கப்பட்டு திருப்பள்ளி யெழுச்சி நடத்துதல் முறையாகும். அவ்வாறின்றி இரவு 11 மணி அல்லது 2 மணிக்கே ஆலயங்களைத் திறந்து 3 மணிக்கு முன்போ, (4 மணிக்கு) 25 நாழிகைக்குமுன்போ சிலர் தனுர்மாத பூஜை செய்கிறார்கள். அது மிகவும் பாபச்செயலேயாம். உபசார மின்றி அது அபசாரமாகவே முடியும். தருமபரிபாலகர்கள் இதனைச் சரிவர உணர்ந்து விதிப்படி நடத்துவிப்பாராக.

அர்த்தராத்திரிக்குப் பின் விடியற்காலத்திலேயே ஜலம் சேகரித்தல் நலமாகும்.

காரணே :—அர்த்தராத்ராத்பரே காலே ஜலஸங்க்ரஹணம் ஶுபம்

முதல்நாள் பகலிலேயே புஷ்பங்களை எடுத்து வைத்துக்கொள்ளுக. நீலோத்பலம், தாமரை, துளசி, பில்வபத்ரம் இவை உரியன. ஒரு நாள் முன்னதாக எடுத்தலால், புஷ்பங்கட்குத் தோஷமில்லை. அவைகளால் தனுர்மாத (உஷக்கால) பூஜை நடத்தலாம். வெள்ளை நிறமுள்ள ஸாத்விக புஷ்பங்கள் மிகச் சிறந்தவை.

காரணே

பூர்வஸங்க்ரஹணம் விப்ர பூர்வேத்யுர்க்ருஹ உதிதே ।
நீலோத்பலஞ்ச பத்மஞ்ச துளஸீ பில்வபத்ரகம் ।
ஸங்க்ரஹோ தஸ்ய புஷ்பாணி நதோஷம் தேஷு பூஜயேத் ।

| | |
|---|---|
| வெண்தாமரை | வில்வபுஷ்பம் |
| புன்னாகம் (புன்னை) | மகிழம்புஷ்பம் |
| மல்லிகை | வெள்ளெருக்கு |
| நந்தியாவர்த்தம் | முல்லை |
| ஸ்ரீயாவர்த்தம் | தும்பை |
| வெள்ளைமந்தாரை | காசாம்பு |
| மருதாணிப்புஷ்பம் | வெள்ளலோத்தி |
| ஜாதிப்புஷ்பம் | |

ஆகிய இவைகள் ஸாத்வீக புஷ்பங்களாகும்.

வெண்டாமரை, நாகபுஷ்பம், நந்தியாவர்த்தம், மல்லிகை, வெள்ளெருக்கு, வில்வபுஷ்பம், நாயுருவி, அலரிப்புஷ்பம் ஆகிய எட்டுப் புஷ்பங்களுமே அஷ்டபுஷ்பத்திற்குரியன.

பயறன்னம் (பாசிப்பருப்பு அன்னம்), நெய்யுடன் இஞ்சியும் சேர்ந்ததுமாகத் தயிருடன் நிவேதிக்கத்தக்கது. தயிரன்னம் (லவணம், சுக்கு சேர்த்தது) நெய், (ஏலரிசி சேர்த்தது) எலுமிச்சம்பழம், வள்ளிக்கிழங்கு, பால், தயிர், நெய், வெல்லம், அதிரசம் முதலியவைகளும் நிவேதித்தற்குரியன. மேற்கூறிய பதார்த்தங்கள் எல்லாம் ஸத்வத்பொருள்கள் என்பது ஈண்டுக் கவனிக்கத்தக்கதாம். யோகாப்பியாசிகள் பாசிப்பருப்பன்னம் உட்கொள்வது மரபு.

காரணே

முத்காந்நம் க்ருதஸம்யுக்தம் ஸார்த்ரகம் ஶர்கரான்விதம் ।
ததியுக்தம் ஸைந்தவ ஸம்யுக்தம் ஸம்புஷ்டம் நாமதேயத ॥
ஶுண்ட்யாதிகஸம்யுக்தம் ஜம்பீரபலஸாரகம் ।
ஶர்கரோதம் விஶேஷேண ஏலாயுக்தம் ததைவ ச ।
க்ஷீரம் ததி க்ருதஞ்சைவ குடபக்வம் அபூபகம் ॥

காரணே

[illegible]

ஆசாரியர் 25 நாழிகைக்குமுன் எழுந்து, நித்தியமான அவசியகருமங்களை முடித்து, தந்தசுத்தி ஸ்நானஞ்செய்து, விபூதி தரித்து, (மந்திரானுஷ்டானம் புரியாமல்) மனதால் மந்திரங்களை யுச்சரித்துப் பஞ்சாக்ஷரத்தைப் பத்து உரு ஜபித்து, வெண்மையான வஸ்திரோத்தரீயத்துடன் ஆசமனஞ் செய்க. ஆத்மசுத்தி, மந்திரசுத்தி, அந்தர்யாகம், துவாரபூஜை, ஸப்தகுருபூஜை, விக்னேஸ்வரர்பூஜை, ஸ்திராசன அர்ச்சனையையும் யோகாங்கபூஜையையும் செய்யக்கூடாது. ஹோமம், பலி சிவாலயத்திற்கு அங்கமாயிருக்கும் நடராஜர் முதலிய மகேசுவரமூர்த்திகள், பரிவாரங்களுக்கும், கணபதி, வ்ருஷபம், தக்ஷிணாமூர்த்தி, ஸ்கந்தர் லக்ஷ்மி, சூர்யன், பைரவர், சப்தகன்னிகை, சண்டேசர் இவர்களுக்கும் உஷக்காலத்தில் பூஜை செய்யக்கூடாது.

ஸ்நானம், பஞ்சகவ்யம், பஞ்சாமிருதம் இவைகளை முறைப்படி தயாரித்துக் கர்ப்பக்கிருகத்திற்குள் மெதுவாகப் பிரவேசித்த நிர்மாலிய விஸர்ச்சனமும் லிங்கசுத்தியும் செய்து, பின் ஆஸனமூர்த்தி மூலத்தால் அர்ச்சித்து, அஷ்டபுஷ்பம் சமர்ப்பித்து, அபிஷேகித்து, வஸ்திரபுஷ்பம் முதலியன சாத்தி, நைவேத்தியம், தூபதீபம், கர்ப்பூர ஆராத்ரிகம், பஸ்மம், கண்ணாடி, குடை, விசிறி முதலிய உபசாரங்களையுஞ் செய்து, பாத்திய ஆசமன அர்க்கியமுங் கொடுத்துத் தேவியாலயத்திற்குச் சென்று தேவியையும் பூஜிக்கவும். (தினந்தோறும் நடாத்தும் உஷக் காலபூஜைக்கும் இவ்விதியே உரியதாகிறது.) இவ்விதம் தனுர்மாத உஷக்காலபூஜையைச் செய்பவர்கள் மேலான அஷ்டைச்வரிய சாம்ராஜ்ய புண்ணியபலங்களையும் மனோபீஷ்டங்களையும் சிவசாயுஜ்யத்தையும் அடைவார்கள்.

யஸ் த்வாரி மதோத்பட: கரிவரா: வாதாயமானா ஹயா:
ஸத்மன்யேந்துமுகாரவிந்த நயனா: ஶிவபூஜாவிதே: ஃபலம் ॥

எவனுடைய வீட்டுவாசலில் மதம்பொருந்திய யானைகளும் வாயு வேகத்தையுடைய குதிரைகளும் சந்திரன் போன்று குளிர்ந்த முகாரவிந்தங்களையுடைய பெண்மணிகளும் இருப்பார்களோ? அவ்வித மேன்மை சிவபூஜைசெய்தமையாலேயே கிடைத்ததாகுமென அப்பயதீக்ஷிதரும் அருளியுள்ளார். யாக்கை நிலைத்திருக்கும்போதே விரைவில் ஸமஸ்தமான யாகம், தபஸ், தானம், தீர்த்தாடனங்கள் கோடிகோடியாகச் செய்வதாற் கிடைக்கும் பயனைத் தரத்தக்க சிவபூஜையைச் சிவாகமவிதிப்படி செய்தும் செய்வித்தும் பேரானந்த நன்னிலை பெற்று உய்வோமாக.

குறிப்பு:—ஸ்ரீமத் அப்பயதீக்ஷிதர் அவர்கள் இயற்றிய சுலோகத்தில், ஶிவபூஜவிதே: ஃபலம் என்பதனை ஶிவபூஜாக்விதே: ஃபலம் எனக்கொண்டு (“வாத ஹ்ருதோ வைத்யஶ்ரேஷ்ட: வாதத்தில் நழுவியன் வைத்தியசிரேஷ்டன்” என்பதுபோல) சிவபூஜையை விதிப்படி செய்யப்படாமையால் மேலே கூறிய போகங்களை யனுப்பவிப்பவர் என்றும், ‘சிவசிவ வென்னச் சிவகதி தாமே’ எனத்திருமூலர் அருளியவண்ணம் விதிப்படி சிவபூஜையைச் செய்தோர் பேரானந்தக்கடலுள் மூழ்கிச் சிவசாயுஜ்யம் பெறுவர் எனத் தேவகோட்டைச் சிவாகமசங்க அத்யக்ஷர் ஸ்ரீமான் அள. பழ. சுப. சுப்பிரமண்ய செட்டியார் அவர்கள் உரைசொன்னது ஈண்டு நினைவிற்கு வந்து அவரது உரை மெச்சத்தக்கதாயிற்று.

---

பொற்றாமரைக்கரையிற் கற்றூர் பலர் பேச்சு

# (ஸ்திரீகள் பகுதி)

"இராகு"

**சுப்பிரமணிய சாஸ்திரி :—** தீக்ஷிதரே! நம்மள் காலத்திலேயே என்னென்ன கோலங்கள் பார்த்தீர்களா? இப்படிக்கெல்லாம் விபரீத சம்பவம் நேருமென்று நாம் 40 வருஷத்துக்கு முந்தி ஸ்வப்னேபி நினைத்திருப்போமா?

**தீக்ஷிதர் :—** என்னங்காணும் பிரமாதம்? கலி முதிரமுதிர இன்னும் இதுபோல் எவ்வளவோ ஆகப்போகிறது. இதை நினைப்பதென்ன? பார்ப்பதென்ன? நமது சாஸ்திரங்கள் தாம் இன்னும் எவ்வளவோ இதற்கதிகமெல்லாம் சம்பவிக்குமென்று கூறுகின்றனவே! இதில் என்ன அதிசயம்.

**சாஸ்திரி :—** என்ன? இவ்வளவு மோசமாகவா? கலி ௪ லக்ஷத்து ௩௨௦௦ வருஷத்துக்கு இன்னும் ௫௦௪௧ ஆவது சரியாக முடியவில்லையே.

**தீக்ஷிதர் :—** என்னங்காணுமென்ன? பிரமாதப்படுத்துறீரே. இப்ப என்ன கெட்டுவிட்டது?

**சாஸ்திரி :—** நாகரீகமாம்! நாகரீகம்! முதலில் நம் பெண்டுகளைப் பாருமே. பதிவிரதா ஸ்திரீகளுக்குப் பகுப்பு முக்கியமென்று யாரும் சொல்லுகிறார்கள். அது நாசிக்கு நேராக எவ்வளவு தூரம் சிரசில் நீண்டு சென்றதோ, அவ்வளவுக்கவ்வளவு ஆயுசு மங்கலிடம் நீடிக்குமென்று சொல்வார்கள். அதிலே குங்குமமிட்டுக்கொள்ளுவதுமுண்டு. இப்போ பாரும்! நேத்திரத்துக்கு நேராக ஆரம்பித்து, "வாயவ்யாதாக்னேயாந்தம்" என்று ஓடுகிறது.

**இராமநாத சாஸ்திரி :—** அது பெண்டுகளின் கதி (நடை) இவ்வளவு நேரானதென்று தெரிவிக்கிறது! (சிரிப்பு)

**வீராசாமி கனபாடிகள் :—** பெண்டுகளுக்கு மஞ்சள் முக்கியமல்லவா? ஒருவர் பதார்த்தகுணபோதினின்னே என்னமோ சரியா ஞாபகமில்லே பேர் வைத்து ஒரு தமிழ்நூல் எழுதியிருக்கார். அதில் மஞ்சளைப்பற்றி எவ்வளவிருக்கிறதென்கிறீர். ஆயிசு வளருமாம்; தொத்து வியாதி அணுகாதாம்; சர்மரோகங்கள் தொலைந்து போகுமாம்; இரணரோகம் குணப்படுமாம்; தொத்துவியாதிகளுக்கு மூலமான விஷக்கிருமிகளெல்லாம் மஞ்சள் வாடையினால் அழிந்து போகிறதாம். இன்னும் எவ்வளவோ. இதை எல்லாந் தெரிந்துதானே நம் முன்னோர்கள் சுமங்கலிகளுக்கு மஞ்சள் ஸ்நானம் கட்டாயமென்று விதித்திருந்தார்கள். அது அடியோடு தொலைந்துபோய் விட்டதே!

**இராமகிருஷ்ண கனபாடிகள் :—** இப்போ நம்மாத்துப் பொம்மனாட்டிகளாராய்ச்சியில் முகம் மஞ்சள் பூசிக் குளித்தால் கிழட்டு மூஞ்சிப் பட்டுவிடுமாம். என்ன கேடுகாலம்!

**இராமநாத சாஸ்திரி** :—மஞ்சட்பூச்சு கிழட்டுமூஞ்சி யாக்கிவிடும். மஞ்சள் பூசாதுபோனால் கிழவியாகாமலே (பாலியத்திலேயே தொலைந்து போகலாம்! அது உண்மைதானே கூட்டத்தில் பலே நல்ல சமாதானம்!)

**நடேசையர்** :—அது சரி. நமது வைத்தியசாஸ்திரப்படிக்கோ ஆராய்ச்சியினாலோ மஞ்சள் அவ்வளவு சௌக்கியத்திற்கு ஹேதுவென்றால் அதைச் சுமங்கலிகளுக்கு மட்டும் விதிப்பானேன்? விதவைகள், ஆடவர்கள் இவர்களெல்லாம் சௌக்கியமாக இருக்கக்கூடாதா?

**பிச்சுவையர்** :—இதா வார்த்தை? அவர்களுக்கு இதுபோல் வேறே ஏதாவதொன்று வைத்திருப்பார்கள். சுமங்கலிகள், விதவைகள், ஆடவர்கள் என்கிற பேதம் வேண்டாமா?

**காங்கிரஸ் வைத்தா** :—அடே சனியனே! இந்தப் பேதந் தானே உங்களைக் கெடுத்து நாட்டை இந்த நிலையில் வைத்திருக்கிறது. இது தானே வேண்டாமென்கிறார் மகாத்மா.

**சுப்பண்ணா** :—அடே! உன் காங்கிரசை இங்கே கொண்டுவந்து நுழைக்காதே. ஒரு பேச்சும் முடிவடையாது.

**பிச்சு** :—மகாத்மாவாம் கிகாத்மாவாம். யார் கொடுத்தப்பட்ட மடா அது!

**கா. வைத்தா** :—யார் கொடுக்கணும்னே. உலகம்னா கொடுத்திருக்கு. தெரியுமா?

**பிச்சு** :—உலகங் கொடுக்கவாவது புழுகவாவது. தன்னைத்தானே தூக்கி வைத்துக்கொண்டு ஒரு கக்ஷியாடரது. நீயொரு முட்டாள். பிராம்மணனுக்குப் பிறந்திருந்தியானாத் தெரியும்.

**கா. வைத்தா** :—அடே! அதிகப் பிரசங்கித்தனமாப் பேசாதே. நீதான் மகாப் பிராம்மணனோ? அறை குடுத்தேன்னா செவுட்டைத் திருப்பிவிடுவேன்.

**சிவராம கனபாடிகள்** :—அடே! பேசாதிருங்கள். என்னடா சண்டை? பெரியவளாப் பேசிக்கொண்டிருக்கும்போது ஊடே எதையோ ஆரம்பித்து, மண்டை யொடையும் போலிருக்கிறதே.

**கா. வைத்தா** :—என்ன மாமா இது? நீங்கள் தான் சொல்லுங்களேன். வாய்வார்த்தை வாயிலிருக்கும்போது, பிராம்மணனுக்குப் பிறந்திருந்தாத் தெரியும்னு கேட்கிறானே. பறையனுக்கா பிறந்தேன். இவனை என்ன பண்ணப்படாது?

**பிச்சு** :—என் கேட்கப்படாதுன்னு கேட்கிறேன்? இவனுக்கு ஏன் இவ்வளவு கோபம் வரது? இவன் மகாத்மாதான் பிராமணனில்லே, பறையனில்லே எல்லாம் சமம்ங்கிறாரே. இந்த முண்டே சற்று முந்திச் சனியன் பிடித்தபேதம் என்னானே. நாளை இவனப்பன் செத்தா திவசம் பண்ணமே யிருக்கட்டுமேங்கிறேன்.

**கா. வைத்தா** :—ஏண்டா! விதியத்த பயலே? நானேண்டா தெவசம் பண்ணமே விடறேன். கவோதிப்பயலே, நீ வேண்ணா விதியில் லேன்னுப் பண்ணவேண்டாம்.

பிச்சு :—இந்தா நிதானமாப் பேசு. நானு திவசம் பண்ண விதியில் லேங்கரேன். விதிதானே (சாஸ்திரவிதி) திவசம் பண்ணச் சொல்கிறது. உங்களுக்கு வேண்ணு விதி, விலக்கு, ஒரு சனியுனுங் கிடையாது. கண்டதே காக்ஷி ; கொண்டதே கோலம் ?

கா. வை :—அட ! கவோதி ! உன் விதி யாருக்கு வேண்டும் ? ஐவேஜ் இல்லேன்னுன்னு சொன்னேன்.

பிச்சு :—சரி சரி. ஐவேஜுக்கா விதீன்னு பேரு ? அந்த நிகண்டு நான் படிக்கல்லேப்பா. அதிருக்கட்டும். உன் விதி யாருக்கு வேண்டும் என்றுயே. அப்போ திவசத்தைச் செய்து தொலைத்துவிடேன்.

இராமநாத சாஸ்திரி :—நிதி என்பதை விதியென்று சொல்லிவிட்டான். அநேகம் பெயர்வழிகள் இப்படித்தானே கவனிக்காமல் அநேகம் பதங்களை உபயோகப்படுத்துகிறார்கள். கிழிந்த வேஷ்டியை அஜீர்ணமாய்விட்டதென்கிறார்கள். இப்படி எவ்வளவோ அனந்தம் ! விடுங்கள்.

பிச்சு :—அது சரீன்னு மகாத்மான்னுனே. இந்தப் பட்டம் யாரு கொடுத்தது ? இவாளா பேப்பரிலே எழுதிக்கிண்டா ஊர்ஜிதமாப் போச்சோ ?

கா. வை :—ஏன் ? அதுக்குத் தாவாச் சொன்னதாரு ?

பிச்சு :—யார் சொல்லுவா ? அவாளவாளுக்கன்னு வேணும். விஸ்வாமித்திரர் தபசு பண்ணினுர் பிரும்மரிஷியாகணும்ன்னு. திரிமூர்த்திகளுந்தான் வந்து 'தவத்தை நிறுத்தடா. நீதான் பிரும்மரிஷின்னு' அவர் ஒப்புக்கொண்டாரா ? வசிஷ்டர் வாயாலே சொன்னுத்தான்னுரேல்லியோ. அப்படிக்கல்லவா பட்டம் வாங்க வேண்டும் ? இவரைப் பிரும்மரிஷின்னும் இல்லேன்னும் யாருமா சொல்லவந்தா. நான்தா சக்கரவர்த்தீன்னு நாடகத்திலே வேஷக்கார ராஜா கள்ளிப்பெட்டி சிம்மாசனத்திலே இருந்து சொல்ரான்.

தீக்ஷிதர் :—நீங்கள் சற்றுத் தயவுசெய்து கொஞ்சம் வெருமனே இருங்கள். நீங்கள் பேசுகிற விஷயம் வேறே. அதை இன்னொரு நாள் வைத்துக்கொள்ளலாம். அர்த்தஜாமப் பூஜைக்குத் துவக்கம் செய்துவிடுவார்கள். அவாளவாள் தெரிசனம் செய்துவிட்டுக் கிருகங்களுக்குப் போகவேண்டாமா ? நல்ல மங்களகரமான மஞ்சள் பேச்சிலிருந்து எங்கோ போய்விட்டதே. சாஸ்திரிகளே நீங்கள் சொல்லுங்கள் ; ஆடவர்களுக்கேன் மஞ்சள் விதிக்கப்படவில்லை ?

கிட்டப்பா :—அடேயப்பா ! பெரிய கேள்வை. மஞ்சள் பூசிக் குளிக்கிறவர்களுக்கு அவ்விடத்தில் ரோமம் முளைக்காதாம். இதைப் பாட்டிகளெல்லாம் கூறுவார்களே.

தீக்ஷிதர் :—பெரியவாள் வாயாலே வரட்டும்னு கேட்கரானு. வெற்றிலை போட்டுக்கொண்டால் மாடுமுட்டு மென்கிறுப்போலே தான் நீ சொல்ரது.

**அய்யாபட்டர் :**—அதென்னமோய்யா. ஆகமசாஸ்திரத்திலே அபி ஷேகவிதி கூறுமிடத்து, மஞ்சள் எல்லாத்திற்குந் தான் சொல்லப் பட்டிருக்கிறது. சுவாமிக்கு வேண்டாம், அம்பாளுக்கு வேணும். இப்படித் தெரியலே.

**விகடன் :**—விதவை அம்பாளுக்கு......... (கூட்டத்தில் கோபச் சிரிப்புடன் முட்டாள்! முட்டாள்!)

**இராமநாத சாஸ்திரி :**—தேவதாராதன விஷயங்களைக்கொண்டு மனுஷ்யதர்மத்திலே எல்லாவற்றிற்கும் சாம்யம் சொல்லமுடியாது. எதோ கிஞ்சித் பொருத்தப்படலாம். ஆடவர்களுக்கு மிருத்திகா ஸ்நானம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆமலகம் முதலானதினுலே சுத்திசெய்துகொள்ளலாம். மேலும் மஞ்சளைக் காட்டிலும் பன்மடங் கதிகமான எத்தனையோ குணங்களுடைய பஸ்மோத்தூளனம் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் வேறென்ன வேண்டும்?

**நடேசையர் :**—சரி. மஞ்சளின்பேரில் பஸ்மோத்தூளனமோ, திரிபுண்டரமோ (கலர்) எடுக்காததுதான். அதிருக்கட்டும். விதவை களுக்கு ஏன் கூடாது? அவர்களுக்குச் சுகாதாரம் முதலான சௌக்கியம் வேண்டாமா?

**சுப்பிரமண்ய கனபாடி :**—விதவைகள் இருந்தென்ன? போய் என்ன. புருஷன் போனபிறகு இவ்வுலகில் என்ன வேண்டும்? தொலைய வேண்டியதுதானே!

**காங்கிரஸ் முசுகுந்தன் :**—எல்லாரும் பெரியவாளாயிருக்கிறீர்கள். நான் சொன்னுல் கோபம் வரும். இந்த விகற்பபுத்தியும் ஆத்மலாப மும் இருக்கும் வரை நம்சமூகம் ஒருநாளும் முன்னுக்கு வரப்போவ தில்லை. தன்னைப்போல் பிறரையும் நினைக்கவேண்டும். புருஷர்களுக்கு 50 வயதானுலும் மறுமணம் வேண்டும். ஸ்திரீகளுக்கு ருதுவாகு முன்னே புருஷன் இறந்தாலுங்கூட மறுமணமுதவாது. அது மட்டிலுமா? தலையைச் சிரைக்கவேண்டும். தாலியை அறுப்ப தோடல்ல; நகைகள், நல்ல ஆடைகள், நறுவாடைகள், மலர் மாலைகள் ஒன்றும் உபயோகிக்கக்கூடாது. என்ன தருமம்!

**இராமநாத சாஸ்திரி :**—நீ ஆரம்பித்திருக்கிற விஷயம் பெரிது. ஆனுல், அத்தனைக்கும் சமாதானம் சொல்ல முடியும். இப்போது அவகாசம் போதாது. வந்திருக்கிற விஷயம் விதந்துவுக்கு ஏன் மஞ்சள் கூடாதென்பதே. வெற்றிலை, மஞ்சள், மனோஜ்ஞ்யமான வஸ்திரம், சுகந்தம், புஷ்பம், ஆபரணம் இவைகளெல்லாம் மனோ விகாரங்களை உண்டுபண்ணக் கூடியவைகள். ஆகையால், அவைகள் விலக்கப்பட்டன. மேலும் சுமங்கலிகள் ஆயுசுள்ளவரை பதிசுச்ரூஷை யாக இருந்து மேலான பதவியை அடைந்துவிடலாம். இதைத் தவிர வேறு வழியுமில்லை. அமங்கலிகளோ ஆடவர்களைப் போலத் தேவதா ராதனுதிகளில் இறங்கவேண்டியிருக்கிறது. ஆகையால், அவர்களுக்கு ஆடவர்கள் போலச் சரீரசௌக்கியத்திற்குப் பஸ்மம் முதலான சாத

னங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அபலைகளானபடியினாலே அவர்களுக்குத் திருடர்களாலே உபாதியின்மையின்பொருட்டும், காமுகர்களாலே துன்பமேற்படாமலிருக்கும் பொருட்டும் தற்காப்பிற்காகவே ஆபரணாதிகளும், சிகை எடுத்தல் முதலான உருக்குலைவும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. தெய்வத்தன்மைபொருந்திய காரைக்காலம்மையார் புருஷனிருக்கும்போதே அவரை விலகியிருக்க நேர்ந்தமையின், அவருக்குத் தற்காப்பு வேண்டிவந்த அவசியமும் அதற்கு அவர் தம் சரீரத்தை எவ்வாறாக்கிக்கொண்டாரென்பதையும் ஷை சரித்திரந் தெரிந்தாருணராமலிருக்க முடியாது. ஆனால், 'இவைகள் இந்தக் காலத்தில் அவ்வளவு கட்டாயமாக அனுட்டிக்கப்படவுமில்லை; என்ன செய்தாலும் மனோவன்மையில்லையேல், ஒன்றும் நிலைக்காதென்பதைக் கொண்டு சில வகுப்பில் சிகையை எடுப்பதுமில்லை. இத்தனையும் மீறிக்கெட்டலைகிற பிராணிகளை யார் என்ன செய்கிறார்கள்? என்ன செய்தார்கள்? இஷ்டம்போல் இருங்களென்றுதானே விடப்பட்டிருக்கின்றது. அப்படி நாலு சேர்ந்தால் அது ஒரு இனமாகிறது. அவர்களுக்குள் ஒருவருக்கொருவர் உதவியும் உண்டு. இவர்கள் தற்காப்பிற்குச் சட்டம் செய்யச் சீர்திருத்தத்தொண்டர்களும், சபையும் உண்டு. வேண்டுமாயின், அவர்களைப் பிடித்து ஏலம்போடுகிற (ஸ்திரீகளுக்குச் சுதந்திரம் கொடுக்கிற) நகரங்களும், நகரசபைகளும், ஷை மெம்பர்களும் வேண்டிய அளவு ஏராளமாக உண்டு. ஸ்திரீகளுக்கு ஏன் மறுமணம் கூடாதென்று கேட்கவும், அவர்களுக்கு விபசாரம் கூடாதென்று அவர்களைச் சுயேச்சையாய் இருக்கும்படி பிடித்து ஏலம் போடவும் சீர்திருத்தக்காரர்கள் தோன்றியிருக்கிறார்களே தவிர, வியபிசாரஞ் செய்கிற புருடனைப் பிடித்து, ஏலம் போடவோ, அவ்வாடவனைச் சுயேச்சையாக ஏலத்தில் எடுத்துவைத்து அனுபவிக்கும்படி விரும்பிய தங்கள் தங்கள் மனைவிகளை விட்டுச் சகித்திருக்கவோ அவ்வளவு பரிபக்குவத்திற்கு இன்னும் சீர்திருத்தக்காரர்கள் வரவில்லை. ஆனால், அவர்கள் மனைவியில்லாத புருடன்தான் ஏலத்தில் எடுக்கலாமென்றாவது நினைத்திருந்தால் செய்திருக்கலாம். அப்படிச் செய்தாலும் ஸ்திரீகளின் குறை தீர்ந்துவிடுமோ? மனைவியிழந்த ஒருவன் எவ்வகையிலுந் தனக்குச் சமாதானமில்லாத ஒவ்வாதவனாக இருந்தால் அவர்கள் என் செய்வது? மேலும் ஷை ஏலத்திற்குரிய மிருகவத்தான பிராணியை ஏலத்தில் எடுப்பவர்கள் கண்ணாற்கூடப் பார்க்க முடியாத நிலையில் ஏலமெடுக்கிற மனிதனையும் அவன் எவ்வளவு யோக்யப்பொறுப்புடன் ஷை ஸ்திரீகள் விஷயத்தில் நடந்துகொள்வானென்கிற நம்பிக்கையுடன் ஏலம் போடுகிற சீர்திருத்தக்காரர்களையும் விட்டால் நம் தேசத்து நாரீமணிகளுக்குச் சுதந்திரந்தான் ஏது? இன்று இவ்வளவோடு இருக்கட்டும். நாம் சுவாமி தெரிசனம் செய்துகொண்டு வீடுசெல்வோமென்று எழுந்தார்.

மற்றவர்களும், பேஷ்! என்னமோ ஆரம்பித்துக் கடைசியில் என்னமாகவோ ஒருவிதமாகச் சீர்திருத்த லெச்சரில் முடிவடைந்ததென்று பேசிக்கொண்டே சென்றார்கள்.

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறையே.

# திருமுறைப் பெருமை

சிவபெருமானுடைய திருவருளைப் பெற்ற திருஞானசம்பந்த சுவாமிகள் முதலிய உண்மைநாயன்மாராற் றிருவாய் மலர்ந்தருளப்பெற்றனவும், வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத்திறனைத் தெரிவிப்பனவும் ஆகிய தேவாரம் முதல் திருத்தொண்டர் புராணம் இறுதியாயுள்ள திருப்பாடல்களே திருமுறை எனப்படும். அவை பன்னிரு திருமுறையாகப் பகுக்கப்பட்டுள்ள. திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த தேவாரம் முதன்மூன்று திருமுறையும், திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த தேவாரம் பின்மூன்று திருமுறையும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரம் எழாந் திருமுறையும், மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த திருவாசகம் திருக்கோவையார் என்னுமிரண்டும் எட்டாந் திருமுறையும், திருமாளிகைத்தேவர் முதலிய ஒன்பதின்பர் அருளிச்செய்த திருவிசைப்பாவும் அவருட் சேந்தனுர் அருளிச் செய்த திருப்பல்லாண்டும் ஒன்பதாந் திருமுறையும், திருமூல நாயனுர் அருளிச்செய்த திருமந்திரம் பத்தாந் திருமுறையும், திருவாலவாயுடைய சிவபிரான் முதலாயினோர் அருளிச்செய்த திருமுகப்பாசுரம் முதல் நாற்பது பிரபந்தங்களும் பதினொராந் திருமுறையும், சேக்கிழார்நாயனுர் அருளிச்செய்த திருத் தொண்டர் புராணம் பன்னிரண்டாந் திருமுறையுமாம்.

தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா திருப்பல்லாண்டு, திருமந்திரம், திருமுகப்பாசுரம் முதலிய பிரபந்தம் என்னுமிவைகளை அபயகுலசேகர சோழ மகாராசா வேண்டுதல்செய்ய, பொல்லாப்பிள்ளையாருடைய அனுக்கிரகத்தைப் பெற்ற நம்பியாண்டார்நம்பி மந்திரங்கள் பதினொன்றுதல் பற்றி, பதினொரு திருமுறைகளாக வகுத்தருளினுர். திருத்தொண்டர்புராணம் அநபாயசோழமகாராசா

காலத்தில் பன்னிரண்டாந்திருமுறையாக வகுத்தருளப் பட்டது.

இத்திருமுறைகள் திருஞானசம்பந்த சுவாமிகள் முதலிய நாயன்மாரால் கூறியருளப்பட்டதாயினும், சிவபெருமானே அவர்களை அதிட்டித்துநின்று அவைகளைத் தோற்றுவித்த லால், அவை சிவபெருமானால் இயற்றியருளப்பட்டனவேயாம். பேய் பிடித்தவன் வாய்ச்சொற்களெல்லாம் பேயின் சொற்க ளேயன்றி அவன்சொற்களாகாதவாறு போலச் சிவபெருமா னால் அதிட்டிக்கப்பட்ட நாயன்மார் கூறியருளிய திரு முறைகளெல்லாம் அச்சிவபெருமான் திருவாக்கேயாம்.

அருகசமயமும் புத்தசமயமும் எல்லாவிடங்களிலுந் தலைப்பட்டுச் சைவங் குன்றிய அக்காலத்தில் தேவார முதலிய திருமுறைப் பாக்களே அப்புறச்சமயங்களை ஒட்டிச் சைவ சமயத்தை நாட்டியன. திருவிளையாடற்புராணத்திலே இடைக் காடனார் பிணக்குத்தீர்த்த படலத்திலே சொக்கநாதசுவாமி தமதடியவருள் ஒருவராகிய இடைக்காடனார் பாண்டியன் மீது பொருள் பெறவிரும்பிப் பாடிய பாக்களை அவன் சபை யில் அரங்கேற்ற, அவன் அதைச் சிறிது அவமதித்தமையைப் பொறுக்கமாட்டாது திருக்கோயிலை விட்டகன்று உத்தரமது ரையிலே போய் எழுந்தருளியிருந்தாரென்னுந் திவ்விய சரித்தி ரத்தினாலே, அவர் சிவாநுபூதிச்செல்வர்களாகிய சமயகுரவர் முதலாயினோர் தம்மீது பாடிய தேவார முதலிய திருமுறைகளை நாம் போற்றிப் புகழ்ந்து தமது திருக்கோயில் முதலியவற்றில் ஓதாமல் விடுவோமாயின் அதனைப் பொறுக்கமாட்டாரென் பதும், அங்கேவிளங்கி நின்று அருள்செய்யாரென்பதும் பெறப் படும்.

காமுகனானவன் தன் வாய்ச்சொல்லினும் தம்பால் விரும் பப்பட்ட காமக்கிழத்தியர் வாய்ச்சொல்லிலே மிகவும் பற்றுடை யனாய் மகிழ்ச்சி அடைவன். அதுபோலச் சிவபெருமானும் தமது வாய்ச்சொல்லாகிய வேதாகமங்களினுந் தம்மால் விரும் பப்பட்ட அடியவர் வாய்ச்சொல்லாகிய தேவார முதலிய திரு முறைகளிலே மிகவும் பற்றுடையராய் மகிழ்ச்சி அடைவர்.

இத்திருமுறைகள் ஆன்மாக்களுக்குப் பிறவிப்பிணி தீர்த்து மோக்ஷத்தைக் கொடுக்கவல்லன. தமிழ்மறையிலுள்ள திருப்பதிகங்களை அத்தியயனம் பண்ணும் பலன்கள் அவ்வப்பதிகங்களினிடத்தே உரைத்தருளப்பட்டன.

பன்னிரு திருமுறைகளும் பன்னிரு மந்திர நிரைப்பொருளாகலானும், முத்தமிழ் விரவியன ஆகலானும், ஒன்றிரண்டென வகுக்கப்பட்டன ஆகலானுந் தொடர்ச்சியுடையன. திருமுறைகளை அம்முறைக்கிரமமாகவன்றி மாறி ஓதுதல் குற்றமாம். புராணம் ஓதி முடிந்து பின்னர்த் தேவாரம் ஓதத் தொடங்குதலும், இதுபோலவே மாறிமாறி ஓதுதல் செய்வதும் கூடாவாம். பன்னிரு திருமுறைகளையும் விதிப்படி ஓதுகின்றவர்களைச் சிவபெருமானாகவே பாவித்தல்வேண்டும். திருமுறை ஓதுபவர்கள் மதுமாமிசபக்ஷணமில்லாதவராய், சைவாசாரமுடையவராய், சிவதீக்ஷைபெற்றவராய், விபூதி ருத்திராக்ஷதாரணமுடையவராய் இருத்தல் வேண்டும். இன்னுமவர்கள் இலக்கிய இலக்கணங்களிலும் சித்தாந்தசாத்திரங்களிலும் வல்லவராயும் சிவபக்தி சிவனடியார்பக்தி திருமுறைப்பக்தி உடையவராயும் இருத்தல்வேண்டும்.

இவ்வியல்பினரல்லாதவர், பண்வழிப் பாடாது தாம்நினைத்தபடி எல்லாம் பாடுவோர், சிவதீக்ஷையில்லாதவர், சிவசின்னமில்லாதவர், சிவநிந்தகர், திருமுறைகளை ஓதும்போது அதற்கு முன்னும் பின்னும் இடையினும் வேறு பாடல்களைப் பாடுவோர், ஆசாரமில்லாதவர் என்னுமிவர்களும் இவைபோன்ற குற்றமுடையவர்களும் திருமுறைகளைத் தீண்டுதற்கும் அதிகாரிகள் அல்லர்.

திருமுறைகளை மெய்யன்புடன் ஓதுபவர்களும், ஓதுவிப்பவர்களும், கேட்கிறவர்களும், ஆன்மார்த்தபூசையாகப் பூசிக்கின்றவர்களும் சிவனடியாராகிய சிவபத்தரென்று சொல்லப்படுவார். திருஞானசம்பந்த சுவாமிகள் "பந்தமார் தமிழ் பத்தும் வல்லார் பத்தராகுவரே" "பயில்வோடு கற்று வல்லவருலகினிலடியவரே" எனவும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் "இம்மாலை..........பாரூரும் பரவித்தொழவல்லார் பத்தராய்

முத்திதாம் பெறுவாரே" எனவும் திருவாய்மலர்ந்தருளினர் கள்.

திருமுறை ஓதுகிறவர் முற்கூறப்பட்ட இலக்கணமுடையவ ராய், ஒருவராவது பலர் சேர்ந்தாவது ஓதக்கடவர். பாடும் பொழுது உடற்றொழிற்குற்றம், பாடுந்தொழிற்குற்றம், பண்குற் றம், எழுத்துப்பிழை, சொற்பிழை, பொருட்பிழை, ஓதும் வரி சைப் பிறழ்ச்சி என்னும் குற்றம் வராதபடி பாடுதல்வேண்டும். துவட்டா என்பவன் எழுத்தொலி பிறழ வுச்சரித்து யாகம் புரிந்தமையால் இந்திரனாற் றலை அறுப்புண்டான். இந்திரன் பிரமகத்திநோயால் வருந்தினன். அத்தன்மை போல இக்குற் றம் நிகழின் ஓதுவோர் ஓதுவித்தோருக்குப் பெருந்துன்பம் நேரிடும்.

திருமுறைகளை யோதும்போது வேறொன்றையும்ஒதல் கூடாது. சிலர் தேவாரம் முதலிய திருமுறைகளை யோதுங் காலத்தில் திருப்பாசுரத்திலில்லாத மொழிகளைச் சேர்த்துக் கூறுகின்றார்கள். அதற்கு உதாரணமாக, "வடிவுடை மழு வேந்தி—மதகரி யுரிபோர்த்து" என்று ஓதற்பாலதை "வடி வுடை மழுவேந்தி (சம்போ! சங்கரா!) மதகரி யுரிபோர்த்து (வாமதேவா)" என்று பாடுகிறார்கள். அது குற்றமும் பாவமு மாம். அச்சொற்கள் சிவநாமங்களாயினுமாகுக; இவற்றாற் கேட்போர்க்குப் பத்தி விளையினும் விளைக; அப்படிக் கூறுதல் தகாதென்பதே ஆன்றோர் கொள்கை. எதற்காகவெனில், ஒரு பதங் கூடினும் சந்தபங்க முதலியன உண்டாகும்.

திருமுறையோதுங் காலத்தில் சிலர் சட்டையிட்டுக்கொண் டும், போர்த்துக்கொண்டும், சிரித்துக்கொண்டும், கால்களை நீட் டிக்கொண்டும், ஆலயங்களும் மூர்த்திகளும் கீழிருப்பத் தாம் மேல்மாளிகையில் இருந்துகொண்டும், உத்தரீயம் இட்டுக் கொண்டும், பிறகதைகளை இடையிடையே பேசிக்கொண்டும் ஓதுதலும் கேட்டலும் கூடாது. திருமுறையை ஓதுவதற்கு முன்னர்க் கிழக்கு முகமாகவேனும் வடக்கு முகமாகவேனும் உட்கார்ந்து விநாயகரைத் தியானித்து, சிவபிரானையும், உமா தேவியாரையும், சமயாசாரியர்களையும் சிந்தித்து, ஒவ்வொரு

திருப்பாட்டின் முதலினும் முடிவினும் "திருச்சிற்றம்பலம்" என்று சொல்லுதல்வேண்டும். விநாயகரைத் துதிக்கவேண்டு மேல் "பிடியதனுருவுமை கொளமிகு கரியது" என்பது முதலாகிய விநாயகரை உரைத்த திருப்பதிகங்களைக்கூறி, அப்பால் திருஞானசம்பந்தசுவாமிகள் பதிகங்களில் எத்தனை பாராயணம் பண்ணவேண்டுமோ அது செய்து, திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசக சுவாமிகள் முதலாயினோர் திருப்பாசுரங்களைப் பாராயணம் செய்து, பெரிய புராணம் சொல்லி முடித்தல்வேண்டும்.

சுப்பிரமணிய ஆலயமாயிருந்தால் கந்தசுவாமியைப்பற்றிக் கூறும் தேவாரங்களையும், வீரபத்திராலயமாயிருந்தால் தக்ஷ யாக சம்மாரம்பற்றிக் கூறும் திருப்பாக்களையும், உமாதேவியார் சந்நிதானமாயிருப்பின் அவரைப்பற்றி விதந்துகூறிய திருப் பாடல்களையும் சொல்லுதல்வேண்டும். திருமுறையோதுங் காலத்திலே கேட்பவர் எல்லோரும் பயபக்தியுடன் சப்பாணியில் இருந்து கையிரண்டையும் மார்பில் மாறிக் கட்டிக்கொண்டாவது அஞ்சலி செய்துகொண்டாவது இருத்தல் வேண்டும். பாராயணம் செய்வோர் 'நமப்பார்வதீபதயே" என்று கூறிய பொழுது "ஹரஹரமஹாதேவா" என்று உச்சரித்தல்வேண்டும். "சிற்சபேசா" என்று கூறியபொழுது "சிவசிதம்பரம்" என்று சொல்லுதல்வேண்டும். தேவாரம் முதல் பெரியபுராணம் இறுதியாகிய திருமுறைகள் ஓதப்பட்ட பின்பன்றி நிறுத்தலும், பிறவிடயங்களைச் செய்தலும், சபையைவிட்டுப் போதலும் கூடாவாம்.

சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள்செய்யும் தாவரமாகிய சிவலிங்கம் முதலியமூர்த்திகள், சங்கமமாகிய சிவனடியார் திருவேடம் என்னுமிவை விசேடித்தன. திருமுறைத் திருவருட்பாக்கள் தாவர சங்கமப் பொருள்களையும் அவற்றிலிருந்து அருள்செய்யும் சிவபெருமானையும் அடக்கிநிற்றலின் மிக மிக விசேடித்தன. எல்லாவற்றையும் அடக்கிநிற்கும் சிவபெருமானையும் தமது இருதயத்தில் அடக்கிநிற்பவர் ஆதலின் தொண்டர்கள் யாரினும் பெரியவர். நாவல் மரத்தில் எழுந்

தருளியிருந்த சுப்பிரமணியசுவாமி தெய்வப்புலமை ஒளவை யாரை நோக்கி, "பெரியது யாது?" என வினவியதற்கு

பெரியது கேட்கி னெரிதவழ் வேலோய்!
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமா லுந்தி வந்தோன்
கரிய மாலோ வலைகடற் றுயின்றோ
னலைகடல் குறுமுனி யங்கையி லடக்கங்
குறுமுனி யோகல சத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ வரவினுக் கொருதலைப் பார
மரவோ வுமையவள் சிறுவிரன் மோதிர
முமையோ விறைவர் பாகத் தொடுக்க
மிறைவரோ தொண்ட ருள்ளத் தொடுக்கந்
தொண்டர்தம் பெருமையைச் சொல்லவும் பெரிதே.

என்று விடை கூறியதனால் அறியப்படும். எல்லாவற்றையுந் தம்முள் அடக்கிநிற்கும் சிவபெருமானையுந் தம்முளடக்கிநின்ற திருத்தொண்டர்களையும் தம்மகத்தடக்கி நிற்றலால் பன்னிரு திருமுறைப் பெருமை பகர்தற்கரிது.

பன்னிரு திருமுறைகள் சிவபெருமானையும் விநாயகர் முதலிய மூர்த்திகளையும் சமயாசாரிய சுவாமிகள் சண்டேசுரர் முதலிய நாயன்மார்களையும் அடக்கிநிற்றலானும், சொல்லும் பொருளும் சிவமும் சத்தியுமாமென்று கூறப்படுதலினாலும், திருமுறைகளைப் பூஜித்தவர், சிவபெருமான் விநாயகர் சமயாசாரியர் முதலியோரைப் பூஜித்தவராவார். இவர்களெல்லோருக்குந் தனித்தனி பூசை செய்ய இயலாதவர் பன்னிரு திருமுறைகட்கும் பூசையும் விழாவும் செய்யக்கடவர். அது அவர்கட்குப் பூசை விழாக்கள் செய்ததாய் முடிதலையன்றிக் கோடி சிவலிங்கப் பிரதிட்டை செய்ததாயும் முடியும். அநேக கோடி கற்பகாலம் போகங்களை அநுபவிக்கச் செய்து சிவ சாயுச்சியத்தையும் அவர்கட்குக் கொடுக்கும். நித்திய நைமித்தியங்கட்கு ஏட்டுப் பிரதிகள் விசேடித்தன. அவை கிடையாவிடின் சுத்தமான கடிதப் புத்தகங்களை வாங்கிப் பூசிக்கக்கட

வர். அவ்வத் திருமுறை நாயன்மார் திருநக்ஷத்திரம் வருங் காலத்துத் திருமுறையையும் அந்நாயன்மாரையும் அலங்கரித்துத் திருவிழாச் செய்யவேண்டும். இவ்விதம் திருமுறைகட்குப் பூசை விழாக்கள் செய்துவரின் உலகிற் றுன்பமில்லை; கன்னம், களவு முதலிய பயங்கள் நீங்கும்; நன்மையெல்லாம் விளையும்; சிவலோகத்தினிதிருந்து வாழ்வர். இது சுப்பிரமணியக்கடவுள் அகத்தியமுனிவருக்கு உபதேசித்தருளிய சிவதருமோத்தரத்தான் உணரப்படும்.

---

# நூற் குறிப்பு

## கைலாயமாலை

கைலாயமாலை என்னும் இந்நூல் சோழமண்டலத்து உறையூர் முத்துராசக்கவிராசர் என்னும் புலவரால் இயற்றப்பட்டது. இது யாழ்ப்பாணத்து நல்லூர்க் கைலாயநாதசுவாமிகோயில் கட்டிப் பிரதிட்டைசெய்யப்பட்ட வரலாற்றைக் கூறுமுகத்தால் யாழ்ப்பாணப் பூர்வ சரித்திரத்தையும் உணர்த்துகின்றது. இதன் மூலபாடம் மட்டும் தமிழ்ப் புலவரும் சைவப்பெருந்தகையாருமாகிய ஸ்ரீமத் த. கைலாசபிள்ளை அவர்களால்பல வருஷங்களுக்கு முன்னர்ப்பதிப்பிக்கப்பட்டது. அப்பிரதிகள் இப்பொழுது கிடைத்தற் கரியனவாய்விட்டமையின், ஸ்ரீமான் முதலியார் செ. இராசநாயகம் அவர்கள் எழுதிய ஆராய்ச்சி முன்னுரை, தெல்லிப்பழை ஸ்ரீமதி க. இராஜராஜேசுவரி அம்மையார் எழுதிய வரலாறு அரும்பதவிளக்கம், காலஞ்சென்ற ஸ்ரீ ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை எழுதி வெளியிட்ட ஆங்கில மொழிபெயர்ப்பு என்பவற்றுடன் இப்புதிய பதிப்பை வெளியிட்ட பெருந்தகையார் தமிழ் அறிஞரும், சைவாபிமானியும், பலநூற் பதிப்பாசிரியரும், சைவநூற் பதிப்பு விஷயத்தில் எமக்கு உதவிசெய்துவருபவருமாகிய ஸ்ரீமாந் சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை அவர்களாவர். தமிழன்பர்களும், சைவமெய்யன்பர்களும் இவர்களது பதிப்பு நூல்களை வாங்கிப் படித்து ஊக்கமளிப்பார்களென்று நம்புகிறேன். விலை அணா 6

கிடைக்குமிடம் :—சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை,
20, காரணேசுரர்கோயில் தெரு,
மைலாப்பூர், சென்னை.

## கிருத்திரிமாலங்கார நிரூபணம்

இது மாயவரம் சிவாகமபாடசாலை உபாத்தியாயர் சிவஸ்ரீ முத்தையா சிவாசாரியர் அவர்களால் வசனரத்னவளி ஆலயப்பிராயச்சித்தத்திலிருந்து எடுக்கப்பட்டு, ஆச்சாள்புரம் ஆகம பாடசாலை உபாத்தியாயர் வித்துவான் சிவஸ்ரீ வைத்தியநாத சிவாசாரியர் அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, சென்னை, பாடி ஸ்ரீ திருநாவுக்கரசு முதலியாராற் பதிப்பிக்கப்பட்டது. உற்சவ காலங்களில் மனம்போனபடி மூர்த்திகளைச் சாத்துக்கை, சாத்துக்கால், பழந்துணி முதலியவற்றால் அலங்கரிப்பின் பலவித தோஷமுண்டாகுமென்று பல ஆகமப் பிராமணங்களால் தெளிவாய் விளக்குவது இப்புத்தகம். இது ஆலய தருமகர்த்தர், சிவாசாரியர் ஒவ்வொருவரது கையிலும் அவசியம் இருக்கவேண்டியது.

## பலாகா க்ஷேத்ர மஹாத்மியம்

என்னும்

## திருநாரையூர்ப் புராணம் வடமொழி மூலம்

பரமசிவன் பொல்லாப்பிள்ளையார் என வழங்கும் சுயம்பு விநாயக மூர்த்தியாகவும், பலாகேசர் என்னும் சிவலிங்கமூர்த்தியாகவும் எழுந்தருளியிருந்து மெய்யன்பர்களுக்கு அருள்செய்த சரித்திரங்களை விரித்துரைப்பது இத்திருநாரையூர்ப்புராணம். இச்சிறந்த தல புராணம் காரைக்குடி ஸ்ரீ மாந் ப. ராம. லெ. ராம. லெட்சுமண செட்டியார் அவர்களும், கோட்டையூர் ஸ்ரீ மத் க. வீ. சொ. அழகப்பச் செட்டியார் அவர்களும் ஆஞ்ஞைசெய்தபடி, திருநாரையூர் ரா. முத்துக்குமாரப்பிள்ளையால் அச்சிடப்பட்டுள்ளது. பரிசோதித்து உதவியவர் பிரம்மஸ்ரீ போலகம் ஸ்ரீ ராமசாஸ்திரிகளாவர்.

## ஷை தமிழ் மொழிபெயர்ப்பு

இதுவும் ஷை பிரபுக்கள் உத்தரவுப்படி, ஸ்ரீ ரா. முத்துக்குமாரப் பிள்ளையால் அச்சிடப்பட்டது. மொழிபெயர்த்தவர் பிரம்மஸ்ரீ N. கிருஷ்ணமூர்த்தி ஐயர் அவர்கள். வடமொழிமூலத்தோடு மொழிபெயர்ப்பை ஒப்புநோக்கிச் செம்மை செய்தவர் சூரியனார்கோயிலாதீனம் ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரத்தம்பிரான் சுவாமிகளாவர். இம்மொழிபெயர்ப்பு கற்றோர்க்கும் மற்றோர்க்கும் பயன்படு முறையில் இனிய வசன நடையில் அமைந்துள்ளது.

---

# விரதம்

[மாவிட்டபுரம் சிவஸ்ரீ ஸா. குமாரஸ்வாமிக்குருக்களவர்கள் எழுதியது.]

தவம், விரதம், உபவாசம், நோன்பு என்பன ஒருபொருட் சொற்கள். "அருந்தவ மாற்றிடாதவர்க் கில்லையே யிருமையு மின்பம்" எனவும், "எவ்வகைப் பொருள்களு மீய வல்லது செவ்விய தவமதே தெரியின் வேறிலை" எனவும் புராணங்கள் கூறுகின்றன. ஆதலால், பெறுதற்கரிய யாக்கையைப் பெற்ற சைவநன்மக்கள் சிவவிரதங்களை யனுட்டித்து இம்மை மறுமைச் சுகங்களைப் பெற்றுக்கொள்ளவேண்டும்; அல்லாதார் "சொல் லரும் பிறவியுட் டுன்பத் தாழுவார்" என்பது திண்ணம்.

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள் சைவவினாவிடையில் விரதவியலில் சிவவிரதங்களைச் சுருக்கி விளக்கியிருக்கின்றார்கள். அப்புத்தகத்தை வாங்கிப் படிக்குஞ் சைவமாணவர்தாமுஞ் சிலரே யெனல் மிகையாகாது; அவற்றையே இயன்றவரை விரித்து விளக்குகின்றோம்.

விரதமாவது, மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு உணவை விடுத்தேனும் சுருக்கியேனும் மனம் வாக்கு காயம் என்னும் மூன்றினாலும் கடவுளை விதிப்படி மெய்யன் போடு விசேஷமாக வழிபடுதலாம்.

திரிகரணசுத்தியோடு செய்யும் வழிபாட்டினையே கடவுள் ஏற்று அருள்புரிவார்.

"மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
வினமலர் கையிற் கொண்டிங் கிச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானால் யார்க்கும்
முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்குமுன் னிலையா மன்றே."

என்பது அருணந்திதேவரருளிய திருவாக்கு.

"கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன்றெண்ண
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூசையெவ் வாறுகொள் வாய்வினை தீர்ப்பவனே."

என்பதனால் ஒருப்படா வழிபாடு உருப்படாதாகுமன்றோ?

"உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலாற்
கள்ளமுள்ள வருக்கருள் வானலன்"

என்பது தமிழ்மறை. ஆகவே, மனவொருப்பாட்டோடு செய்யும் வழிபாடு சிறந்ததாகும்.

விரதம் அனுட்டிப்பவர் காமம், கோபம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் ஆகிய ஆறு குற்றங்களையும் பற்றறக் களைந்து விடவேண்டும்; தவறாது வைகறையில் நித்திரை விட்டெழுதல் வேண்டும்; அவசிய கருமங்களை முடித்து, புண்ணியதீர்த்தத்தை யடைந்து, விபூதி, வில்வத்தடிமண், தருப்பை, கோமயம், எள்ளு என்பவைகளைச் சிரசிலே வைத்துக் கையிலே பவித்திரஞ் சேர்த்திச் சங்கற்பித்து, ஸ்நானஞ் செய்து, தியானம், செபம், பூசை, ஆலய தரிசனம், பிரதக்ஷிணம், புராணசிரவணம் முதலியன விசேஷமாகச் செய்தல்வேண்டும். போசனஞ் செய்யுமிடத்துச் சிவனடியா ரொருவரோடாயினும் போசனஞ் செய்தல்வேண்டும். நித்திரை செய்யுமிடத்து, இரவிலே கோமயத்தினால் மெழுகப்பட்ட இடத்திலே, தருப்பையின்மேல் கடவுளைத் தியானித்துக்கொண்டு நித்திரைசெய்து, வைகறையில் எழுந்துவிடல்வேண்டும். உணவை விடுத்து விரதம் அநுட்டிப்பவர் அத்தினத்துக்கு முதனாள் ஒருபோது பிற்பகலிற் போசனஞ்செய்யக்கடவர்; அவ்விரததினத்துக்கு மற்றைநாட்காலையில் நித்தியகருமானுஷ்டானங்களை முடித்து, அடியார்க்கு அன்னமளித்து, ஆறுநாழிகையினுள்ளே சுற்றத்தாரோடு பாரணம் பண்ணக்கடவர். பாரணம் பண்ணியபின் பகலிலே நித்திரைசெய்தலாகாது; சிவபுராண சிரவணஞ் செய்து கொண்டிருத்தல் வேண்டும்; நித்திரைசெய்தவர் காரணமின்றி நூறு சற்பிராமணரைக் கொன்ற கடும் பாதகத்தை அடைவர் என்பர்.

**சிவவிரதம்:** சோமவாரவிரதம், திருவாதிரைவிரதம், உமாமகேசுரவிரதம், சிவராத்திரிவிரதம், கேதாரவிரதம், கலியாண சுந்தரவிரதம், சூலவிரதம், இடபவிரதம் என எட்டாம். பிரதோஷவிரதமுஞ் சிவவிரதமாம்.

**தேவிவிரதம்:** சுக்கிரவாரவிரதம், ஐப்பசியுத்தரவிரதம், நவராத்திரிவிரதம் என மூன்றும்.

**விநாயகவிரதம்:** சுக்கிரவாரவிரதம், விநாயகசதுர்த்திவிரதம், விநாயகஷஷ்டிவிரதம் என மூன்றும்.

**சுப்பிரமணியவிரதம்:** சுக்கிரவாரவிரதம், கார்த்திகை விரதம், கந்தசட்டிவிரதம் என மூன்றும்.

**வைரவவிரதம்:** மங்கலவாரவிரதம், சித்திரைப்பரணி விரதம், ஐப்பசிப்பரணிவிரதம் என மூன்றும்.

**வீரபத்திரவிரதம்:** மங்கலவாரவிரதம் என ஒன்றேயாம்.

பிரமாணம்:

**உபதேசகாண்டம்சிவவிரதமான்மியச் சருக்கம்**

"தொல்லையவல்வினைகழித்துத்தருஞ்சோமவாரமாதிரைநோன் பன்றிப்
புல்லியவுமாமகேச்சுரம்சிவராத்திரிமுறையிற்பொருந்தநோற்கப்
பல்வினையுந்தொலைத்திடுகேதாரமணவிரதமிவைபரமனோன்பு
கொல்லுறுசூலவிடைவிரதமெனுமெட்டுஞ்சிவவிரதங்குணிக்குங் காலே.'

"சித்திரைபூரணைப்பக்கஞ்சுக்கிரவாரம்பயில்வார்தீமைதீர்த்து
முத்திதருமைப்பசியுத்திரத்தொடுமோநவமியிவைமூன்றும்பச்சைத்
தத்தைமொழியுமைவிரதந்தந்திமுகன்விரதம்வெள்ளிசதுர்த்தியன்றி
யொத்துறுமார்கழிசட்டியிவைமூன்றுமாங்கவனுக்குரியநோன்பே."

"ஐப்பசிவெள்ளிக்கிழமைகார்த்திகைகார்த்திகைச்சட்டியனைய மூன்றுங்
கொற்படுவேற்றனிக்குமரமுருகவேள்விரதம்வெய்யோன்குலவுதை
சொற்படுஞாயிறுசித்திரைப்பரணியைப்பசியிற்றொருத்தவர்நா [யிற்
ளுற்பவிக்குமிவைமூன்றும்வைரவற்குற்றிடுவிரதமுரைக்கின் மன்னே."

"பரித்திடுசெவ்வாய்விரதந்திறல்வீரபத்திரர்க்குப்பகுத்தநோன்பு."

முற்கூறிய விரதங்களை அநுட்டித்தவர்கள் இந்நிலவுலகத்திற் பெருநிதிச்செல்வராய் ஒக்கலோடும் மக்களோடும் வெகுகாலமிருந்து நலன்களை யனுபவித்து ஈற்றில் சிவபெருமான் எழுந்தருளியிருக்குங் கைலாயத்தை யடைவார்கள்.

"தெரித்தவரன்முறைநோற்றோரிருநிலத்துப்பெருநிதியச்செல்வராகி
விரித்தபெருங்கிளைகளொடுமக்களோடுநலநுகர்ந்து மிகுநாள்வைகிப்
புரித்தபெருஞ்சடைப்பெருமான்றிருக்கைலைபுகுந்துகதிபுகுதுவரால்."
என்பதனால் அறிக.

முற்கூறிய சிவவிரதங்களுள் முதற்கண்ணதாகிய சோமவார விரதத்தை யுரைப்பாம்.

## 1. சோமவார விரதம்

கார்த்திகைமாதத்து முதற் சோமவாரந் தொடங்கிச் சோமவாரந்தோறும் சிவபெருமானைக் குறித்து அநுட்டிக்கும் விரதமாம். உணவின்றியிருத்தல் உத்தமம். ஒருபோது இரவிற் போசனஞ்செய்தல் மத்திமம். இவ்விரதத்தை வாழ்நாள்

அளவாயினும் பன்னிரண்டுவருஷம், மூன்றுவருஷம், ஒருவருஷ காலமாயினும் அநுட்டித்தல்வேண்டும். பன்னிரண்டுமாதமும் அநுட்டிக்க இயலாதவர் கார்த்திகைமாதத்தின் மாத்திரமாவது அநுட்டிக்கக்கடவர்.

**உபதேசகாண்டம் சிவவிரதமான்மியச் சருக்கம்**

'ஈங்கிவை நோற்றிடுமுறைமையின்ன பரிசெனவிசைத்துமினிது கேண்மின்
ஓங்கியசந்திரவாரங்கார்த்திகைத்திங்களிற்றொடங்கவுதயகாலம்
வீங்குபுனற்குடைந்துமுன்னர்க்குறைமுடித்துச்சிவபூசைவிருப்பிற் செய்து
பாங்கொர்மறையவனையன்னான்பன்னியையுமுடனழைத்துப்பரிந்து போற்றி

எனவும்

"அன்னவனைச்சிவனாகப்பாவித்தாங்கவளை உமையாகப்பாவித்து
உன்னருந்தண்டுலமுதலகொடுத்துத்தானொருபோது நுகரவேண்டும்
மன்னுகதிர்மறைந்தருந்தின்மிகநன்றுசிவபூசைவரம்பிலாதார்
முன்னுரைத்தவழிமுயன்றுசிவபரனாலயம்புகுந்துமுன்னின்றேத்தி"

"அரனுக்குப்பஞ்சவமிர்தத்தினாலபிடேகஞ்செய்வித்தந்த
வரனுக்குப்பன்மலரால்வழிபட்டுமறையவர்போசனமுநல்கிப்
பரனைச்சேவித்தொருபோதுண்கினுமுபவாசம்பயின்றுமற்றை
யிரவிற்கண்டுயிலினுமாமிப்படிநோற்பவர்கைலையெய்துவாரே."

எனவும் கூறுவனவற்றாலறிக.

## 2. திருவாதிரை விரதம்

மார்கழிமாதத்துத் திருவாதிரைநட்சத்திரத்தில் சபாநாயகரைக் குறித்து அநுட்டிக்கும் விரதம். திருவாதிரை தினத்தன்று வைகறையில் நித்திரைவிட்டெழுந்து புண்ணிய தீர்த்தத்தில் ஆடி, நித்தியகருமானுட்டானங்களை முடித்து, திருக்கோவிலை யடைந்து, வலம் வந்து போற்றி, அபிஷேக நைவேத்திய பூசாத்திரவியங்கள் கொடுத்து, நெய்விளக்கேற்றி, ஈசனுக்கும் நடராசப்பெருமானுக்கும் பூசனையாற்றுவித்துத் தெரிசனஞ்செய்து, வீடுசேர்ந்து, சிவனடிமறவாச் சித்தத்தினராய் உணவு கொள்ளாது இருந்து விடியற்காலையில் எழுந்து நீராடி, நியமம் முடித்துச் சபாநாதரை வணங்கி, மறையவர்க்கு அன்னமளித்துப் பாரணம் செய்க. இவ்விரதத்தைச் சிதம்பர தலத்திலிருந்து அநுட்டிப்பவர்கள் தீராவினைகள் தீரப்பெற்று மேலாஞ் சிவகதியடைவார்கள்.

உபதேசகாண்டம்

ஆதிரை நோன்புள தென்ற றைந்தனந்
தீதற நோற்றிடு முறைமை செப்புகேம்
மேதகு மார்கழித் திங்கண் மேவரு
கோதறு மாதிரை குறுகும் வைகலின்;

காலையி லீசனைக் கருத்து ளோர்ந்துநற்
கோலநீ ராடிய பின்னர்க் கோதறு
வாலநீ றணிந்துசெய் மரபு நேர்ந்துசென்
றாலய மடைந்துசூழ்ந் தரனைப் போற்றியே

ஈசனுக் கருளபி டேகமேற்றுவித்
தாசினெய் வேத்தியக் காவ தீந்தவற்
கேசறு நெய்விளக் கேற்றி யீசனைப்
பூசனை யாற்றுவித் தகத்துப் போற்றியே,

இம்முறை தாண்டவேச் சுரற்கு மேய்ந்துபின்
செம்மையி னவனடி சிந்தை செய்துபோய்த்
தம்மனை புகுந்துண றவிர்ந்து வைகியே
வெம்மைவெங் கதிரெழும் விடியல் வைகலின்,

தெண்புனல் குடைந்துநீ றணிந்து செந்தழற்
கண்படு நுதலவற் பணிந்து கைதொழு
தெண்படு மறையவர்க் கடிசி லீந்துபின்
உண்பன பாரண முவந்து கொள்வரே.

செவ்வழிச் சின்மயச் சிதம்ப ரத்தலத்
திவ்வழி யிந்தநோன் பியற்று வாரவர்
வெவ்வழித் தன்மைய வினையி னீங்கிமற்
றுய்வழி யருங்கதி யொடுங்கு வார்களே.

என்பனவாம்.

## 3. உமாமகேசுர விரதம்

இது கார்த்திகைமாதத்துப் பூரணையிலன்று உமாமகேசுர மூர்த்தியைக் குறித்து அநுட்டிக்கப்படும் விரதம். இதனை அநுட்டிப்பவர் அன்று வைகறையிலெழுந்து நித்தியகடன்களை முறைப்படி முடித்து, இல்லத்தில் கோமயத்தினுல் மெழுகப் பட்டுக் கோலமிடப்பட்ட ஓரிடத்தில் நெல் பரப்பி, அதன்மேல் கலசம் வைத்து, திவ்விய சலம் பூரித்து, மாவிலை தேங்காய் கூர்ச்சம் வஸ்திரம் முதலிய தந்து, வெள்ளியாலாவது பொன்னினுலாவது செய்யப்பட்ட உமாதேவியோடு கூடிய சிவரூபத்தைப் பஞ்சகவ்வியம் முதலியவற்றுல் அபிடேகித்து,

அக்கும்பத்தில் வைத்து, சந்தனம் பூ அட்சதை முதலியன சாத்தித் தூபதீபங் காட்டி, அன்னம் பழம் தாம்பூலம் நிவேதித்து, கர்ப்பூர ஆராத்திசெய்து, மும்முறை வலம்வந்து பார்வதிபரமேசுரர்களை நமஸ்கரித்துப் பிரார்த்தனைசெய்து கொண்டு, திருக்கோவிலிற்சென்று முறைப்படி வழுத்தித் தியானித்துத் தம் வீடெய்திப்பகலில் ஒருபோது போசனஞ்செய்து கொள்ளல்வேண்டும். இரவு பணிகாரம், பால் உட்கொள்ளலாம். மற்றுநாட்காலை நீராடி, நியமம் முடித்து முதனாள் தாபித்த கும்பத்தையும் விம்பத்தையும் முன்போலப் பூசித்துப் போற்றிசெய்து, அவற்றைச் சற்பாத்திரமாயுள்ள வேதியர்க்குக் கொடுத்து, ஆசிபெற்றுச் சிவனடியாரோடு உண்ணக்கடவர். இப்படியே வருடந்தோறும் தவறாது நோற்றுவருபவர்கள் இவ்வுலகத்திற் சகல பாக்கியங்களோடும் வாழ்ந்துபின் தேவர்களேத்தப் பிறவாமுத்தி யெய்துவர்.

**பிரமாணம், உபதேசகாண்டம்**

"இத்திறந் திறம்புறா தியல்பி னேற்றவர்
புத்திர ரொடும்வளம் பொருந்தி வாழ்ந்துபின்
அத்தகை யவரொடு மமர ரேத்தப்போய்
முத்திசென் றடைந்தனர் முதல்வ ராகுவார்."

என்பது முதலியவற்றானறிக.

## 4. சிவராத்திரி விரதம்

இது மாசிமாதத்துப் பிறபக்கச் சதுர்த்தசித்திதியிலே சிவபெருமானைக் குறித்து அநுட்டிக்கப்படும் விரதம். இத்தினத்தில் உணவொழித்து, நித்திரையின்றி நான்கு யாமமுஞ் சிவபூசை செய்யக்கடவர். சிவபூசையில்லாதவர் நித்திரையின்றி ஸ்ரீ பஞ்சாக்ஷரசெபமும், புராணசிரவணமும், நான்கு யாமமுஞ் சிவாலயதெரிசனமுஞ் செய்தல்வேண்டும். இதில் உபவாசம் உத்தமம். நீரேனும் பாலேனும் உண்பது மத்திமம். பழம், பணிகாரம் உண்பது அதமம். நான்கு யாமமும் நித்திரை விழிக்க இயலாதவர் பதினன்கு நாழிகைக்கு மேல் வரும் லிங்கோற்பவகாலம் நீங்கும் வரையும் நித்திரையொழித்தல்வேண்டும். சைவசமயிகள் யாவராலும் அநுட்டிக்கட்டவேண்டிய விரதம் இஃதொன்றேயாம். இத்தினத்தில் சிவாலயத்தில் நெய்விளக்கேற்றுவது மிகப் பெரும்புண்ணியமாம்.

பிரமாணம், சிவராத்திரிபுராணம், உபதேசகாண்டம் ஆதியவற்றிற் பரக்கக் காண்க.

## 5. கேதார விரதம்

புரட்டாதிமாதச் சுக்கிலபக்ஷ அட்டமி முதல் கிருஷ்ணபக்கச் சதுர்த்தசியீறாகிய இருபத்தொருநாளாயினும், கிருஷ்ணபக்ஷப் பிரதமை முதல் சதுர்த்தசியீறாகிய பதினன்குநாளாயினும், அட்டமி முதல் சதுர்த்தசியீறாகிய ஏழுநாளாயினும், கிருஷ்ணபக்ஷச் சதுர்த்தசியாகிய ஒருநாளாயினும் கேதாரநாதரைக் குறித்து அநுட்டிக்கும் விரதமாம். இருபத்தோரிழையாலாகிய காப்பை ஆடவர்கள் வலக்கையிலும் பெண்கள் இடக்கையிலுங் கட்டிக்கொண்டு முதலிருபதுநாளும் ஒவ்வொருபொழுது போசனஞ்செய்து, இறுதிநாளாகிய சதுர்த்தசியிலே கும்பம் தாபித்துப் பூசித்துக் கேதாரநாதரை வணங்கி உபவசித்தல் வேண்டும். இயலாதவர் அக்கேதாரேசுவரருக்கு நிவேதித்த உப்பில்லாப் பணிகாரத்தை உண்ணக்கடவர். மறுநாட்காலை முறைப்படி பாரணம் புரிக.

**பிரமாணம்**

“உலகெடுத்தகேதாரமாமதன்பெயருலகம்
பலதொழும்புரட்டாதியிற்பூருவபக்கத்
தலகிலட்டமிமுதற்றொடுத்தருங்கலைகழியு
நிலவுவாவருமளவையுநோற்பதுநெறியே.”

என்பதாதி,

“முற்றுநோற்பவர்பெறுபயன்யாவரேபெறுவார்”

என்பதீறாகவுள்ள உபதேசகாண்டச் செய்யுட்களாலறிக.

## 6. கலியாணசுந்தர விரதம்

இது பங்குனி உத்தரத்தில் கலியாணசுந்தரமூர்த்தியைக் குறித்து அநுட்டிக்கும் விரதம். இதில் ஒருபொழுது இரவில் பரமான்னமும் பழமும் உட்கொள்ளவேண்டும்.

**பிரமாணம்**

“திருந்துபங்குனியுத்தரவைகலிற்சிறந்து
பொருந்துமாதொருபாகனைமணவணிபுரப்ப
விருந்துசிந்தனையிருத்தியீர்ம்புனல்குடைந்தேகி
வருந்தமக்குளவியதியைமுற்றுறவகுத்து,”

என்பதாதி,

"தெய்வநோன்பிதனிலைமையார்முடிவுறத்தெரிப்பார்"

என்பதீறாகவுள்ள செய்யுட்களாற் றெளிக.

## 7. சூல விரதம்

இது உத்தராயணத்துத் தைமாத அமாவாசையில் சூலப் படையினையுடைய சிவபெருமானைக் குறித்து அநுட்டிக்கும் விரதம். இதில் ஒருபோது பகலிலே போசனஞ் செய்தல் வேண்டும்.

**பிரமாணம்**

"ஆயிரப்பெருங்கதிரவன்றென்றிசையகன்று
பாயவுத்தரம்படர்முதற்றிங்களிற்பதினன்
கேயபிற்றையினிருங்கதிர்கரக்குநாளெழுந்து
தூயதண்புனல்குடைந்துதங்குறையெலாந்தொலைத்து,"

என்பது முதலாக,

"தேவராயினுமிருநிலஞ்சிறந்தவரெனினும்
யாவராயினுமிடையறாப்பெரும்பிணியினராய்ப்
பாவராயுழந்திதுமுறைநோற்பரேற்பயின்ற
நோவொழிந்துபின்னிருங்கதிப்பெருநலனுகர்வார்."

என்பதீறாகவுள்ள உபதேசகாண்டச் செய்யுட்களாலறிக.

## 8. இடப விரதம்

இது வைகாசிமாதத்துச் சுக்கிலபக்ஷ அட்டமியிலே இடப வாகனரூடராகிய சிவபெருமானைக் குறித்து அநுட்டிக்கும் விரதம். இதில் ஒருபொழுது பகலிலே போசனஞ் செய்தல் வேண்டும்.

பிரமாணம் :

**உபதேசகாண்டம்**

"இடபதிங்களிற்பூருவத்தட்டமியெதிரப்
படவராவணிபுனிதனைப்பனிவரைபயந்த
மடவனத்தினைப்பாய்விடைமேற்படமதியாக்
குடைநறும்புனல்புலரியினெழுந்துபோய்க்குடைந்து,"

என்பது முதல்

"பாற்கடற்றுயில்பண்ணவன்பங்கயத்திறைவன்
நாற்றிசைப்படுமெண்மர் வானடங்குறுங்கதிர்கள்
வீற்றுவேறுளதேவரிவ்விரதநோற்றன்றோ
போற்றருந்திறற்றெய்வவாகனத்தொடும்பொலிந்தார்."

என்பது வரையுமுள்ள செய்யுட்களாலறிக.

# சிறுவர் பகுதி

## சோமவார விரத மான்மியம்

[சிவஸ்ரீ கு. வைத்தீசுவரக்குருக்கள் அவர்கள் எழுதியது.]

ஆரியதேசத்திலே கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்தவனும் சிவபக்தனுமாகிய சித்திரவர்மன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன் சில புத்திரர்களைப் பெற்று, மகட்பேறில்லாமையால் அதற்காகத் தவம் செய்து ஒரு புத்திரியையும் பெற்றான். முதியோர் அவளுக்குச் சீமந்தனி என்று நாமதேயம் வைத்தார்கள். அரசன் "எனது புத்திரிக்குப் பலன்களை ஆராய்ந்து சாதகமெழுதுங்கள்" என்று சோதிடர்களுக்குக் கட்டளையிட்டான். ஒரு சோதிடன் "இவள் உலகம் புகழும்படி பதினாயிரம் வருஷம் கணவனைப் பிரியாமல் வாழ்ந்திருப்பாள்" என்று அரசனுக்குக் கூறினான். மற்றொரு சோதிடன் "பதினான்காம்வருடத்தில் மங்களிய மிழப்பாள்" என்று பலன் சொன்னான். வேந்தன் வினையின் வன்மையை அறிவேன் என்று சிந்தித்திருந்தான். அக்கன்னிகைக்கு மங்கைப் பருவம் வந்தது. பதினான்காம் வயசில் மங்கலியம் இழப்பாள் என்று சோதிடன் கூறியதை அறிந்து சீமந்தனி துன்பமடைந்தாள். யாக்கியவல்கியமுனிபன்னியாகிய மைத்திரை என்பவள் சீமந்தனியைத் தேற்றி, "சோமவாரத்தில் உமாமகேசுரர்களைப் பூசித்து, மாகேசுரபூசை செய்து விரதத்தை அனுட்டிப்பாயாக; அவ்விரத விசேடத்தால் உன்னுடைய மனக்கவலை நீங்கும்" என்று உபதேசித்தாள். அரசகுமாரி ஆகமவிதிப்படி சோமவார விரதம் அனுட்டித்து வருவாளாயினள்.

சித்திரவருமராஜன் தனது மகளாகிய சீமந்தனியை இந்திரசேனனுக்குப் புத்திரனும், நளமகாராசனுக்குப் பௌத்திரனுமாகிய சந்திராங்கதன் என்பவனுக்கு விவாகம் செய்து கொடுத்தான். அவர்கள் இருவரும் இல்லறத்தை நடாத்தி வந்தார்கள். ஒருநாள் சந்திராங்கதனும் அவனுடைய தோழர்கள் சிலரும் தோணியிலேறி யமுனாநதியிற் சென்றார்கள். திரை மிகுதியாய் வீசுதலினால் ஓடம் கவிழ்ந்தது. அத்தோணியில் இருந்த சந்திராங்கதனும் தோழர்களும் நீரில் அமிழ்ந்தினார்கள். சீமந்தனி தனது கணவன் நீரில் அமிழ்ந்தியமையைக் கேட்டுத் துயருற்றுப் புலம்பினாள். அவள் தன் பிதா தேற்ற ஒருவாறு தேறிப் பரமசிவனைத் தியானித்துக்கொண்டிருந்

தாள். தனது புத்திரனுடைய நிலைமையைக் கேட்டறிந்த இந்திரசேனனும் கவலைக்கடலுள் ஆழ்ந்தான். பகை அரசர் இவனை வெல்வதற்கு இதுவே சமயமென்று நால்வகைச் சேனையுடன் சென்று யுத்தம் செய்து, அரசனையும் அவன் மனைவியையும் பிடித்துச் சிறைவைத்தனர். இது நிற்க.

நீரில் அமிழ்ந்திய அரசகுமாரனது தோழர்களை முதலைகள் விழுங்கிவிட்டன. சந்திராங்கதன் முற்பிறப்பிற் செய்த நல்வினை செலுத்த ஒரு பிலத்துவார வழியாக நாக உலகத்தை அடைந்து ஒரு நதிக்கரையில் தோன்றினான். அவ்வாற்றில் ஸ்நானம்செய்துகொண்டு நின்ற நாகமாதர்கள் அவனை அழைத்துச் சென்று தங்கள் அரசனது முன்னிலையில் விட்டார்கள். நாகராசன் அரசகுமாரனது தேசம், குலம், பிதாவின் பெயர் ஆதியவற்றை வினாவினான். சந்திராங்கதன் தன்னுடைய வரன்முறைகளையெல்லாம் பணிவுடன் கூறினான். நாகராசன் "அரசனே! நீங்கள் வழிபடும் கடவுள் யாவர்?" என்றான். அரசகுமாரன் "முழுமுதற்கடவுளாகிய பரமசிவனே நாம் வணங்கும் கடவுள்" என்று செப்பி அவரது இலட்சணங்களையும் விளக்கமாகக் கூறினான். நாகவேந்தன் "நீ சிவபெருமானுடைய குணமகிமைகளைக் கூறினமையாற் சந்தோஷமடைந்தேன்; இந்த நாகலோகத்தில் இருப்பவர்களை நரை திரை மூப்புச் சாராது; நீ இவ்விடத்திற்றானே வாசமாயிரு" என்று சொன்னான். சந்திராங்கதன் சொல்வான் "என் பிதாவுக்கு என்னையன்றி வேறு புதல்வர் இல்லை; என் மனைவியும் சிறியவள். தோணி கவிழ நான் இறந்தேனென்று நினைத்து அப்போதே அவர்கள் இறந்தார்களோ அறியேன்; ஆதலால், என் ஊருக்குப் போவதற்கு உத்தரவு தரல்வேண்டும்" என்று வேண்டினான். நாகவேந்தன் சந்திராங்கதனுக்கு ஆடை, ஆபரணம், நிதி முதலியனவும், எவ்விடத்தும் சென்று திரும்பும் வலிமையுடைய ஒரு குதிரையும் கொடுத்து அனுப்பினான். நாகராஜனுடைய கட்டளைப்படி ஒரு இராக்கதன் அப்பொருள்களைச் சுமந்து சென்றான். ஒரு நாககுமாரன் வழித்துணையாகப் போயினான். அரசகுமாரன் குதிரையைச் செலுத்திக்கொண்டு நீர்மேலெழுந்து யமுனை ஆற்றங்கரையை அடைந்தான். அப்பொழுது ஸ்நானம் செய்வதற்கு அங்கே சென்ற சீமந்தனி

அவளைக் கண்டு மனங்கலங்கி நின்றாள். சந்திராங்கதன் "உன் கணவன் பிறிதோர் உலகத்திலிருக்கின்றான்; அவனுக்கு நான் சிநேகன்; இரண்டு நாட்களில் வந்து உன் துயரத்தை நீக்கு வான்" என்று வேகமாகப் போனான். சீமந்தனி தன் மாளிகையை அடைந்தாள்.

குதிரையிற் சென்ற இராசகுமாரன் நிடதநாட்டை அடைந்து, பகைமன்னன் செய்த தீமைகளையெல்லாம் அறிந்தான். அவன் தன்னுடன் வந்தவனாகிய நாககுமாரனைப் பகைமன்னனிடம் தூதாக அனுப்பினான். நாககுமாரன் பகைவரைக்கண்டு, "நாகவேந்தனிடம் வரங்களைப் பெற்ற சந்திராங்கதன் வந்திருக்கிறான்; அவனோடு சமர் செய்வது பேதைமையாகும். ஆதலால், அவனது தந்தையைச் சிறை நீக்கி அவன் தேசத்தையும் விட்டுப்போங்கள்" என்று சொன்னான். இவ்விதம் தூதுவன் செப்பியவற்றை அந்த மன்னர்கள் கேட்டு இந்திரசேனனைச் சிறை நீக்கித் தங்கள் தங்கள் நகரத்தை அடைந்தார்கள். சந்திராங்கதன் தாய்தந்தையர்களை அடைந்து வணங்கி நதியில் விழுந்தபின் நிகழ்ந்தவைகள் எல்லாவற்றையும் சொன்னான். அரசன் மகிழ்ந்து சித்திரவர்மனுக்கு அப்பொழுதே ஓலையெழுதி அனுப்பினான். சித்திரவர்மன் உடல் பூரித்துத் தன் புத்திரியைப் பார்த்து, "நீ சிவபெருமானுக்கு அருச்சனை செய்து விரதமனுட்டித்த புண்ணியத்தினால் உன் கணவன் உயிர் பிழைத்தான்" என்று சொல்லி மகிழ்ந்தான். தமது புத்திரியை அழைத்துக்கொண்டு நிடதநாட்டை அடைந்தான். இந்திரசேனன் அவர்களை உபசரித்தான். சீமந்தனிக்கும் சித்திராங்கதனுக்கும் நல்ல சுபமுகூர்த்தத்தில் மறுமணம் நிகழ்ந்தது. சித்திரவர்மன் மந்திரி முதலியோருடன் தமது நகரத்தை அடைந்தான். சந்திராங்கதன் சீமந்தனியுடன் வாழ்ந்திருந்தான்.

இந்திரசேனன் தனது மகனுக்கு மகுடம் தரித்து, அபிஷேகம் செய்துவைத்துவிட்டு, உலகபோகங்களை வெறுத்துத் தவஞ்செய்யப் போயினான். சந்திராங்கதன் எட்டுப் புத்திரர்களையும் ஒரு புத்திரியையும் பெற்றுச் செங்கோல் செலுத்தி இவ்வுலகத்தில் பதினாயிரம் வருஷம் இன்பமனுபவித்து வாழ்ந்திருந்தான்.

---

# கற்பனை விகடம்

"இராகு"

அநியாயபுரத்தின் மாகாணச் சட்டசபை அவசரமாக அர்த்த ராத்திரியின் பிற்பகுதி மணி 57—7-க்குக் கூடியது. ஏற்கனவே பிரதமமந்திரியால் அனுமதிக்கப்பட்டு, வைத்தீஸ்வர சர்மாவால் கொண்டு வரபட்ட சிவாலயச் சீர்திருத்த மசோதா ஆலோசனைக்கெடுத்துக் கொள்ளப்பட்டது.

**அதன் விபரம் :**

(1) ஆலயங்களிலே சாமியென்று சொல்லப்படுகிற கற்களுஞ் செம்புகளும் அசேதனமானதாகவிருக்க, அதற்கென்று தருமச் சொத்திலிருந்து அபிஷேக நைவேத்தியங்களென்று பெரும் பொருளைச் செலவிட வேண்டியிருப்பதால் அதிலுள்ள பேசாத சாமிகளை யெல்லாம் எடுத்து எறிந்துவிட்டு, பேசுந் தெய்வங்களான மந்திரிகளை அதிலிருந்து அலுவல் நடத்தும்படி செய்வதென்பது.

(2) தேவையிருந்தால் தர்ம பரிபாலனசபையை யோசனை கேட்டு மேற்படி கோயில்களின் சில பாகத்தையோ பூராவுமோ பிரித்து அந்தச் சாமான்களை ஏலம் போட்டுக் கிடைத்த ரூபாயையோ அந்தச் சாமான்களையோ உபயோகப்படுத்திப் பொதுஜனங்களுக்குச் சௌகரியமாக மியூசியம், ஹாஸ்டல் முதலானவைகளை ஏற்பாடு செய்தல் என்பது.

இதை வைத்தீஸ்வர சர்மா பிரேரிக்க, முசுகுந்த ஐயங்கார் ஆமோதித்துப் பேசினர்.

நாகூர்க்கண்ணி ராவுத்தர் சிவாலயச் சீர்திருத்தமென்கிற மசோதாவில், அதன் முக்கியாம்சமான சாமியென்கிற உருவத்தையே எடுத்தெறிந்துவிடுவதென்றிருப்பது சீர்திருத்தமாகாதென்று அழுத்தமாகக் கண்டித்தார்.

நடராஜமுதலியார் குறுக்கிட்டுப் பேசியதாவது: சிவஆலயச் சீர்திருத்த மசோதாவே தவிர, சிவாலயச் சாமி சீர்திருத்த மசோதா வல்ல வாதலால் உருவங்களை எடுப்பதில் ஆலயத்திற்கு ஒன்றும் கெடுதலில்லை. ஆதலால், சட்டம் நியாயமானதேயென்றும், சாமிகளை எடுத்தெறிந்துவிடுவதென்பதை, எறிந்துவிடாமல் மியூசியத்தில் வைத்தலென்று திருத்தலாமென்றும் யோசனை கூறினர்.

அந்தோனி நாடார் பேசியதாவது: இரண்டாவது பாராவில் கோயில்களையே பாதிக்கக்கூடிய கெடுதல்களிருப்பதால் அதை எடுத்து விடவேண்டுமென்றும், இந்த விதமான சட்டங்களை நிறைவேற்ற நாம் இங்கு வரவில்லையென்றும், நாம் ஒட்டுக்கு அலைந்து திரிந்து சந்திசிரித்த காலத்தில் ஜனங்களிடையே என்ன சொல்லி ஒட்டைப்

பெற்றேமென்று சற்று யோசித்துப் பார்ப்பது மனித கடமையென்றும் பேசினர்.

தாழ்த்தப்பட்டவர் தொகுதி பி. சொக்கலிங்கம் "சாமியை எடுப்பதென்பதும், கோயிலை இடிப்பதென்பதும், பொருத்தமும் அவசியமுமல்லாத விஷயம். கோயில் விஷயங்களை அந்த அந்த மதத்தவர்களே கவனித்துக் கொள்ளவேண்டுவதுதான் உசிதம். இது போன்றவைகளைச் சட்டசபையின் மூலம் திருத்துவதென்பதே முட்டாள்தனம். சுதந்திரத்திற்குப் பாடுபடுவதாகக் கூறிக்கொண்டிருக்கிற நாம், முதலில் மத சுதந்திரத்தில் கைவைப்பதென்பது எவ்வளவு பொருத்தமுடையது. மேலும், கோயில் விஷயங்களைக் கவனிக்கப் போர்டுமிருக்கிறது. ஆகையால், இந்தத் தீர்மானத்தைச் சர்மா வாபீஸ் வாங்கிக்கொள்வது நல்லதென்று தெரிகிறது" (ஆமாம்! ஆமாம்!)

எம். கே. முதலியார் "நண்பர் சொக்கலிங்கம் பேசியது ஒரு வகையில் நியாயந்தான். ஆனாலும், நாம் மதத்திலே பிரவேசிக்கிறதில்லையென்றிருந்தால் ஒருதரப்பார்கள், 'இவர்கள் சட்டசபை சென்று என்ன சாதித்து விட்டார்கள்? (மதவிஷயத்தில் என்று கேட்கிறார்கள் அல்லவா?) அதற்காகவேனும் ஏதாவது செய்து கொண்டுதான் இருக்கவேண்டும். எல்லோருமே (தாழ்த்தப்பட்டவர்களில்) பி. சொக்கலிங்கம் போன்ற மனப்பான்மை யுள்ளவர்களாய் இருப்பார்களா? என்பதே எனது கேள்வி.

பி. சொக்கலிங்கம்: முதலியார் பேசுவது பொருத்தமற்ற விஷயம். தாழ்த்தப்பட்டவர்கள் விஷயத்தில் சுகாதாரம், கல்வி, தொழில் உத்தியோகம் முதலியவைகளில் சர்க்காரும் சபைகளும் கவனம் செலுத்தினல் போதுமானது. தாழ்த்தப்பட்டவர்களைக் கோயிலுக்குள் தள்ளுவதாலும், கோயிலை இடிப்பதாலும், சாமியைப் பிடுங்குவதாலும் எங்களின் பசிதணிந்துவிடாது; பிணி தொலைந்துவிடாது; அறிவு வளர்ந்துவிடாது. சிலருக்குக் கர்வம் வேண்டுமானல் மண்டைக்கேறலாம். (பலே! பலே!)

சீ. தீக்ஷிதர் :-மிஸ்டர் சொக்கலிங்கம் பேசியது கோயில்களில் தங்களுக்கு ஒன்றுமில்லையே என்கிற கவலையாலேயே தவிர வேறொன்றுமில்லை. அதற்காக நாம் கோயில் விஷயங்களில் சிரத்தை எடுக்காமல் இருந்துவிடக் கூடாதென்று தக்க மேற்கோளுடன் பேசினர்.

தா. தொகுதி மாரிமுத்து பேசுகையில், தீக்ஷிதர் பேசியது ஒருவாறு உண்மைதானென்றும் ஆனல் தாங்கள் சீர்திருத்தத்தைப் பொது ஜனங்களிடையே தான் விரும்புவதாகவும், சட்டசபைமூலம்

மதச்சீர்திருத்தம் செய்வதை முற்றும் கண்டிப்பதாகவும், மற்றவர்களுக்கு ஏதாவது செய்துதான் ஆகவேண்டுமென்றிருந்தால் கோவிலுக்குள் உருவமில்லாமல் குழவிமாதிரியாக ஒரு சாமியிருக்கின்றதாம். ஆனால் நான் நேரில் பார்த்ததில்லை. (கொடுமை! கொடுமை!) சொல்லத்தான் கேள்வி. அதை வேண்டுமானால் எடுத்துவிட்டு நல்ல அழகாக ஒரு சிலையை அங்கு நடுகிறதென்று முதலாவது பாராவைத் திருத்தலாமென்றும், இரண்டாவது பாரா அறிவுஉள்ள பிராணிகளின் செயலுக்குப் பொருத்தமே இல்லாததால் அதை எடுத்துவிட வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

சொக்கலிங்கம் திரும்பவும், இம்மாதிரியான சட்டங்கள் சட்ட சபையில் நுழையவே கூடாதென்றும், அப்படி ஏற்பட்டால் அதன் பழி தாழ்த்தப்பட்டவர்கள் தலைச்சுமையாகிவிடுமென்றும், ஆனால், தான் பயத்தினாலோ வருத்தத்தினாலோ இப்படிக் கூறவில்லையென்றும், நீதியுடன் பேசுவதாகவே மற்றவர்கள் உணரவேண்டுமென்றும், மாரிமுத்து அருவம் உருவமென்று பேசியது சரியில்லையென்றும், தாழ்த்தப்பட்டவர்களே அருவமான மேடையிலும் சுக்குமாந்தடிகளிலும் அரிவாளிலும் செங்கற்களிலும் தெய்வவழிபாடு செய்யவில்லையா? என்றும் பேசிவிட்டு, சர்மா இத்தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொள்வதே புத்திசாலித்தனமென்றும் குறிப்பிட்டார். மேலும் அவர் பேசியதாவது: அவரவர்கள் கோயில்களை அவரவர்கள் கும்பிட்டால் போதுமானதென்றும், உள்ள சாமி கும்பிடவே நேரத்தைக் காணோம்; ஊருச் சாமி கும்பிடுவது எப்போ? என்றும், இராமகிருஷ்ணபரமஹம்ஸர் எல்லாரும் கும்பிடுஞ் சாமிகளும் ஒரே சாமிதான் என்றும், அவரவர்கள் வைத்திருக்கிற பெயரே வெவ்வேறென்றும் கூறியிருப்பதைச் சிந்திக்கவேண்டுமென்றும், பல எஜமான்களிடத்தில் ஒரு அடிமை வேலைபார்ப்பதைவிட ஒரே எஜமானிடத்தில் வேலைபார்ப்பதே கண்ணியமென்பதுபோலப் பல சாமிகளைக் கொள்வதைக் காட்டிலும் ஒரே சாமி கும்பிடுவதே மேலென்றும், இக் கருத்துக் கொண்டே வைணவக் குருக்கள்மார் முத்திராதானஞ் செய்தவுடன் சீடர்களிடத்தில் யானைவிரட்டினும் அரன்கோயில் புக்கேல் என்று உபதேசிக்கிறார்கள் என்றும், இவ்வுண்மைகளெல்லாம் உணராத் தன்மையினாலேதான் ஆலயப்பிரவேசப் பாதுகாப்புச்சட்டம் பிறந்ததென்றும் நீண்டதோர் பிரசங்கம் நடத்தினார்.

பிறகு வெகுநேரம்வரை வாபீஸ்வாங்கிக்கொள்ள வேண்டுமென்றும், திருத்தத்துடன் நிறைவேற்றவேண்டுமென்றும் விவாதம் நடந்த பிறகு அடுத்த மீட்டிங்கில் வோட்டுக்கு விடுகிறதென்று தலைவரால் ஒத்திவைக்கப்பட்டது.

---

# பத்திரிகையாற் பயனென்ன?

[திருச்செங்கோடு சிவஸ்ரீ தி. நா. அர்த்தநாரீசுவரக்குருக்கள் அவர்கள்]

பத்திரிகையாவது ஆன்ம ஈடேற்றத்துக்குரிய சமயவாய்மைகளையும், உலகியல் அறிவு விருத்திக்கேற்ற விஷயங்களையும், சமாசாரங்களையும் ஆசிரியன் போன்றும் நண்பன் போன்றும் இவையிவை செய்யின் இவையிவை விளையுமென்று நடுநிலைமையோடு போதிப்பதாம்.

இத்தகைய பத்திரிகைகளை வாங்கிப் படியாது வீண் காலக்ஷேபஞ் செய்கின்றவர் சிலர். பத்திரிகைகளாற் பயன் என்ன? வேலையற்றவனே பத்திரிகைகளைப் பிரசுரித்து வெளியிடுகிறான் என்று வீண் வாசகம் பேசித் திரிகின்றவர் சிலர். பத்திரிகை பிரசுரிப்பவனையும் வாங்குகிறவனையும் எந்தெந்த விதமாக அவமானப்படுத்தலாமென்று திரிகின்றோர் சிலர். இவர்கள் செய்யும் காரியங்கள்தாம் எவையெனில் பொய்ச்சத்தியம் செய்தல், பொய்ச்சாக்ஷி சொல்லுதல் முதலாய கருமங்களே. பிரதானமாக நமது சமயப் பத்திரிகைகளே இங்ஙனம் ஆதரிப்பாரற்றுக் கிடக்கின்றன. பிறசமயப் பத்திரிகைகளைப் பாருங்கள். அலைபுரண்டு தட்டுத் தடுமாறியும் நூற்றுக்கணக்கான பத்திரிகைகள் நாடோறும் லக்ஷக்கணக்காகப் பிரசுரிக்கப்பட்டு வருவதைக் காண்கின்றோம். அச்சமயிகள் பத்திரிகைகளைப் பிராண நிலயங்களாகப் பாவித்து அவைகளை வாங்குவதும் ஆதரிப்பதும் விருத்தி செய்வதும் உண்டு.

நம்மவர்களோ எனில், பத்திரிகை என்றால் பதினான்கு காததூரம் ஓடுவார்கள். நம்மவர்க்குப் பத்திரிகையே பரமவிரோதியாம். அதிலும் நம் சமூகப் பிரபுக்கள் சிலர் சுயபாஷா பத்திரிகை—சமயப் பத்திரிகை என்றால் "டாம் நான்சென்ஸ்" என்று உதறித் தள்ளுவார்கள். சிலர் டம்பத்துக்கென்று சில மாசம் கையொப்பஞ் செய்து பத்திரிகைகளைப் பெற்றுக்கொள்ளுவார்கள். சிலர் பெயருக்கே பத்திரிகைகளை வாங்குவார்கள். இப்படியே ஒவ்வோர் காரணங்களைக் கொண்டு பத்திரிகைகளைப் பெற்றுச் சில மாசங்கள் கழிந்த பின்னர் "பத்திரிகை வேண்டாம்; முன்போல் விஷயங்கள் அடங்கவில்லை" என்பர் சிலர். "பத்திராதிபருக்கு முன்போல் ஊக்கம் இல்லாததனால் எனக்குப் பத்திரிகை வேண்டாம்" என்பர் சிலர். மௌனம் சாதித்துப் பத்திரிகைக் கிரயத்துக்குப் 'பில்' வந்த பிறகு சாக்குப்போக்குச் சொல்லுவோர் சிலர். இக்காரணங்கள் பற்றிப் பத்திரிகை வெளியிடுபவருக்குப் பணநஷ்டம் உண்டாவதுடன் ஊக்கமும் குன்றுவதனால் பத்திரிகை விருத்தி குறைந்துவருகிறது.

நம் நாட்டுச் சைவப்பிரபுக்கள் நஞ்சைவசாஸ்திர பரிபாலனம், திட்டைச் சிவநேசன் போன்ற அரிய பத்திரிகைகளை ஆதரிக்க வெளிவருவார்களானால், புண்ணியபூமியாகிய நமது நாடும் "சைவசமயமே சமயம்" என்று சிவாநுபூதிச்செல்வராற் புகழப்பட்ட சைவசமயமும் அதி உன்னத நிலையில் இருக்குமென்பதில் ஆக்ஷேபனையில்லை.

# விழாக்கள்

**ஸ்ரீ சங்கரநாராயண பஜனோத்ஸவம் :**—பிரமாதி வரு மார்கழி மீ 10வ தொடக்கம் 9 நாட்கள் வரை பவானிக்குச் சமீபமான ஆப்பக்கூடல் என்ற திருவாவுகூடலில் பஜனோத்ஸவம் பிரம்மஸ்ரீ A V. சேஷகிரி சாஸ்திரிகளால் நடைபெற்றது; கணேசமஹிமா முதலிய விஷயங்கள் பிரசங்கிக்கப்பட்டன.

**சென்னைமாகாண ஸனாதனதர்ம மகாநாடு :**—இம்மகாநாடு சிதம்பரத்தில் ஆஸ்திகர்களது ஊக்கத்தால் 1939 ம் ஆண்டு டிசம்பர் மீ 28-ம் 29-ம் திகதிகளில் வெகு சிறப்பாய் நடைபெற்றது. மகாநாட்டுத் தலைவரான திவான்பகதூர் வி. மாசிலாமணிப் பிள்ளையவர்கள் 27வ வரவேற்கப்பட்டு நாவலர் வித்தியாசாலையில், மனேஜர் ஸ்ரீ பொன்னம்பலம் பிள்ளையால் மாலையிடப்பெற்று ஆங்கிருந்து மகாநாட்டுப் பந்தலுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அநேக தீர்மானங்கள் நிறைவேறின.

**சைவசித்தாந்த மகாசமாஜம்; குன்றக்குடிச் சைவர் மகாநாடு :**—ஷை மகாநாடு குன்றக்குடியில் சைவத்திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியார் (B. A.) அவர்கள் தலைமையில், 1939 டிசம்பர், 29, 30, 31-ம் திகதிகளில் சிறப்புற நடந்தேறியது.

**அகில இலங்கைச் சைவ மகாநாடு :**—பிரமாதி வரு மார்கழி மீ ௨௦, ௨௧, ௨௨-ம் திகதிகளில் மத்திய இந்துவாலிப சங்கத்தின் ஆதரவில் யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரித் தமிழ்வித்தியாசாலை மண்டபத்தில் நடைபெற்ற இச் சைவ மகாசபை இந்நாட்டுச் சைவநன்மக்களுக்குப் புத்தூக்கத்தைத் தருவதாயிற்று. இதற்குத் தலைமை வகித்த பெருந்தகையார் கோவைச் சைவத்திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியார் (B. A. B. L.) அவர்களாவர். இவர்கள் செந்தமிழ்ச் செல்வர்; வழக்குநெறி பயின்று ஒழுக்கநெறியில் உறைப்புடன் நிற்பவர்; பேரூருறையும் பட்டிப்பெருமான்பாற் பேரன்பு மிக்கவர்; சைவ முப்பெருந்தீக்ஷைபெற்று, அருணூலின்வழி சிவபூசை புரிபவர்; அடியார்பக்தியிற் சிறந்தவர்; பல நூலாசிரியர்; பெரியபுராண உரையாசிரியர்; சைவநூல்களை ஐயந்திரிபறக் கற்றவர்; பன்னிரு திருமுறைகளையும் நியமமாகப் பாராயணம் செய்யும் புண்ணியர்; சைவப்பெரியாரென்றும், சிவஞானச்செல்வரென்றும் சைவப் பெறமக்கள் எல்லாராலும் பாராட்டப்பெறுபவர். இவரைப் போன்ற பெரியோர்களே சைவ மஹாசபைகளில் தலைமைவகிக்கத் தகுந்தவர்கள். இவர்களோடு வந்த ஸ்ரீமத் இராமச்சந்திரம் செட்டியார் அவர்களும் அருங்குணங்கள் அனைத்தும் வாய்க்கப்பெற்றவர். இச்சிறந்த மகாநாட்டைக் கூட்டியவர் மத்திய இந்து வாலிப சங்கத்தினர். அவருள்ளும் அதன் காரியதரிசியாகிய ஸ்ரீ மு. மயில்வாகன உபாத்தியாயரே பேரூக்கம் கொண்டு நின்றவர். இந்த மகாநாடு மேலும் மேலும் விருத்தியாய் ஆண்டுதோறும் நடைபெறவேண்டுமென்று எல்லாம் வல்ல சிவபெருமானைத் தியானிக்கின்றோம்.

# புத்தக விளம்பரம்

| | | ரூ. | அ. | பை |
|---|---|---|---|---|
| 1. | சிவபூசை விளக்கம் | 1 | 8 | 0 |
| 2. | மகோற்சவ சந்திரிகை | 0 | 5 | 0 |
| 3. | பிராசாத தீபவுரை | 0 | 7 | 0 |
| 4. | அநுட்டான அக்வல் உரை | 0 | 1 | 6 |
| 5. | சிராத்த தீபிகை | 0 | 2 | 6 |
| 6. | விநாயக பரத்துவம் | 0 | 7 | 0 |
| 7. | திருவூடல் | 0 | 4 | 0 |
| 8. | அச்சுவேலி சித்திவிநாயகர் ஊஞ்சல் | 0 | 0 | 6 |
| 9. | சிவபூசாவிதி | 0 | 4 | 0 |
| 10. | சைவப் பிரகாசிகை I | 0 | 1 | 6 |
| | ,, II | 0 | 2 | 6 |
| | ,, III | 0 | 3 | 6 |
| | ,, IV | 0 | 5 | 0 |
| | ,, V | 0 | 7 | 0 |
| 11. | திரிபதார்த்த விவேகம் (கிரந்தம்) | 0 | 2 | 6 |
| 12. | கைலாய மாலை | 0 | 6 | 0 |
| 13. | சுப்பிரமணியர் திருப்பெருவடிவம் | 0 | 3 | 0 |
| 14. | மாணிக்கவாசகர் புராண வசனம் | 0 | 10 | 0 |
| 15. | சைவ சித்தாந்த சங்கிரகம் | 0 | 10 | 0 |

ச. கு. வைத்தீசுவரக் குருக்கள்

அச்சுவேலி, யாழ்ப்பாணம்.

The Progressive Printers, Madras.